உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# கோயிற்புராணம்.

கொற்றவன்குடி

## உமாபதிசிவாசாரியார்

அருளிச்செய்தமூலமும்.

சைவாகமசாத்திரபுராணசம்பிரதாய

அபியுக்தரொருவராற் செய்யப்பட்ட

பொழிப்புரையும்

ஆதீனத்துப்பிரதிகளைக்கொண்டு

வித்துவான் - காஞ்சீபுரம்.

**சபாபதிமுதலியாரவர்களால்**

பரிசோதிப்பித்து

படங்களுடன்

**இ - சிங்காரவேலுமுதலியாரால்**

களாநிதி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப் பட்டன.

பிரபவ௵ மாசி௴.

சிவமயம்.

## சருக்க அட்டவணை.



## புத்தகவிளம்பரம்.

சரித்திரப்படங்களோடுகூடிய இப்புத்தகம்வேண்டியவர்கள் கூடலூருக்கடுத்த வண்டிப்பாளையம் கிலஸி - இராமசாமிமுதலியார் வீட்டில் - ள - ள - கி.சாமிநாதமுதலியாரவர்களிடத்திலும், புதுவை ...ழையசாராயக்கிடங்குவீதி - ள - ள - சீநிவாசமுதலியாரவர்களிடத்திலும், பெங்களூரைச சார்ந்த அரசூரில் மைசூர் கம்மீஷனர் ஆபீஸ்ரயிட்டர் - ள - ள - தாங்கி - சபாபதிமுதலியா ரவாகளிடத்திலும், திருநெல்வேலியில இடைக்குடித் தெருவில்-ள-ள-சிதம்பரப்பிள்ளையவர்களிடத்திலும், சென்னை முத்தியாலுபேட்டை பவழக்காரவீதி கிழண்டைவாடையில பிள்ளையார்வீடு-ள-ள-கு-இராமசாமி முதலியாரவர்களிடத்திலும், சென்னை பெத்துநாய்க்கன்பேட்டை ...ங்கசாலைவீதி-உ-வது நெம்பருடையவீட்டில - ள-ள-புங்கத்தூர்-...தசாமிமுதலியார் நாகமணிமுதலியார இவாகளிடத்திலும், கிரயத்...க்குப் பெற்றுக்கொள்ளலாம்.

௨

சிவமயம்

# பிழை திருத்தம்.



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧௧ | ௩ | சோசிறந்த | சீர்சிறந்த |
| ௧௫ | ௫ | ஆனுதிகால | அநாதிகால |
| ௩௯ | ௨௮ | அனெக | அனேக |
| ௪௨ | ௩௦ | தெரிசித் | தரிசித் |
| ௨௧ | ௨௬ | தெவதாரு | தேவதாரு |
| ௫௪ | ௩௫ | அதிட்டித்துதம்பிரா | அதிட்டித்துத்தம்பிரா |
| ௫௭ | ௩௨ | கஞ்சாமல | கஞ்சாமல் |
| ௮௯ | ௧௦ | பவிஷயகாலத்தி | பவிஷயக்கால |
| ௨௫ | ௯ | பவிஷகிருத்திய | பவிஷயக்கிருத்திய |
| ௨௭ | ௮ | சந்நதி | சந்நிதி |
| ௨௯ | ௨௯ | தலையொடாமோ | தலையோடாமோ |
| ௩௨ | ௩௫ | முபல்கன் | முயலகன் |
| ௭௦ | ௪௪ | ரீதறமுலத்தான | ரீதறமூலத்தான |
| ௬௮ | ௩௨ | பலகலாஞ்சார | பலகாலஞ்சார |
| ௧௧௦ | ௧௪ | மொகிதாய | மோகிதராய் |

உ

சிவமயம்

சிவகணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# கோயிற்புராணமூலமும்

## உரையும்.

காப்பு.

பொற்பதப்பொதுவார்புலியூர்புகழ் ... *
சொற்பதப்பொருளாகுவதூயவ ...... *
ரற்பகற்றொழுவாழணிகோபுரக் ...... *
கற்பகத்தனியானைகழல்களே... ... ... *

இதன்பொருள்.

சுத்தாத்மாக்கள் வாதனையால் மயக்க விகற்பமேலிடாமல் இரவும்பகலும் வணங்க விளங்கும் மேலைக்கோபுரமுன்புறத்து வாழ்ந்தருளும் ஒப்பற்றயானைமுகமுள்ள கற்பகவிநாயகருடைய திருவடிகள் கனகமயமாக அழகுள்ள ஞானசபைபொருந்திய பெரும்பற்றப்புலியூரின்மான்மியத்தைப் புகழுஞ் செய்யுட்பதங்கடோறும்பொருளாய் விளங்குவன—என்றவாறு.

### சிதம்பரமான்மியம்

கூறுஞ்செய்யுட்பதங்களுக்குப் பொருளாய் நிகழ்வது

அருளென்பது தேற்றம்.

பொற்பதப் பொருளென்பதற்கு

நடேசமூர்த்தியின் செங்கமலப் பொற்பாதங்களுக்கு இடமாகிய

ஞானசபையெனப் பொருள்கூறினும் அமையும்.

தேவர்கள் வேண்டும்பொருள்களைக் கொடுக்குங்கற்பக

விருக்ஷம்போல் ஈண்டு அடியார்கள்வேண்டும் பொ

ருள்களைப்பாலித்தருள்வதினால் கற்பகவிநாயகரெனக்

காரணப்பெயராயினது.





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# கோயிற்புராணம்

## மூலமுமுரையும்.

## பாயிரம்.

### நடேசர்துதி.

பூங்கமலத்தயனுமலர்ப் புண்டரிககண்ணனுங் *
தாஙகுபலபுவனமுமேற் சகலமுமாயகலாத *
வோஙகுமொளிவெளியேநின் றுலகுதொழநட்டமாடுங் *
தேஙகமழுமபொழிற்றில்லைத் திருசசிற்றம்பலம்போறறி.

### இதன்பொருள்.

பொலிவினையுடைத்தாகிய தாமரை மலர்மீதிலிருக்கும் பிரமனும் தாமரை மலர்போன்ற கண்ணினையுடைய மாயனும் (இவர்களாலே) சிருட்டித்துத் தாங்கப்படுகிற புவனங்களும் இதற்குமேலான புவனங்களும் (மந்திரபதவனனதத்துவ கலாரூபங்களுமாகிய இவைகளை) நீங்காம னிறைந்திருக்கிற மிக்க பிரகாசமானசிவம் * திரோதானநீங்கிநின்று சர்வாத்துமாக்களுங்கண்டு தொழும்படிக்கு நிருத்தஞ்செய்யும் மணங்கமழாநின்ற சோலைகளாற்சூழப்பட்ட தில்லைத் திருச்சிற்றம்பலத்தைப் போறறுகின்றேன்—என்றவாறு. (க)

---

* திரோதானம் - மறைப்பு.

ஆரணங்கண்முடிந்தபதத் தானந்தவொளியுலகிற் ❋
காரணங்கற்பனைகடந்த கருணைதிருவுருவாகிப் ❋
பேரணங்கினுடனாடும் பெரும்பற்றப்புலியூர்சேர் ❋
சீரணங்குமணிமாடத் திருசசிற்றம்பலம்போற்றி. ❋

இ-ள். பாசசாலமுடிந்த சிவபூமியில்ஒழியாதசுகப்பிரகாசமான சிவம் உலகத்திற் றனக்குவேறொரு பிரதானகாரணமும் நிமித்தகாரணமுங் கடந்திருக்கிற காருண்ணியமே திருமேனியாகக்கொண்டு பராயினுடனே நிருத்தஞ்செய்யும் பெரும்பற்றப் புலியூரென்றுபொருந்தின அழகியதிவ்விய இரத்தினங்களினாலே குயிறறிய மாடங்கள்சூழ்ந்த திருச்சிறறம்பலத்தைப போற்றுகின்றேன்—எ-று.

சுகப்பிரகாசமான சிவங் காருண்ணியரூபியாய் பூரணஞானத்தை யதிட்டித்து நிருத்தஞ்செய்யும் புலியூர்ச் சிறறம்பலமெனக்கூட்டுக - பேரணங்கென்றுமிருதததுக் கூறியவதனாற் சத்தியினுடைய விருத்திமேலே யருளிச்செய்கிறார். (௨)

தற்பரமாய்ப்பரபதமாய்த் தாவிலனுபூதியதா ❋
யறபுதமாயாரமுதா யானந்தநிலயவொளிப் ❋
பொற்பினதாய்ப்பிறிவிலதாய்ப் பொருளாகியருளாகுஞ்
சிறபரமாமம்பரமாந் திருசசிற்றம்பலமபோற்றி. ❋

இ-ள். அதிசூக்குமமாய் மேலானபதங்களுக்கு மேலானதாய் குற்றமில்லாத அனுபவசித்தமாதலால் சூக்ஷுமமாய் ஆச்சரியவிருத்தியினாலே பூரணமாய் நிறைந்தவமுதமாய் (திரோதானநீங்கின) ஆநநத நிருத்தப்பிரகாசமாய் பேயத்தைநீக்க மில்லாமையாற் சாந்தியாய் வஸ்துமாத்திரமாதலால் பொருளாகி (ஆலசியமற்று ஆதியநதமுமில்லாமையால) அருளாகும் ஞானச்சொல்லுக்குமேலா மமபரமாகி இப்படியேசொல்லுஞ் சத்திருபமாகிய திருச்சிற்றம்பலத்தைப் போறறுகின்றேன்—எ-று.

சிற்பரமா மம்பரமாமென்பது-சிதம்பரமென் றுகண்டுகொள்க, இதற்கு-ஆகமபிரமாணமுண்டு வருகிறபடி கேட்டறிக. (௩)

வையகமின்புறநின்ற மருமலிபொற்பதம்போற்றி ❋
கையமருநிலைபோற்றி கருணைமுகமலாபோற்றி ❋
மெய்யிலகுமொளிபோற்றி விரவியெனையெடுத்தாண்ட ❋
செய்யதிருவடிபோற்றி திருசசிற்றம்பலம்போற்றி. ❋

இ-ள். வையகத்தோர்க்கு மலபாக சுகபபிராப்தியுண்டாக நின்றருளிய மணங்கமழ்நத பொலிவினையுடைததாகிய திருவடிகளைப் போறறுகிறேன் (இதுசிருட்டி) ஆன்மாககள கனமசீவனத்தில் மிகுதி குறைவறவமைத்தருளிய திருககரத்தைபபோறறுகிறேன், (இது திதி) தரிசித்தமாத்திரத்திலே கரண

பாயிரம்.

சூனியம்பிறப்பிக்குங் காருண்ணியத்தையுடைய திருமுகமண்டலப் பிரசன்னத்தைப்போற்றுகிறேன், (இது சங்காரம்) அருளாகிய திருமேனியில்விளங்குகின்ற ஒளியைப்போற்றுகிறேன், (இது திரோபவம்) கேவலசகலத்திலும் பொருந்தி அவைகளிலாழாமல் என்னையெடுத்தாண்டுகொண்டருளிய சிவந்த திருவடிகளைப்போற்றுகிறேன், (இது அனுக்கிரகம்) ஸ்ரீபரமாகாயமான ஞானசபையைப் போற்றுகின்றேன்—எ-று. (௪)

## சிவகாமியம்மைதுதி.

மன்றின்மணிவிளக்கெனலா மருவுமுகங்கைபோற்றி *
யொன்றியமங்கலநாணி னொளிபோற்றியுலகும்பர் *
சென்றுதொழவருள்சுரக்குஞ் சிவகாமசுந்தரித *
னின்றதிருநிலைபோற்றி நிலவுதிருவடிபோற்றி. *

இ-ள். சிவகாமசுந்தரியின் கனகசபையிலிட்ட இரத்தினதீபம்போலப் பொருந்தின திருமுகமண்டலப் பிரசன்னதனைப்போற்றியும் நித்தியமான திருமங்கலநாணின்பிரகாசத்தைப்போற்றியும தேவராதிகள்வந்துநமஸ்கரிக்க அவர்களிடத்துள்ள திரோபவத்தைநீக்கும் நின்றருளியதிருநிலையைப்போற்றியும் சடசித்துக்களிற் பூரணமாயிருக்கிற ஸ்ரீபாதங்களைப் போற்றுகின்றேன்—எ-று. (௫)

## கற்பகவிநாயகர்துதி.

தன்னேங்குமலரடியுந் தளிரோங்குசாகைகளு *
மின்னேங்குமுகககொம்பும் விரவியகண்மலர்களுமாய் *
மன்னேங்கநடமாடு மன்றேங்குமதிற்கூடபாற் *
பொன்னேங்கன்முன்னேங்கும் பொற்பமர்கற்பகம்போற்றி. *

இ-ள். தனது மேலானசெந்தாமரைமலர்போன்ற ஸ்ரீபாதமும் பல்லவங்களினுஞ்சிறந்த செய்யவொளிமிக்க ஸ்ரீயஸ்தங்களும் ஒளிசிறந்த முகத்திற் கொம்பும் பொருந்திய மூன்று திருக்கண்மலர்களுமாய் (பாசத்தைக்கீழ்ப்படுத்தி) பதியானது நிருத்தஞ்செயயும் கனகசபையைச்சூழ்ந்துயர்ந்த மேலைக் கோபுரத்தின்முன்னே வாழ்நதருளும் அழகுவிளங்கின கறபகப்பிள்ளையாரைப் போறறுகின்றேன்—எ-று.

தன்னேங்குமலரடியும் கற்பகம்போற்றி - தனது பெருக்க வகன்றவடிவையும் துளிர்நிறைந்த பக்கக்கிளைகளையுந் தடித்திலு மொளிமிகுமபடி பணைகளையுந் தேனபொருந்தின மலர்களையுமுடையதாகிய கற்பகவிருட்சமென வேறுமொருபொரு டோன்றியவாறு கண்டுகொள்க. (௬)

## சுப்பிரமண்ணியசுவாமிதுதி.

தேராட்டிக்கயங்காட்டுந் திரண்மாககட்டயமூட்டிப் *
போராட்டிபபுறங்காட்டிப போங்காட்டிறபுலாலகமழு *

நீராட்டிச்சூர்மாட்டி நிகழ்நாட்டிற்புகழ்நாட்டும் *
பேராட்டிசீராட்டும் பிள்ளையார்கழல்போற்றி. *

இ-ள்.தேர்-தேர்களும், ஆள்-காலாள்களும், திக்கயம்-அஷ்டதிக்குகளிலு ம்பொருந்தியயானைகளைப்போல-மேனிப்பொலிவுகாட்டும்- திரள்மா-யானைத் திரள்களும், கட்டுஅயம் - பாகரைப்பொறுத்தகுதிரைகளும், மூட்டி-கூட்டி, போராட்டி-போர்செய்து, புறங்காட்டி-முதுகுகாட்டி, போங்காட்டில்-பகை வர்ஓடும்படியானயுத்தகளத்தில், புலால்கமழும் - புலால்நாற்றம்நாறுகின்ற, நீராட்டி-உதிரப்பிரவாகத்தையுண்டாக்கி,சூர்மாட்டி-சூரபன்மனைக்கொன்று, நிகழ்நாட்டில்-பதினான்குலோகங்களிலும், புகழ்நாட்டும-தனதுகீர்த்தியைநி லைநிறுத்திய, பேராட்டி சீராட்டும் பிள்ளையார்கழல்போற்றி. பார்வதியார் சீராட்டுதலுடன் வளர்த்த சுப்பிரமணியக்கடவுளின் திருவடிகளைப் போற்று கின்றேன்—எ-று.

மூள்வித்தற்கண் மூட்டியென்றாற்போல மாள்வித்தற்கண் மாட்டியெனநி ன்றது, மாட்டியென்றேயெம்மை யென்றார்பிறரும். (எ)

## மூவர்முதலிய அடியார்கள்துதி.

திருஞானசம்பந்தர் செய்யதிருவடிபோற்றி *
யருணாவுக்கரசர்பிரா னலர்கமலபதம்போற்றி *
கருமாளவெமையாளுங் கண்ணுதலோன்வலிந்தாண்ட *
பெருமாள்பூங்கழல்போற்றி பிறங்கியவன்பர்கள்போற்றி.

இ-ள். திருஞானசம்பந்த சுவாமிகளுடைய சிவந்த திருவடிகளைப் போற்றியும், சிவத்தினருள்பெற்ற திருநாவுக்கரசு சுவாமிகளுடைய அலர்நத செந்தாமரைமலர்போன்ற திருவடிகளைப்போற்றியும், சனனமரணதுக்கம் நீ ங்கும்படி ஓரறிவுமில்லாதவெம்மை யாண்டருளின நெற்றிக்கண்ணுள்ள பர மசிவம் மணம்விலக்கி வலியஅடிமைகொண்ட வன்றொண்டராகிய சுந்தரமூ ர்த்திசுவாமிகளினுடைய பொலிவுள்ள திருவடிகளைப்போற்றியும், மற்றுமுள் ள அடியார்களையும்போற்றுகின்றேன்—எ-று. (அ)

## மாணிக்கவாசக சுவாமிகள்துதி.

பேசுபுகழ்வாதவூர்ப் பிறந்துபெருந்துறைககடலுண் *
டாசிலெழிறடித்துயர வஞ்செழுத்தாலதிர்த்தெழுந்து *
தேசமலிதரப்பொதுவார் சிவபோகமிகவிளைவான் *
வாசகமாமாணிக்க மழைபொழிமாமுகில்போற்றி. *

இ - ள். பெரியோர்களாற்சொல்லப்பட்ட புகழையுடைய திருவாதவூ ரிலே பிறந்தருளித் திருப்பெருந்துறையி லானந்தசமுத்திரத்தைப்பருகிப் பா சநீங்கின ஆனமப்பிரகாசம அருளைக்கூடி மிக்குச்செல்லப்பஞ்சாக்ஷரவுச்சரி

ப்பினால் ஆணவமல வாதனையைத்தள்ளி மேலிட்டு (அக்கனகசபையில் நிறைந்திருக்கிற "சிவானந்தமானது) தேசமெங்கும்நிறையும்படி திருவாசகமாகிய மாணிக்கமழையைப்பொழியும் பெரியமுகில்போன்ற திருவாதவூரடிகளைப் போற்றுகின்றேன்—எ-று.

பேசுமறை பொழிமாமுகில்போற்றி சர்வாத்துமாக்களுஞ்சொல்லுதலாற் புகழுடைய வாயுமண்டலத்திலேதோன்றி பெரியபட்டினங்கள் சூழ்ந்த துறையினையுடைய கடலைப்பருகிக் குற்றமிலாத வொளிசிறந்த மின்னைப்பிறங்கிச் சலத்தினுடைய வளமையாகிய வதனாலேமுழக்கமேலிட்டு இவ்வுலகத்தோர் சர்வசம்பன்னராக யாவர்க்கும்பொதுவாகி நிறைந்துநிற்கிற சுத்த போகம்விளையும்வண்ணம் மழைபெய்யு மேகமென வேறுமொருபொருடொனறியவாறுமறிக. இதுவுங் கடவுள்வணக்கமெனக்கொள்க, எங்ஙனமென்னில்வீழ்க தண்புனலென்கின்ற-பிரமாணத்தாலெனக்கொள்க. (௯)

## தில்லை மூவாயிரவர் துதி.

நாவிரவுமறையினராய் நாமிவரிலொருவரொனுந் *
தேவர்கடேவன்செல்வச் செல்வர்களாய்த்திகழ்வேள்வி
பாவுநெறிபலசெய்யும் பான்மையராய்மேன்மையரா *
மூவுலகுந்தொழுமூவா யிரமுனிவரடிபோற்றி. *

இ-ள். நாவிலேயனவரதமும் பொருந்தின வேதத்தையுடையவர்களாயும் இவர்களில் நாமுமொருவரொன் றருளிச்செய்யுந் தேவர்கள்தேவனையே தங்கள் செல்வமாகப்பெற்ற ஐசுவரியத்தையுடையவர்களாயும் விளங்கிய யாகாதிகன்மங்கள்பொருந்திய நெறிகளை வெகுவிதமாகச்செய்யும் பகுதியுடையவர்களாகியும் (பத்திஞான வயிராக்கியங்களினாலே யாவர்க்கும்) மேலானவர்களாயுமிருக்கிற பூமி யந்தரசுவர்க்கத்தோர் நமஸ்கரிக்குந்தில்லையில் மூவாயிரமுனிவர்களுடைய திருவடிகளைப்போற்றுகின்றேன்—எ-று. (௧௦).

## சண்டேசர்முதலிய திருக்கூட்டத்தார் துதி.

தந்தையெனுதிகழ்ந்தபுகழ்ச சண்டேசர்விறறகுமெய்ச் *
சிந்தையராயெல்லையிலாத் திருவேடத்தினராகி *
யெந்தைபிரானருள்வளர்க்கு மியல்பினராய்முயறவங்க *
ளந்தமிலாவடியவர்க டிருக்கூட்டமவைபோற்றி. *

இ-ள். பிதாவென்று அங்கிகரியாமல் சிவத்துரோகங்கண்டு கால்தடிந்த கீர்த்தியையுடைய சண்டேசுரநாயனாரையும், ஞானவீரம்பொருந்திய உண்மையானசித்தத்தை யுடையவர்களும் எண்ணிறந்த திருவேடங்களையுடையவர்களும் எந்தைபிரானுடைய அருளினைவளர்க்கும் இயல்புள்ளவர்களும் செய்கிறதவங்களிலே முடிவில்லாதவர்களுமாயிருக்கிற அடியாரது திருக்கூட்டத்தையும் போற்றுகினறேன்—எ-று.

புகழென்றுமிகுத்துக் கூறியவதனாற் பிரமகத்தியாதிதோடமும் பிதாவைக்கொன்றதோடமுங் குருத்துரோகமுமாகிய பசுபாவஞ் சிவசந்நிதியில்நில்லாமல் அதுவுஞ் சிவபுண்ணியமாய்ச் சாரூப்பியபதமும் சிவாக்ஞையும் அதிகாரமுமுதலானவை கொடுத்தவை கண்டுகொள்க, எல்லையில்லாத் திருவேடமென்பதனாற் சடை முண்டிதம் சிகைமுதலான பலவேடங்களில் முடிவில்லாமைகண்டுகொள்க. (கக)

## அநபாயச்சோழச்சக்ரவர்த்தி துதி.

ஒன்றியசீரிரவிகுல மூவந்தருளியுலகுய்யத்... *
துன்றுபுகழ்த்திருநீற்றுச் சோழனெனமுடிசூடி *
மன்றினடந்தொழுதெல்லை வளர்கனகமயமாக்கி *
வென்றிபுனையநபாயன் விளங்கியபூங்கழல்போற்றி. *

இ - ள். சீர்பொருந்தியசூரியவம்சத்திலே விரும்பித்தோன்றி யருளிச் சர்வாத்மாக்களுமுய்யும்வண்ணம் மிகுந்த சிவகீர்த்தியையுடைய திருநீற்றுச் சோழனென் றபிஷேகநாமமும்பெற்றுக் கனகசபையில் நிருத்தத்தைவணங்கித் திருவம்பலமுந் திருக்கோபுரமுந் திருமண்டபங்களுமற்றுஞ் சூழ்ந்த வெல்லையை-மாற்றுமிக்க கனகசொரூபமாகப்பண்ணித்திக்குவிசயம்பொருந்தின அநபாயச் சக்ரவர்த்தியின் பிரகாசப்பொற்பை யுடைத்தான ஸ்ரீபாதங்களைப் போற்றுகின்றேன்—எ-று. (கஉ)

## அகம்படிமைப்பதி ஞூறுயிரவர் துதி.

மல்குபுகழ்நடராசன் வளர்கோயிலகலாது *
பல்கிளைஞருடனுரிமைப் பணிசெய்யும்பரிவினராய்க் *
கல்விகளின்மிகுமெல்லைக் கருத்தினராய்நிருத்தனருட் *
செல்வமலியகம்படிமைத் திறலினர்தம்பதம்போற்றி *

இ-ள். மிகுத்துச்சொல்லுஞ் சிவகீர்த்தியையுடைய நடேசமூர்த்தியின் சிவதர்மம்வளருந் திருக்கோயிலைநீங்காமல் பலகிளைஞருடனே தங்களுக்கமைத்த ஊழியங்களைப் பரிவுடனேசெய்யும் பத்திமான்களும் கல்விகளினாலே மிகுந்த நிலையானகருத்தை யுடையவர்களும் தம்பிரானுருடைய அருளாகிய சம்பத்துமிகுந்த ஞானவீரத்தை யுடையவர்களுமாகிய திருவகம்படியரான பதிஞூறுயிரவர் திருவடிகளைப் போற்றுகின்றேன்—எ-று. (கங)

## பிறவியைவியந்தது.

மண்ணில்இருவினைக்குடலாய் வானிரயத்துயர்க்குடலா *
யெண்ணிலுடலொழியமுய லிருந்தவத்தாலெழிற்றில்லைப்
புண்ணியமன்றினிலாடும் போதுசெயாநடங்காண *
நண்ணுமுடலிதுவன்றே நமக்குடலாய்நயந்தவுடல். *

இ-ள். பூமியிற்பொருந்தின புண்ணியபாவத்துக்குட்பட்ட பிராரத்த சரீரமாய்ச் சுவர்க்கத்திலும்நரகத்திலும்போய் மீண்டு துக்கப்படும் யாதனு சரீரமாயிருக்கிற எண்ணிறந்த சரீரமொழியப் பண்ணப்பட்ட பெரியநல்வி னையால் அழகுபொருந்திய தில்லைவனஞ்சூழ்ந்த அனுக்கிரகமன்றினில் ஆடுகி ன்ற ஒருதன்மையான ஆனந்தநிருத்தத்தைத் தரிசிக்கப்பொருந்தின இந்த ச்சரீரமன்றோ நமக்குச்சரீரமாகி நம்மளவில்விரும்பியசரீரம்—எ-று.

நமக் குடலென்பதற்கு நமக்குடைமையெனினு மமையும். (கச)

## தலவிசேடத்தையுரைத்தது.

மறந்தாலுமினியிங்கு வாரோமென்றகல்பவர்போற் ... ❋
சிறந்தாரநடமாடுந் திருவாளன்றிருவடிகண் ❋
டிறந்தார்கள்பிறவாத விதிலென்னபயன்வந்து ❋
பிறந்தாலுமிறவாத பேரின்பம்பெறலாமால். ❋

இ-ள். இவ்விடத்து எப்போதும் மறந்தேயாயினும் வரக்கடவமல்லோ மென்று சலித்து அவ்விடத் தகன்றுபோனவரைப்போல அருள்சிறந்து நிறை வுதகநிருத்தஞ்செய்யுந் திருவாளனது ஸ்ரீபாதநதரிசித்துச்சிவபூமியிற்சென் றவர்கள் பிறவாநெறியிருககு மிதில் மிகுந்தபிரயோசனமேது சிதம்பரத் திலே வந்துபிறநதாலு மொழியாத பேரின்பம்பெறுவது நிச்சயமாதலால்.

இது சிதம்பரத்திற்சநித்த வானமாக்களுக்கு முத்தியுறுதியென்றமை க ண்டுகொள்க. (யரு)

காதமருங்கொடுங்குழையான் கரத்தமருங்கொடுங்குழையான் ❋
பாதமுறவளைந்திரவும் பகலுமுறவளைந்திரவும் ❋
பேதமறவுடன்றீரும் பிணிபிறவியுடன்றீரு ❋
மோதலுறுமருந்தில்லை யொழியவொருமருந்தில்லை. ❋

இ - ள். திருச்செவியிறபொருநதின-கொடுங்குழையான்-வளைநத சங்க க்குழையை யுடையவனும, கரத்திலே மருங்கொடுங்கின-உழையான்-மானக ண்றையுடைவனும, ஸ்ரீபாததநிலே-உறவளைநது-செனனியுறவணங்கி, இருபோ தும், உறவுஅளைநது-அனபிலேமூழகி, வேண்டினவரம் - இரவும்-இரவுங்கள், இரண்டறவினறு வெகுண்டு குணஙகளை-ஈரும-அரியும், பிணியும் பிறவியும் உ டனே-தீரும்-தீரும், வேதாகமசாத்திரங்களும் நிச்சயித்தறகரிதாகும் இந்தத் தில்லையெனனும் ஸ்தலம் நீஙகலாக வேறொருமருநதுமில்லை—எ-று. (கசூ)

பொன்றிகழ்பங்கயமூள்கிப் புனிதனபங்கயமூள்கிச் ❋
சென்றுதொழககருததுடையாரசிலரொழியககருத்துடையா ❋
ரொன்றுமுளத்திருககூத்தை யுருவொழிக்குந்திருக்கூத்தை ❋
மன்றமரப்பணியீரோன் மருவுமரப்பணியீரே. ❋

இ - ள். பொலிவுவிளங்கும்அழகிய பொற்றாமரையில்மூழ்கி நிர்மலனா கிய நடேசமூர்த்தி திருவடித்தாமரையை - ஊள்கி - தியானம்பண்ணி, (விக ற்பமறச்சென்று) ஸ்ரீபாதந்தரிசிக்கக்கருத்துடையாராகிய சித்தபாகமுடைய சிலரொழிய மற்றொருவரும் - கருத்துடையார் - கருவைத்துடைக்கமாட் டார்கள் ஆன்மாக்களுக்குச் சகசமாய்ப் பொய்யை மெய்யாகத்திருப்பும் மலமும் ஊத்தையாகியகன்மமும் உருவாகியமாயையும் இல்லையாகச்செய் யும் ஆநந்தத்திருக்கூத்தைச் சிதம்பரத்திலேதரிசித்தும் வணங்கீராகில் பொ ருந்தினமரப்பாவைக்கொப்பீர்—எ-று.

மூழ்கியென்றது ழகாரம் ளகாரமாய் மருவியது, உள்கியெனற்பாலது ஊள்கியெனநீட்டல் விகாரமாயிற்று. (கஎ)

பொருவிலருணெறிவாழ்க புரைநெறிகண்மிகவாழ்க *
வரைவிறிருத்தொண்டரணி வளர்கதிருத்தொண்டரணி *
யருள்விரவக்கற்றோர்க்கு மடர்புலன்போக்கற்றோர்க்கு *
மருவுபுகலம்புலியூர் மாடமலியம்புலியூர். *

இ-ள். ஒப்பில்லாத கிருபையினையுடைய சைவமார்க்கம் வாழ்வதாக, குற்றமிகுந்த லோகாயதன் புத்தன் சமணன் மீமாங்கிசன் மாயாவாதி பாஞ்சராத்திரிமுதலான கபடமார்க்கம் மிகஆழ்க - மிகவுங்கீழ்ப்படுவதாக, வரைவில், நவகண்டமாகவரைந்த வில்வடிவாக-திருத்து-திருத்தப்பட்ட ஒள் தரணி நல்லபூமியில் திருத்தொண்டர் வர்க்கந்தழைப்பதாக, திருவருள் பொருந்தும்படி கற்றோர்க்கும் குருமுன்னிலையில் கற்றுணர்ந்தவர்களில்-போ க்குஅற்றோர்க்கும் - குற்றமில்லாத பசுவாத்துமாக்களுக்கும் பொருந்திய புகலிடமாவது-சந்திரன் தவழ்கிற மாடகூடங்கள்நிறைந்த அழகியபுலியூர்.

இரும்பொத்துச்சிறிதிடமு மின்றெனக்கின்றருளாலே *
சுரும்புற்றநறையிதழித் தொடைமுடியோனமரர்தொழக் *
கரும்புற்றவரவாடக் காரிகையினுடனாடும் *
பெரும்பற்றப்புலியூரா யிருந்ததுளம்பெரிதாயே. *

இ-ள். எனக்கு இதற்குமுன் என்மனமானது இரும்பையொத்துச் சிறிது புரையுமற்று இருக்கும் இப்போது அருளினாலே வண்டமர்ந்த தேன்நிறைந்த கொன்றைமாலையணிந்த சடாமகுடமுள்ள நடேசமூர்த்தி அமரர்வணங்கப் பெரியபுற்றின் அரவாடக் காளியினுடனே நிருத்தஞ்செய்யும் பெரிய பெரு ம்பற்றப் புலியூராயிருந்ததுமிக—எ-று.

பெரும்பற்றப் புலியூரென்றது ஆன்மாக்களுடைய உட்பற்றுப் புறப்பற்று மிருக்கின்ற காரணங்கள் சூனியம் பிறந்தவிடத்திலும் ஞானப்பற்றாய்நிற்ற லால் ஞானசபையாகிய புலியூரை அந்தப் பெரும்பற்றப்புலியூரென்றார், பெ ரும்பற்றெனநிறுத்தி அ-என்கிறசுட்டை இடையிட்டு ஒற்றுவருவித்துப் புலி யூரென வருமொழிசெய்து பெரும்பற்றப் புலியூரென்றமை கண்டுகொள்க.()

தேசமலிபொதுஞானச் செவ்வொளியுந்திகழ்பதியா
மீசனதுநடத்தொழிலு மிலங்குபல்வுயிர்த்தொகையும்
பாசமுமஙகதுகழியப பண்ணுந்திருவெண்ணீறு
மாசிறிருவெழுத்தஞ்சு மநாதியிவையாறுக.

இ-ள். சிவபூமியிலேதழைத்த சுத்தஞானத்தினுடைய செம்பொருந்தின வொளியும், விளங்குகின்ற பதியாகிய பரமேசுரனுடைய பஞ்சகிருத்தியமும், விளங்கிய சாவான்மாக்களும், ஆணவமுதலான பஞ்சபாசமும் அவ்விடததான்மாக்களை மேலிட்டுத்தன்வசமாக்கிநின்ற பாசத்தை நீங்கப் பண்ணுகிற திருவெணணீறும், திரோதானங்கடந்த அருளஞ்செழுத்தும், இவை யாறும்அநாதியாம்—எ-று. (உ0)

கற்பங்கடொறுநடஞ்செய கழலடைந்தோர்கணிப்பிலர்தஞ்
சிற்பங்கடரும்புகழுஞ் சென்றனவிசசெலகாலத
தறபஙகொடுத்திக்குமிறை யருடருமென்றனரொன்றா
சொறபந்தமுறுமனமே துணையாகததொடஙகுதலும்.

இ-ள. கறபங்கடோறும் (அநுக்கிரக கிருத்தியத்திலேபொருந்தி) ஆநாதகிருத்தஞ்செயயும் திருவடிகளிறபொருநதினவாகள் அளவிலா, தமது எண்ணிகைக்குப் பிரமாணமாகக் கற்பங்டோறும் வகுத்துவகுத்துச்சொல்லப்பட்ட ஆகமபபிரமாணமாகிய புராணஙகளு மிறநதுபோயின, இந்தக் கலியுகவர்த்தமானகாலத்தில அற்பார்த்தமான துதிக்கும் பரமேசுவரன் அநுக்கிரகிததருளுவனெனறு வேதாகமம்போன்றவாகளருளினார்கள். என்று பொருநதியசொல்லை அருளாறபொருநதின எனதுமன்மானதே யெனக்குத் துணையாகச் சிதமபரமானமியத்தைத் துதிசெயயத்தொடங்குதலும்—எ-று.

ஆராதமனமினிய வாநந்தநடததளவுஞ
சாராததன்மையினாற் றருமொழிக்குசசொறபடுத்த
வாராதென்றறிந்தாலு மறறதுகடபுலப்படலா
லோராதபேராசை யொருககாலுமுலவாதால்.

இ-ள. பூரணஞானத்தைப்பொருநதாததாகியமனமானது ஆநந்தநிருத்தமளவாகச்செலல வியாததியிலலாத தனமையினாலே அநத ஆநந்தநிருத்தமான அருத்தத்துக்குத்தக்க சுலோகத்துக்குச்சொற்செய்யவராதென்பது ஆகமசாஸதிர சமபிரதாய வனுபவங்களினாலேயறிநதாலும் அநத ஆநந்தநிருத்தமானது பதஞ்சலிமாகாருஷிக்கு அருளின வரபபிர சாதத்தினாலே திஷ்டிகோசரமாதலால் விசாரஹீனமான மிகுநத ஆசை ஒருககாலுமொழியாததலா னெனசெயவோம்—எ-று.

காதரமார்தருமனமே கமலமலரயனல்லை
சீதரமாயனுமல்லை சிவனுமனற்றிரளலலன்

நீதரமாவருளுடையை நிலைகலங்கேலினிமன்றி *
லாதரமாதுடனுடு மண்டனடங்கண்டனையால். *

இ-ள். அச்சமிகுந்தமனமே நீ கமலமீதினிலிருக்கிற அயனுமல்லை, பூமகளைமார்பிற்றரிக்கும் அரியுமல்லை, சிதம்பரமூர்த்தியோ அவர்களாற் பறந்தும் இடந்துங்காண்பரிய சோதிசொரூபியல்லன் நீஅவர்களிருவரினு மேலான அருளுடையையாதலால் நிலைகலங்காதே, அதெங்ஙனமென்றுகேள் கனகசபையில் விரும்பின அருட்சத்தியைப்பொருந்தி ஆநந்தநிருத்தஞ்செய்யுஞ் சிவனுடையநிருத்தங் கண்டனையாதலால்—எ-று. (௨௩)

இதுசித்தசமாதானம்.

## மேல்புராணவரலாறுகூறுகின்றது.

நாதனருள்பிரியாத நந்திதரச்சனற்குமரன் *
வேதவியாதனுக்களிக்க மேன்மையெல்லாமவன்விளங்கிச் *
சூதமுனிதனக்குதவச் சோபானவகைதொகுத்த *
மூதறிவாலவன்மொழிந்த புராணமவைமூவாறில். *

இ-ள். ஸ்ரீநீலகண்ட பரமேசுவரனருளிச்செய்த பதினெண்புராண அர்த்தங்களை அவருடைய பிரதானசிஷரான நந்தீசுவரர் சனற்குமாரபகவானுக்கருளிச்செய்ய அவர் தம்முடையபிரதானசிஷரான வேதவியாசருக்கருளிச்செய்ய அவர் நனருகவிசாரணைசெய்து தம்முடைய பிரதானசிஷரான சூதமுனிவருக்குஅநுக்கிரங்க்க இப்படிக்குச்சோபானபாரம் பரியமாகவந்த சுருக்கமான அருத்தத்தைத்தம்முடைய முதிர்ந்தவறிவினாலே விரித்துரைத்த பதினெண்புராணத்தில்.

சோபான பாரம்பரியமென்பது ஒருபடிவிட்டு ஒருபடியேறுதல். (௨௪)

நலமலியுந்திருத்தில்லை நடராசன்புகழ்நவிலும் *
பலகதியில்யானறிந்த படிபடியிற்பயிருரிச் *
செலவினர்போலெவ்வழியுஞ் செவ்வழியாச்சிறிதியங்கித் *
தொலைவில்பெரும்பதியணையத் துணிந்தருளேதுணையாக. *

இ-ள். நன்மைமிகுந்திருக்குந் தில்லைவனத்து நிருத்தராசனது சிதம்பரமான்மியத்தைச்சொல்லும் வெகுவிதமார்க்கத்தில் யானறிந்துகொண்டபடி எப்படியென்னில், பூமியில்முன்னடந்திருக்கும்வழியேநடக்குமவரைப்போல் சுற்றுவழியெல்லாஞ்செவ்வைவழியாகத்துணிந்து அருளைக்கூடிச்சிறிது தள்ளிஎடுத்துக்கொண்டவிசாரணையில் போக்குவரத்துபண்ணிச் சிவபூமியைக் கண்டுகொண்டேன்—எ-று.

மங்களமார்திருமன்றின் மன்னனடம்வளர்புலிக்காற் *
பங்கமில்சீரருண்முனிக்கும் பதஞ்சலிக்கும்பணிந்தருளிச் *
சிங்கவருமன்றனக்குந் தெரிவித்துத்திருவருளா *
லங்கவரைப்பணிகொண்ட வடைவறிந்தபடிபுகல்வாம். *

இ-ள். மங்களநிறைந்த கனகசபாபதி ஆனந்தநிருத்தத்தை அருள்வளரா நின்றகுற்றமில்லாத சீர்சிறந்த வியாக்கிரபாதமுனிக்கும் பதஞ்சலிமுனிக்குந் தரிசிப்பித்தருளி இரணியவன்மனுக்கும் புலப்படுத்திக்காருண்ணியத்தினாலே யிந்த மூவரையுஞ் சேர்வைகொண்ட அடைவறிந்தபடி சொல்லுகிறேன. ()

சொல்லோடும்பொருளோடுந் துணிவுடையோர்சொற்றனரொன் ❋
றெல்லோருங்கொளவெட்டு மிரண்டுமறியாதோமும் ❋
வல்லோர்போலொருபனுவன் மதித்தோமானவைபொறுக்க ❋
நலலோரையிரந்தோமே னகையாமென்றுரையாமால். ❋

இ-ள். சொல்லுடனும் பொருளுடனு முறுதியுமுடைய புலவர்சொன்னார்கள் என்றுகேட்ட ஞாதாககளெல்லோருங் கைககொள்ளும்படிக்கு எட்டும்இரண்டும் பத்தென்பதற்கு விபரமில்லாத யாமும் கவிவல்லவர்களைப் போலே யொருபனுவல் சொன்னதாகப்பண்ணிச் செய்யுட்குற்றம்பொறுக்கப் பெரியோரை வேண்டிக்கொண்டோமாகில் கேட்டவர்களுக்கு நகையையுண்டாக்குமென்று உரைத்தோமிலலை—எ-று.

இதிலெலலோருங் கொள எட்டு மிரண்டுமென்பதற்கு எட்டானசொல்லு மிரண்டானபொருளுமென்று பொருந்துஞ்-சொற்பொருளாமென்றும் அகார உகாரமென்றுந் தசகாரிய தசாவத்தையென்றும் சொல்லுவாருமுளர், இதிற சொற்பொருளிலக்கண மோராதோர்க்குங் கவிவருதலானும், அகார உகாரமுதலானவை சிறுபான்மையான சம்பிரதாயவர்த்தமாகலானும், அவையடக்கத்துக்குப பொருந்தாமையால் மறுககப்பட்டது, எட்டானசொல்லென்பது-நேமிநாதத்தில்-ஏறற திணையிரண்டும் பாலைநது மேழ்வழுவும், வேற்றுமையெட்டுந தொகையாறும், மாற்றரிய, மூன்றிடமுங்காலங்கண்மூன்று மிரண்டிடத்தாற, ரோன்றவுரைப்பதாஞ சொல், இரண்டாகியபொருள் அகபபொருள் புறப்பொருள். (உஎ)

என்றுமருந்தவமுயல வினிவேண்டாயாவர்க்கும் ❋
பொன்றுமுடல்கன்றுமுனிப் பொறகோயில்புகழ்மாலை ❋
சென்றுசெவிப்புலன்புகுமேற் றீவினைகளவைதீாககு ❋
மன்றினருளபுரிவிககுந் தெரிவிக்குமலர்பபாதம். ❋

இ-ள். இன்றுமுதல் பெரியதவசுகளை யாவர்க்கும்பண்ணவேண்டுவதிலலை நீாக்குமிழிபோலஇறக்குஞ சரீரம் பார்த்துகண் மாறுதறகுமுன்னே இநதச்சிதம்பரமான்மியஞ்செவிகளுக்குவிடயமாகுமாகில் அக்குறறமுள்ள புண்ணியபாவங்கள் தராசுமுள்ளுபபோல் சமப்படுத்தும் மலபாகத்தைபபண்ணி அருளைப்பிரகாசிப்பித்து வியாபகமாயிருக்கிற ஞேயத்திலேயழுத்துவிக்கும்.

இதனுள் கடவுள்வணககம

திருவிருத்தம்-உ௦-பாயிரம்-அ.

ஆ திருவிருத்தம்-உஅ.

# வியாக்கிரபாதச்சருக்கம்.

மன்னுமருந்தபோதனரின் மருவுமத்தியந்தினனு ❋
முன்னரியதிருமுனிபா லோங்குலகந்துயர்நீங்கப் ❋
பன்னரியசிவஞானம் பத்திதரும்பான்மைதகத் ❋
தன்னிகரிறிருவருளா லவதரித்தானொருதநயன். ❋

இ-ள். நிலைபெற்ற பெரிய பிரமவிருஷிகளிற்பொருந்திய மத்தியந்தின னென்றுபேரையுடைய உன்னுதற்கரிதாகிய மகாவிருஷியினிடத்திலேபெரிய சர்வலோகங்களும் பிறவித்துன்பம் நீங்கும்வண்ணம் திரிவிதகரணங்களுங் கடந்த சிவனிடத்தில் பத்திஞான வயிராக்கியத்திலுண்டான பகுதிமிகத் தன க்கொப்பில்லாத கடாக்ஷத்தினாலே ஒருகுமாரன் திருவவதாரஞ்செய்தான.

தனிப்புதல்வன்றனையணைத்துத் தகவுசிமோந்துசடங் ❋
கனைத்துமடைவினியற்றி யருமறைநூலவைகொடுத்து ❋
மனத்துணையாந்திருநாம மருவுநெறியுபதேசித் ❋
தினிச்செயவேண்டுவதென்கொ லெனமொழிந்தானெழின்முனிவன். ❋

இ-ள். நல்லொழுக்கமுள்ள மத்தியந்தினமுனிவர் ஒப்பில்லாதகுமாரனை த்தழுவிக்கொண்டு இலக்ஷணமுள்ள உச்சியைமோந்து உபநயனமுடிவாயுள் ள கன்மங்களனைத்தும்பண்ணி பதினாலுவித்தையையுங்கற்பித்து உயிர்த்துணை யாகிய ஸ்ரீ பஞ்சாக்கரமுறைமையிலே பொருந்துமபடி உபதேசித்துக்குமார னைப்பார்த்து இனிநா முனக்குச்செய்யு முபகாரமேதென்றுகேட்டருளினார்.

பதினாலுவித்தையாவது ஆறங்கம் நால்வேதம் மீமாஞ்சை புராணம் தருக் கம் தருமசாத்திரம் எனபவைகளாம். (௨)

இந்தவகைசசிவனருளா லிரவியெதிர்மணியுமிழ ❋
வந்தவனலெனவிளங்கு மழமுனிவனடி வணங்கித் ❋
தந்திரமுன்புகலுமருந் தவநதொகையிற்றலையான ❋
வந்தமின்மாதவமடியேற்கருளு கெனவுரைசெய்தான். ❋

இ-ள். இந்தக்கிரமத்தினால் கன்மம் சமமாய் அருள்மேலிட ஆதித்தன்சந் நிதியில் சூரியகாந்தஞ் சுவலிக்குமாறுபோல் (ஞானஉதயமான) மழமுனி பிதாவை நமஸ்கரித்து வேதாகமம் முன்சொன்ன அரியதவசுகளில் மேலானத வசு அடியேனுக்கு அருளிச்செய்யவேண்டும் என்றுசொன்னான்—எ-று. (௩)

தவமெவையுமுணர்ந்தமுனி தநயன்முகமிகநோக்கிப் ❋
புவனமலிபோகங்கள் பொருந்துமருந்தவமபுரிந்தாற ❋
சிவகதியுமிதுவன்று சிவார்ச்சனமாச்சனமாகிற ❋
பவமகலுமபரபோகம பெறலாகுமெனப்பகர்ந்தான். ❋

இ - ள். எல்லாத்தவசுகளுமறிந்த அந்தமுனிவர் குமாரனுடைய திருமுகத்தைமிகுந்த அனுக்கிரகத்தாலேபார்த்து அருளிச்செய்வார், உலகங்களில் அரியதவசுகள்பண்ணினால் மிகுதியான சுவர்க்காதிபோகங்கள் பொருந்தும். இது சிவலோகத்துக்குப்போம் வழிஎங்ஙனமென்னில், சிவபூசையை அர்ச்சிப்பையானால் சனனம்விடும் பரலோகமும்சித்திக்குமென்று அனுக்கிரகித்தார்—எ-று. (௪)

சொன்னமொழிகொண்டிறைவன் றோன்றிமகிழ்ந்துளதானம் ❋
பின்னுமெனமழமுனிக்குப் பார்முழுதும்பரப்பிரம ❋
சன்னிதிகாணதுகாணுந் தவக்குறைகாணென்றாலு ❋
மன்னிடமாய்நிகழுமிட முளதென்றான்மாமுனிவன். ❋

இ - ள். குருவுபதேசத்தையுட்கொண்டு பரமேஸ்வரன் திரோபவியாமல் பிரகாசித்து ஆநந்தசத்தியுடனே யெழுந்தருளியிருக்கிற புண்ணியஸ்தல மருளிச்செய்யுமென இருநூற்றிருபத்துநாலு புவனங்களுஞ் சிவசந்நிதியாம் (அப்படியன்றென்று) காணும்படிசெய்த தவசுகளில் குறைவாகிலும் (சரீரமுழுதும் ஆன்மா வியாபியாய்நின்றாலும்) அந்த ஆன்மாஇருக்குமிடம்ஒன்று உண்டாயிருப்பதுபோல் சிவன் எங்குநிறைந்துநின்றாலும் சிவனுக்கதிட்டானமாய்விளங்கும் புண்ணியஸ்தலமு முளதென்று அம்முனிவர் அருளிச்செய்தார்—எ-று. அதேதென்னில். (௫)

பாருயிர்கட்குபகரித்துப் பரப்பினடுப்படுவதொரு ❋
மேருகிரியும்புடைசூழ் வெற்புமவற்றிடைநாடு ❋
மாருயிர்கள்பயனருந்து மமருலகாமெனக்கழித்தான் ❋
சீருலவுநாறுவளர் செறுவெனலாருசிறுமையுற. ❋

இ - ள். பதினாலுலோகத்திலுமுள்ள ஆன்மாக்களுக்குச்சலனம்வாராமல் பூமிக்குநடுவே நிற்கிற மகாமேருவும் அதன்பக்கஞ்சூழ்ந்த குலபருப்பதங்களும் அவைகளின் நடுவிலிருக்கும் இராச்சியங்களும் ஆன்மாக்களிந்தப்பூமியிலே யார்ச்சித்தகன்மபலம் அனுபவிக்கிற சுவர்க்கத்துக்கொக்கும், அதிற்கன்மபலம் நாற்றங்கால் விளைவுக்கொக்குமெனக் கழித்தான்சிவன—எ-று.

எத்தகையபோகங்க ளெவற்றினுக்குங்காரணமாய் ❋
வைத்தபடியிடம்போதா வகைநெருங்குமன்னுயிர்கண் ❋
முத்திபெறததிருவுள்ள முகிழ்த்தபெருங்கருணையினா ❋
லத்தனுமித்தலநண்ணி யலகிலிடங்கைக்கொண்டான். ❋

இ-ள். எல்லாப் பெருமையுமுடைய போகபூமியான சுவர்க்காதிபத முதலான நரகாதி யெவைகளிலும் காரணமாகவைத்த கன்மபூமி இடம் போதாசபடியாலே ஒன்றுக்கொன்று நெருங்கிநிற்கிற எண்ணிறந்த ஆன்மாக்களும சிவ புண்ணியத்தினாலே கன்மசாமியசத்திநிபாதமலபாகமாய

முத்திபெறத் திருவுள்ளத்தில்குறித்த பெரிய கிருபாசத்தியையதிட்டித்துப் பரமேசுவரனும் அந்தக் கன்மபூமியைப்பொருந்தி எண்ணிறந்த திருப்ப டைவீடு இடமாகக்கொண்டிருந்தான்—எ-று.

இனி இதிலும் அதிகமருளிச் செய்கிறர். திருப்படைவீடென்பதுஆலயம்.

ஞாலத்தாயிரகோடிநற்றனமுளவவற்றி ✻
னேலத்தானலமார விடங்கொண்டவெழிற்றில்லை ✻
மூலத்தானத்தொளியாய் முளைத்தெழுந்தசிவலிங்கக் ✻
கோலத்தானின்பூசை கொள்வானென்றுரைசெய்து. ✻

இ-ள். இந்தக் கன்மபூமியிலெண்ணிறந்த திருப்படைவீட்டில் ஆயிரங்கோடி புண்ணியஸ்தலமுண்டு இந்தத்தலங்களிலாநந்தநிருத்தஞ்செய்யப் பொருந்தின தில்லைவனத்து ஆலடியில் பிரகாசமான பாதாளத்தின்கீழ்சொல்லிறந்த சிவபூமியிலேநின்றும் குறிதோன்றின சிவலிங்கக்கோலத்தான் நினது பூசைகொள்ளு மவனென வாசகதீக்ஷைபண்ணினர்-எ-று. (அ)

திருநீறுநுதல்சேர்த்தித் திகழுச்சிதனைமோந்தெங் ✻
கருநீறுபடவுதித்த காளையெனவணைத்துவிழி ✻
தருநீர்மத்தியந்தினனுந் தந்தையைவந்தனைசெய்து ✻
வெருநீர்மையன்னையையு மடிபணிந்துவிடைகொண்டான். ✻

இ-ள். நெற்றியிலே திருநீறுசாத்திப் புத்திரவாஞ்சையாலே உச்சியை மோந்து எமதுகருவாகியபாசம் நீறுபட்டுப் போமபடிசனித்த பிள்ளையென்று ஆலிங்கனம்பண்ணி இந்தப்பிள்ளையை நீங்குகிறோமேயென்று விழிநீர்தரவிருக்கிற பிதாவாகியமத்தியந்தினமாமுனியையு நமஸ்கரித்து பிள்ளைநீங்குமேனென்கிற பயத்தையுடைய மாதாவையும் நமஸ்கரித்து அனுமதிபெற்றான்.

வேறு.

மண்டானிடர்தீர்வகையாலருளால் வருவானிருளார்மகராலயநீர் ✻
தண்டாரகைபோற்றரளம்புரளத் தள்ளுந்தடமாடுயர்தில்லைவனத் ✻
தண்டாதிபனுமமதேதுணையா வரியுங்கரியுந்திரியுஞ்சரியுங் ✻
கண்டானுழையாவுயர்கானமுமுன் காணுதனகண்டுகடந்தனனே. ✻

இ-ள். பூலோகம் பிறவித்துன்பநீங்கும்படி அருளினாலே தெற்குநோக்கிவருகின்றவன் கருங்கடற்றரங்கநீர் குளிர்ந்த தாரகைகளைப்போல் முத்துக்களைவாரியொதுக்கும் கரைப்புறஞ்சூழும் பெரிய தில்லைவனத்து அண்டர்நாயகனது பஞ்சாக்கரமே வழித்துணையாகச் சிங்கமும் யானையும் சஞ்சரிக்கும்வழியும் கண்ணுக்கு நுழையவொண்ணாத இருள்செறிந்துயர்ந்தகானமும் முன்காணாதவையெல்லாத்தையுங்கண்டு நீங்கினான்—எ-று. (கo)

மொழியும்மொழியும்பரிசொன்றிலதாமுன்னுன்மறையோதமுழங்கியகான், வழியும்வழியும்மதுவார்புதுவீ வாசந்தூவிசியவார்கு

வளைக், கழியுங்கழியும்படிவந்தலர்பொற்கமலங் கண்மலங்களையுங்க யநீர், பொழியும்விழியும்மனமுங்குளிரப் புதுமாமுனிகண்டுபுகழ் ந்தனனே. ✱

இ-ள். ஆனுதிகாலத்திலேதொடங்கி வேதாகமங்களும் வாக்குக்கெட்டா தென்றொழியாமல் முழங்கிக் கூப்பிடும்வனமார்க்கமும் ஒழுகுந்தேனை நிறை யப்பருகின புதியவண்டுகளும் மணம்பொருந்திவீசிய நீளியநீலோற்பலமலர் ந்தகழியும் நீங்கும்படிவந்துஅலர்ந்த பொற்றாமரைகளையும் பாசமறுக்குந் தி ருக்குளத்தையும் நீர்பொழியுங் கண்ணும்மனமுங் களிகூரக்கண்டு தோத்தி ரம்பண்ணினன் புதியமுனி—எ-று.

முற்பிறப்பில் இந்தத்தலத்தைத் தரிசித்தவரல்லர்-தரிசித்திருந்தால் முத்தி யடையவேண்டுமேயல்லது மறுசன்மம்வாராது இப்போது மறுசன்மம்கொ ண்டுவந்து தரிசித்தாராதலால் புதியமுனியென்றார்.

சீரார்தருபொய்கைவணங்கியதன்றென்பான்மிகுமன்பொடுசே ர்சரியே, பேராவகைசெல்லவொராலநிழற்பிரியாதபிரானெதிர்நே ர்படமுற், பாராரவிழுந்துமெழுந்தும்விழிப்பயின்மாரிபொழிந்தும ழிந்துமொழிந், தாராவமுதேயெனையாளுடையா யறிவேயெனவோ தினனாரணமே. ✱

இ - ள். வைபவமிகுந்த புண்டரீகப் பொய்கையைவணங்கி அதற்குத் தெற்காக மிகுந்த அன்புதுணையாகப்பொருநதின சரிவழியே விலங்காமற்செ ல்லுமளவில் ஒரு ஆலடிநிழலைப்பிரியாத ஸ்ரீ மூலத்தானமுடைய தம்பிரானர் முன்னே வெளிப்படத் திருமுன்னே யேகாங்கமாகவிழுநது தெண்டம்பண் ணியும் எழுந்திருநதும் விழியிலே பயிலப்படாநின்ற நீர் மேகம்போலப் பொ ழியாநின்றும் தன்னைமிழநதுந் தோத்திரங்கள்மொழிந்தும் தெவிட்டாவமு தே யென்னை யடிமையாக வுடையவனே யென் னறிவேயென்றுவேதங்களா லே தோத்திரம்பண்ணினன்—எ-று. (கஉ)

முன்னுள்பதியாயினுமேதகுசீர் மூலப்பதியாளுடைமுக் கண னே, பொன்னார்தருபொய்கையுடைப்புனிதாபொடிசேர்வடிவேமு டிவேயடியே, னென்னுதரவார்தருபூசைகொள்வாயினியாய்முனியா தெனவோதிமடுப், பன்னுண்மலர்கொய்ததின்மூழ்கியருட்பாதங்க ளணைந்துபணிந்தனனே. ✱

இ - ள். அனுதிகாலத்திலேதொடங்கிப் பெத்தமுத்தி யிரண்டினுஞ் சுதந் தரத்தினாலே யாண்டருளிய பதியேயாயினும் பின்னையுஞ் சீரிய வுனக்கொத் திருக்கிற மூலமானபதியை யாண்டுகொண்டருளிய மூன்றுகண்ணினையுடை யோனே, இதுவுமன்றி யுனக்கு மேலுமருளுமாயிருக்கிற புண்டரீகப்பொய் கையையுடைய புனிதனே, இயல்பாகவே விபூதிதூளிதஞ் சேர்ந்த திருமேனி யையுடையவனே, எல்லாப்பொருளுக்கும்முடிவே பேதையாகிய அடியேனு

டைய ஆசையிருந்த அருச்சனையைக் கொண்டருளுவாய் யாவற்கு மினியா னே நீதென்று திரோபவியாமற் கொண்டருளென்று திருக்குளத்திலேமூழ்கி அதிற் புதிதாகமலர்ந்த பலபூக்களையும் பொற்றாமரைப்பூவையுமெடுத்துவந்து அருட்பாதங்களையருச்சித்தான்—எ-று. (கந)

தடமாமலர்கொண்டுவணங்கியருந் தவமாமுனிதில்லைவனச்ச ரியே, குடபாலணைவான்மணமாமலருங்குளமுங்கரையுந்தளமுங்கு றுகித், திடமார்தருவே நிழலாவெழிலார் சிவலிங்கமிருத்தியருத்தி யொடங், கிடமாகவிரண்டிடமும்பணிவுற்றிறையே துணையாகவிரு ந்தமர்நாள். ❋

இ-ள். பெரிதாயலர்ந்த திவ்வியதாமரை மலர்கொண்டு பூசித்துப்பெரிய அருணீகைதமுனி தில்லைவனத்தில் மேற்காகவொரு சரிவழியேசெல்லுகையி லேபரிமளமிருந்தபூவினையும் வாவியினையுங்கரையினையும்உள்ளாடு வெளியை யும்பொருந்திச் சிக்கென்றதொரு தில்லைச்செடிநிழலிலே சோதிருபமானசிவ லிங்கந்தாபித்து ஆசையுடனே பன்னசாலையுமுண்டாகப்பண்ணி மூலத்தான த்துட னிரண்டிடமும்பணிவுறறு இறைவனேதுணையாகத் திரிவிதகரணமும் பொருந்தியிருக்குநாளில்—எ-று.

திடமார்தருவேயென்பதறகு - வலியமரமெனினுமமையும். (கச)

காலம்பெறநீறணிமாமுனிநீர் கமழ்குண்டிகைதண்டுகரண்டி கையுட், சாலும்பலபோதுசமித்தொளிரபுற்சாகாதிபலாசிலைதாமி கமே, ஞாலுஞ்சடையெட்டுமுடித்தொருநாணண்ணித்திகழர்ச்சனை பண்ணமருப், பாலொன்றலராய்பொழுதேபழுதார்பலமாமலர்கண் டுபகர்ந்தயர்வான். ❋

இ - ள். சந்தியாவந்தனகாலங்கள் பொருந்த அனுட்டானம்பண்ணும் மழமுனியென்பவன் பரிமளமுள்ள சலம்பொருந்தின கமண்டலம் தண் டு திருப்பூக்கூடைநிறைநத பலபுட்பங்கள் சமிதை பசியதருப்பை அறுகுமுத லான புல் சாக மூலபலங்கள் பலாசிலைமுதலானவை மிகக்கொண்டுவநது அதறகுப்பின்பு தாழ்ந்தசடையை எட்டுமுடியாகக்கட்டிமுடித்து ஒருநாள் பு ட்பவிதிப்படி பொருந்தப்பூசிக்கப் பரிமளம்பொருந்தின புட்பம் ஆராயுமள வில்குற்றமிருந்த பலபுட்பங்களைக்கண்டு விதனப்பட்டுச் சொல்லுவான்-எ-று.

வண்டுதும்பிடிந்தெனிலல்லெனிலோர் வழியுந்தெரியாதுமரங்கண் மிகக்,கண்டுரவளர்ந்துகரஞ்சரணங்காலும்பனியால்வழுவுங்கழிதே, ஞண்டுறுபடுத்தியசெம்மனல்வீயொத்தேறுமரும்புவிரும்பலரைப், பண்டுரொடெரித்தபரம்பொருளார் பழுதென்றனனொன்றுபகர்ந்தய ர்வான்.

இ-ள். புட்பம் - விடிந்தெடுக்கில் வண்டுகள்தீண்டும் இராத்திரியெடுக்கப்போனால் வழியுந்தெரியாது கோங்குமுதலான மரங்களிலே யெடுக்கலாமென்னில் அடிமரம் கண்ணுக்கும்எட்டாமல் உயர்ந்துவளர்ந்திருக்கிறபடியால் கையுங்காலும் பனியால்வழுக்கும் மிகுந்தவண்டுகள் தேனையுண்டு ஊறுபடுத்திய பழமையாகிய நல்லபூவும் மலரும்பக்குவத்தைப்பொருந்தி வண்டுகள்ஏறத்தக்க அரும்புகளும் நாட்பூவும் முன்னேவிரும்பாத முப்புராதிகளையூருடனே யெரித்தருளிய தம்பிரானார் ஆகமத்திலே பழுதென்றருளிச்செய்தார் இதற்கென்செய்வோமென்று விதனப்பட்டிருந்தார்—எ-று. (கசு)

தண்ணார்மதிசூடுசடாமகுடத்தலைவாகடைவாழ்வுதவிர்ப்பவனே, கண்ணாருதலோயொருமான்மறிசேர்கரவாவரவாகரு 0 மூலகரா, மண்ணார்புகழ்தில்லைவனம்பிரியா மணியேயெனையாளமகிழ்ந்தனையே, லெண்ணாதுநினைந்தவைதந்தருண்மற்றின்பார்தருமன்பிலனென்றயர்வான். ❋

இ-ள். குளிர்ச்சிபொருந்திய சந்திரனையணிந்த சடாமகுடத்தலைவனே ஈனமான உலகவாதனையை அடியார்களுக்குத் தவிர்ப்பவனே நிறைந்த பாலலோசனனே ஒப்பற்ற மான்மறிபொருந்தின கரத்தையுடையானேபாம்பைப்பூணாகவுடையானே பவபாசமூலத்தைக்கெடுப்பவனே பூமியிலுள்ளோர்துதிக்குந தில்லைவனநீங்காதசிந்தாமணியே என்னையாட்கொள்ளத் திருவுள்ளமகிழ்ச்சியுண்டாகில் பத்திஞான வயிராக்கியமில்லானென்றென்னையெண்ணாமல் அடியே னினைத்தவரந்தந்தருள் வேறொருசுகத்தி லாசையிலேனென்று சோர்வார்—எ-று. (கஎ)

அன்பூடுருகப்பணிவாரலரோலருளாயெனும்வாய்மையறிந்தும்விடா, வென்பூசையுநேசமும்யானுமுனக்கெங்கேயெனநொந்தயர்வானெதிரோ, வன்பூதமிகப்புடைசூழ்விடைமேன்மதிசூழ்சடைவானவர்கோன்வரநேர், முன்பூதலமீதுபணிந்திருகண்முகமார்புனலாடினன்மாமுனியே. ❋

இ-ள். பத்தியினால் நெஞ்சங்கரைந்து வணங்கார்களாகில் கடாட்சியாயென்கிற வேதாகமவாக்கியங்களை யுண்மையாகக்கண்டும் ஆசைவிடாதவென தருச்சனையும் அகப்பட்டநேசமுந் (தபோதனனுமிருக்கிற) யானும் (ஆத்தியந்தசூனியமாய்ப் பரிபூரணமாய்ப் பத்தவற்சலனுமிருக்கிற) உனக்குத்தகும்படி எப்படியென்றுவிதனப்பட்டுமோகிப்பவன்முன்னே வலிய பூதப்படைமிகச்சூழும இடபவாகனத்தில் இளந்திங்களணிந்த சடையையுடைய தேவதேவனெழுந்தருள அவர் சந்நிதிக்குநேராகப பூமியிலே சாட்டாங்கமாக நமஸ்கரித்து இரண்டுகண்களாலுந் தாரைகொள்ளுகிற சலத்தாலே மழமுனி ஸ்நானம்பண்ணினார்—எ-று. (கஅ)

---

0 மூலகரா-ஹரா-வென்பது-கரவெனலாயிற்று.

ஆலந்தருவானமுதாமொழியாலருமாமுனி யர்ச்சனையிச்சையி னின், சீலந்திகழ்வாய்மைமகிழ்ந்தனநீ சிந்தித்தவரம்பலசெப்பென வென், காலுங்கரமும்புலியின்மலியக் கண்ணங்கவைதங்கவிரங்கி முதற், கோலந்திகழ்பூசைகொளென்றுவரங் கொண்டானவையெ ந்தைகொடுத்தனனே. *

இ-ள். அழகுள்ள ஆலமரநீழலில்நீங்காத தம்பிரானார் அமுதசொரூபமா யிருக்கிறதமது திருவாக்கினாலே அரியமழமுனியே நம்மையருச்சிக்கப்பெரு க ஆசைப்பட்ட நல்லசீலம்பொருந்தின வுன்னுடைய திரிவிதகரணசுத்தியின் உண்மையைக்கண்டு சந்தோஷப்பட்டோம் நீநினைத்த பலவாகியவரங்களைச் செப்புவாயாகவென்றருள அடியேனுடைய கையுங்காலும் புலியைப்போலவ லுவானதகப் பற்றுண்டாகவும் அவைகளில் கண்கள்பொருந்தவும் இரங்கிய ருளி முன்னே புட்பவிதிக்குத் தேவரீர்கற்பித்த நானுதிகர்ம அருச்சனைகொ ண்டருளுமென்று வேண்டிக்கொள்ள அந்தவரங்களைச் செகறபிதாவாகிய ப ரமேசுவரர் திருவுளம்பற்றினார்—எ-று. (கக)

விண்ணுடருநாடருமேலவனே விரவாவரமுந்தருவானெனந ற்,கண்ணுறுமரும்புபெரும்புனன்மெய்க்காலாறெனவாராதருகாதன் மையான், மண்ணுரவணங்கவணங்குடனே மறைவானிறைவான்வ ழிமேவியபின், பண்ணுரவியாகிரபாதனெனும் பாவார்பெயரோதி னபாரிடமே. *

இ-ள். அரியயனிந்திராதிகளுஞ் சொப்பனத்திலுங் காண்பதற்கரிய பகி ரண்டங்கடந்த மேலோனே எனபொருட்டாக இவ்விடத்தே திருமேனி கொண்டெழுந்தருளிவேண்டினவரந்தருவானென்று கண்களில்நின்றும் உண் டாகாநின்ற பெரும்புனல் உண்மையான ஆற்றங்காலபோல நீண்டொழியா மற்செல்லும் பத்திமையால் பூமியதிர ஏகாங்கமாக நமஸ்கரிக்க ஈசுவரியுட னே மறைந்தருளின சிவன் சிதம்பரத்திலே யெழுந்தருளினபின்பு பண்ணும் பாடலும்பொருந்த வியாக்கிரபாதனென்கிற திருநாமத்தைப் பூதகணத்தார் கூறினாகள்—எ-று.

பாரிடம் பூலோகத்தாரொனினுமமையும், (உ0)

அறுகாலெழுகால்பிறகாமடுவுற் றமையாநியதிசசமைவாதரி யா, மறைகாதலினாலறைவானறவார் மந்தாரமரும்புசெருந்திகுரா, நிறைபாதிரிகோங்குயர்சண்பகமே நீர்வாழ்மலாவல்லிகொணிண்ம லர்கொண், டிறையானடியேமுறையால்வழிபட் டெண்ணாதருகா லமிருந்தனனே. *

இ-ள். வண்டுகளெழுவதற்குமுன்னே பொய்கையினிடத்துச் சேர்ந்து முடியாநியதிமுடித்து அன்புடனே வேதங்களைப் பத்தியினு லுச்சரித்துச்செ

ன்று பற்றியேறநகமும் பார்த்தெடுக்கவிழியுங் கைகால்களிற்பெற்றமை யால் கோட்டுப்பூக்கொடிப்பூ நீர்ப்பூவுங் குற்றமற்றுத்தெரிந்தெடுத்துக்கொ ண்டு நல்லதம்பிரானை திருவடியிலே விதிப்படியருச்சித்து எண்ணிறந்த கா லமிருந்தனர்—எ-று. (உக)

நற்றந்தைபுலிச்சரணங்கரநீ ணயனங்கள்பரித்தமைகாணநயந் துற்றங்கெதிர்சென்றுவணங்கமகிழ்ந் தொளிர்மேனியின்வாய்மை யுவந்துடனே, பொற்றண்மலர்வாவிபடிந்திறையைப் பூசித்தருண் மேவுபுலீசசரமும், பற்றும்பெருமானையுமர்ச்சனைசெய்பயில்வார விருந்துபரிந்தொருநாள்.

இ-ள். நல்லபிதாவாகிய மத்தியந்தினமுனிவர் நம்முடையபுத்திரன் பு லிக்காலுங் கையும் அவைகளில கண்களும் பெற்றனனென்று சந்தோஷப்ப ட்டுக்காணும்படிக்கு வந்தவருக்கெதிரோசென்று பொருந்தி நமஸ்கரித்த வளவிலே வியாக்கிரபாதமான தேசோன்மயமாகிய சத்திசரீரத்தை இன் புறக்கண்டு மகிழ்ந்து அப்பொழுதே பொன்மையுங் குளிர்ச்சியுமுள்ள மலர் கள்பொருந்திய சிவகங்கையிலேமூழ்கி ஸ்ரீமூலத்தானமுடையதம்பிரானை அருச்சித்து காருண்ணியமான திருப்புலீச்சரத்தில்பொருந்தின தம்பிரானை யும் நாடோறும் பூசைசெய்து வியாக்கிரபாதருடைய பன்னசாலையிலே யிருந்து குமாரனுடைய சரீரத்தைக்கண்டு பிரியப்பட்டு ஒருநா ளொருவார் த்தைசொல்லுவார்—எ-று. (உஉ)

நற்பான்மிகுதந்தையரும்புதல்வாநஞ்சந்ததியுய்ந்திடநண்ணி னையே, விற்பாலினியாகுதியாதிமறித் திடுவானுடை யானெடுவான டைவான், முற்பாலுனையானெனநீபெறுமா முனியாதுகொளென் றுவசிட்டமுனிக், கற்பார்தருபின்னியைமன்னுமணக் கடனோடுடனு நெறிகண்டனனே.

இ-ள். நல்ல பகுதிமிக்க பிதாவானவர் யான்பெறுவதற்கரிய புதல்வ னே நம்முடையசந்ததி தழைத்தோங்கப் பொருந்துவையாகில் இல்லறத்தின் பகுதிக்கு இனியொன்றுசொல்லக்கேள் பிதிர்களுமெதிர்கொள்ளும் சங்கிராந் திகாலத்தில் தருப்பணம் பிண்டோதகக்கிரியை முதலாகப்பண்ணுகின்றவனா கியபுத்திரனையுடையவனே பிதிர்லோகத்தை யடைவனென்று வேதஞ்சொல் லுகையால் முன்னம் உன்னை யான் புத்திரனாகப்பெற்றதுபோல நீயும் ஒரு புத்திரனைப்பெற வெறுத்துவிடாமல் விவாகஞ் செய்துகொள்ளென்று சம்ம திக்கப்பண்ணி வசிட்டமாமுனி தங்கையான கற்புமிகுங் கன்னியைப்பேசிப் பொருத்த நிமித்தம்பார்த்து o விரத சமாவர்த்தனம் பாணிக்கிரகணம் கர்பா தானம்-பும்ஸவனம்-சீமந்தம்-சாதகன்மாந்தமாகச் செய்வித்துப்போனார்.

பின்பக்கொடிமன்னுபமன்னியனைப் பெறவந்தவருந்ததிகொ ண்டுபெயர்ந், தின்பச்சுரபிப்பொழிபானுகர்வித் தெழிலாரவளர்த்

o விரதசமாவர்த்தனம்-என்பது முகூர்த்தத்திற்குமுன்செய்கிறசடங்கு.

திடுகொளிவர்தா, மன்பிற்புணரக்கொணர்வித்துமகிழ்ந்தயிலென்றிடு முன்பயிலும்படிசேர், புன்பற்கமர்பண்டமுமுண்டறிபால்போலுய்த்தனவும்புகழாதிகழ்வான்.

இ-ள். சிறிதுகாலத்துக்குப்பின் வியாக்கிரபாதருடையதேவியார் திடசித்தருன உபமன்னிய பகவானைப்பெற சாதகன்மத்துக்குவந்த அருந்ததியார் அந்தக்குழந்தையைத் தம்முடைய ஆச்சிரமத்துக்குக்கொண்டுபோய் இனிய காமதேனுசுரந்தபால் ஊட்டி அழகுபெற வளாக்குநாளில்வியாக்கிரபாதருந்தேவியாரும் புத்திரவாஞ்சையாலே தங்கள்பன்னசாலையிலே கொண்டுவரச் செய்துஆசையுடனே உண்ணென்று முன்னேயிடப்பட்ட பாகஞ்செய்து சிறியபல்லுக்கு மெத்தென்றபதார்த்தமும் முன்னேபுசித்தறிந்த பால்போலக் கற்பித்ததிரவியங்களையும் புசியாம லுமிழ்ந்துபோடுவார்—எ-று. (௨௪)

மணமேதகுபால்பெறுமாறழுமா மகனுர்முனியாம்வறியோம றியோ, முணவேயினிதாமவைதாமிவர்கா ணுடையாரொனவாழ்வுடையானெதிரோ, துணர்மேலெழுவெங்கனறங்கிகடுத்துஞ்சுங்தொழிறஞ்செனனைஞ்சழுதக், கணமேயிறையானிறைபாலலையுங்கடல்பெற் றதுகண்டுகளித்திடுவான். *

இ-ள். திவ்விய பரிமளமிகுந்த காமதேனுவின்பாலைக்கருதி உபமன்னிய பகவானழ வியாக்கிரபாதமுனி யாங்கள் தரித்திரர்கள் பாலும்பழமு மினியபதார்த்தமுஞ் சொப்பனத்திலுமறியோம் புசிப்புக்கினிய பதாத்தங்களை மிகுதியாகவுடையவர் இவர்தானென்று அழியாதசம்பத்துள்ள ஸ்ரீமூலத்தானமுடைய தம்பிரானுர் சந்நிதியிலேவளரும்படிவிட சிகைவிட்டெழுகின்ற ஜாடராக்கினியைப்பொருந்தி மத்தியிலிறக்கும் செய்கைபொருந்த அழவுஞ் சீவனற்று அப்பொழுதே தம்பிரானுர் திருவருளினுலே மிகுந்த அலைபொருந்தின திருப்பாற்கடல் வரப்பெற்றுப் பானம்பண்ணினதைருஷிகண்டுகொண்டு களித்தாடினுர்—எ-று. (௨௫)

ஆளும்பெருமானெதிரங்கொருநா ளலர்பங்கயவாதனமாயமரத், தாளொன்றுதலஞ்சகனந்தவிரச் சடரங்தொடர்மார்பெதிர் தள்ளவிழத், தோளங்கைபொரக்களமேனிமிரச்சுரிதந்தநிரைப்பிரியந்தரநா, வாளொன்றுவிழிக்கடைதுண்டம்விடாவண்ணந்தகுதிண்ணியமாமுனியே. *

இ-ள். ஒருநாள் தன்னையாண்டுகொண்டருளிய தம்பிரானுர் சந்நிதியிலே பத்மாசனம்பொருந்த ஒருதாள்பூமியையும் ० சகநத்தையும்பொருந்தாமல் வயிறுதொடர்ந்து மார்பையெதிரேதள்ள இரண்டுதோளுந்தாழக் கை

० சகநமென்பது-புருஷ்டபாகம்.

யிரண்டும் புட்பம்போலக் கழுத்துமேனோக்கியுயரக் கீழ்வாய்மேல் வட்டப் பட்ட பல்லுக்குநடுவே நாவைவைத்து ஒளிபொருந்தினவிழிகளை மூக்குநுனி யிலேவைத்திருந்து நாலுவன்னத்திலே மேலானதிடசித்தத்தையுடைய பிர மருஷி—எ-று.

சீரார்சிவயோகமகம்புணரச் செறியின்புணரக்குறியின்புறுமா *
றேரார்தருதாருவனத்திடையாறெண்ணாயிரமாமுனிவர்க்கிறைவ *
னோராதவர்மோகமொழித்தருளாலொருநாணடமாடலுகந்தனனென்
றோராவுணர்வாலறிவுற்றயராவந்தோவெனநொந்தயர்கின்றனனே *

இ-ள். அட்ட ஐசுவரியத்துக்கு மேலான சிவயோகமானது ஆன்ம சைதன்னியத்தைப்பொருநத விளைந்த சுகானுபவத்தினாலே பார்த்தவிடக்குறி யிலே பிரியாவதிசயமாக அழகுவிளங்கின தேவதாருகாவனத்தில் நாற்பத் தெண்ணாயிர மகாருஷிகளுக்குத் தன்னையுணராதவருடைய மோகங்களையு நீக்கி யொருநாள் தேசோரூபமாக நிருத்தஞ்செய்யப்பொருந்தினனெனுமித னைச் சிறிதறிவினாலே கண்டமாத்திரத்திலே அயர்ந்து அந்தோவெனநொந்து வியாகுலத்தழுந்தினார்—எ-று. (உஎ)

நன்மேனிகொடெந்தைபிரான்வெளியேநட்மாடியநல்விடமாயி டநா, முன்னேயமராவகைமாமுனிவன்மூலப்பதிசேரமொழிந்தன னற், றன்னேருறுதாளருணாமுணரத் தருமோமிருமன்பகமோவில தா, லென்னேபெருமானெருமானுடன்வந்தெங்கேபரதந்தருமெ ன்றயர்வான். *

இ-ள். எம்முடைய தம்பிரானார் தேசோரூபியாயிருடிகள் யாவருங் காண நிருத்தஞ்செய்தருளிய தெவதாருவனம் நமக்குச்சிவபூசைபண்ணி யி ருககுமிடமாகக் கற்பியாமல் நம்முடைய பிதாவாகிய மத்தியந்தினமுனிஸ்ரீ மூலத்தானத்திலே சிவபூசைபண்ணி யிருவென்று கற்பித்தனர் தனக்குத்தா னேஒப்பாகிய ஸ்ரீபாதத்தினுண்மைப்பற்றுச்சற்றுமிலாத யாமுமறியுந்தகுதி யோஉள்ளத்தில் மெய்யன்பு இல்லை எப்படியோ தம்பிரானார் ஈஸ்வரியுடனே யெழுந்தருளி நமக்கெவ்விடத்தே நிருத்தந்தரிசிப்பித்தருளுவாரென்று சோர் வார்—எ-று.

பின்புதெளிந்து சிதம்பரஸ்தலமே நிருத்தத்தைதருமென்கிறார். (உஅ)

அத்தன்பரதத்துவனித்தநடத்தமரும் பொதுவின்பெயர்மன்றமலம்
சத்தும்பரிரண்மயகோசமகந்தனிபுண்டரிகங்குகைவண்ககனஞ் *
சுத்தம்பரமற்புதமெய்ப்பதமச்சுழுனைவழிஞானசுகோதயநற் *
சித்தம்பரமுத்திபரப்பிரமந்திகழுஞ்சபைசித்திசிவாலயமே. *

இ-ள். செகற்பிதாவாய்த் தத்துவாதீதனாய் நித்தனாயிருக்கிற சிவபெருமான் அநவரததாண்டவம்பொருந்தின இந்தப்பொதுவின்பெயர் சர்வான்மாக்களுக்கும் பொதுவாய்ச் சங்காரவழக்கறுக்கிற அம்பலமாதலால் அநாதியே பரசாசுவதமாதலால்பெத்தமுத்தியிரண்டிலு நீங்காமல் உயிர்க்குயிராய் நீங்காமல் நிறகிற சற்காரியமாதலால் மேலான பொருளாதலால் களங்கமற்றகனகமயரூபமென்று வேதஞ்சொல்லுதலால் தன்னைத்தானே யறிந்திருக்குமாதலால் சுத்த கேவலமாதலால் பூமிக்கு இருதயகமலமாதலால் யாவர்க்கும் புகலிடமாதலால் - சுத்தபரமாகாசமாதலால் - சாக்கிராதீதங்கழன்ற சுத்தமாதலால் பரஞானமாதலால் காணுந்தோறுங் காணுந்தோறும் புதுமையாயிருத்தலால் சத்தியஞானரூபமாயிருத்தலால் சுழுமுனைமார்க்கத்திலெழுந்திருக்கிற பிரகாசமான ஞானமாதலால் தன்னைத்தரிசித்தவர்களுக்கு ஞானானந்தத்தைத்தோற்றுவிக்கும் பொருளாதலால் பசுபாசஞான நீங்கி யிருத்தலால் சர்வத்துக்கு மிடங்கொடுத்திருத்தலால் பதமுத்திகளைக்கைவிட்டவிடமாதலால் பிரமசொரூபமான மகாமாயைக்குமேலாதலால் எப்பொழுது மெல்லாப்பாதத்திலும் விளங்கும் ஞானமாகிய சபையாதலால் சிவசத்திசொரூபமாதலால் ஆநந்த நிருத்தத்துக்கு அதிட்டானமுமாய் ஆலயமுமாதலால்.

என்றின்னமனேகமனேகமெடாவேரார்பொதுவின்பெயரார
ணநா, ளின்றென்றுமியம்பிடுமின்னுமிதினேரோயெனவிங்காரோய
றிவா, ரன்றங்கிலயத்தலைவன்னிலைகண்டவருண்டெனவின்றுணர்கி
ன்றனமான், மன்றந்தெரியத்தருமென்றருளால்வளர்சிந்தைதெளிந்
தனன்மாமுனியே. *

இ - ள். என்று இப்படியே யின்னம்பலநாமங்களை யழகுவிளங்கும் பொதுவின் பெயராகக்கற்பித்து வேதாகமசாத்திரங்க ளிடைவிடாமனின்றெக்காலமுங் கோஷியாநிற்கும் இந்தச்சிதம்பரத்தினுண்மையையின்னதென்றளவிட்டி யார்தானறிவார் முற்காலத்திலே நிருத்தமூர்த்தியினுடைய சத்தியத்தைத் தரிசித்தவர்களுண்டென்று ஆகமப்பிரமாணத்திலே யினறுகண்டறிந்தோமாதலால் சிதம்பரந்தானே தரிசிப்பிக்குமென்று திருவருளினாலே தெளிந்தார்—எ-று. (௩௦)

## வியாக்கிரபாதச்சருக்கம்

முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௱அ.



# பதஞ்சலிச்சருக்கம்.



இந்தவகைவளர்புலிக்காலெழின்முனிவன்றெளிந்தெந்தை ❋
யந்தமிலாவாநந்த நிருத்தமளித்தருளென்று ❋
பந்தமறப்பணிந்திருப்பப் பரவுபதஞ்சலியவன்பால் ❋
வந்தபடியிருந்தபடிபோனபடி வகுத்துரைப்பாம். ❋

இ - ள். ' ஞானஞேயங்களுக்குப் பிறிவில்லாமையால் ஞானந்தானே ஞேயத்தைத் தரிசிப்பிக்குமென்றிந்தவகையினாலே பெரியதேசையுடையவியாக்கிரபாதமுனி சித்தந்தெளிந்து சுவாமியே முடிவில்லாதவாநந்த நிருத்தமுந் தரிசிப்பித்தருளுவாயாக வென்றுஅதுக்குவிலக்காயிருக்கும் பந்தபாச நீங்கச் சிவார்ச்சனைபண்ணியிருப்ப யாவரும்பரவும் பதஞ்சலிதபோபலத்தினாலே வியாக்கிரபாதரருகேவந்தபடி நெடுநாள் தவசுபண்ணி யிருந்தபடி எமக்குத் தெரிந்த மரியாதைகூறு படுத்திச்சொல்லுவாம்—எ-று. (க)

பரந்தபெரும்பாற்கடலிற் பள்ளிகொள்வானொழிந்தொருநா ❋
ளருந்தவமாரனந்தன்மிசை யரியரசங்கரவென்று ❋
கரங்கள்சிரமிசைமுகிழ்ப்பக் கண்ணருவிசொரியநிமிர்ந் ❋
திருந்தனன்முன்சலியாத வெழுதுமணிவிளக்கென்ன. ❋

இ-ள். அகன்றுவிசாலமாகிய பெரியதிருப்பாற்கடலிற் பெருந்தவமிக்க நாக சயனத்திற் பள்ளிகொள்ளுஞ்செய்கையையொழிந்தொருநாள் மகாவிஷ்ணுவானவர் அரகரசங்கரவென் றுச்சரித்துக் கைகளானவைதலைமேலேயேறிக்குவியாநிற்பக் கண்களருவிபாய வாயுமுன்சலியாத சித்திரதீபம்போலப் பத்மாசனம் விளங்க இருந்தார்—எ-று. (உ)

திருமகளுமணுகாது திகைத்தயரத்திருந்துபணி ❋
பரிசனமுமிகநடுங்கப் பராநந்தபராயணனாய்ப் ❋
பொருவிலனுபவநீங்கிப் புவிமிடைந்ததிருளெனவந் ❋
திருபரிதியெழுகிரிபோ லிருகண்மலர்தரவிருந்தான். ❋

இ - ள். இப்பரிசுகண்ட மகாலட்சுமியும் அணுகப்பயப்பட்டுத் திகைத்துநிற்பக் குற்றந்தீர்ந்த அடிமையானசேடனும் மற்றப்பரிசனங்களும் நம்பால் அபராதமுண்டோவென்று மிகவும் நடுங்கப்பரமானந்தத்திலே பரவசராய்ஒப்பில்லாத சிவானுபவநீங்கிப்பூமியில் அந்தகாரமேலிட்டதென்ன இரண்டாதித்தர் கூடிவந்துதிக்கும் உதயபருபபதம்போலவிழிமலர்ந்திருந்தார்-எ-று.

புண்டரிகவிழிமலர்ந்து புணரமளிகழிந்துபுனல் ❋
கொண்டுநியதிகண்முடித்துக் குலவியமண்டபமேறித் ❋
தண்டரளமணிப்பந்தர்த் தமனியப்பூந்தவிசின்மிசை ❋
யண்டர்தொழவந்திருந்தா னநந்தவனந்தலுடன். ❋

இ-ள். செந்தாமரைக்கண்விழித்து நித்திரைபொருந்தின நாகசயன நீங்கி சுத்தசலங்கொண் டனுட்டானம்பண்ணிமுடித்து நவரத்தினப்பிரகாசம்பரந்தமண்டபத்திலேறிக் குளிர்ந்தமுத்தின்பந்தற்கீழிட்ட பொலிவினையுடைய பொற்சிங்காசநத்தின்மேலே பிரமாதிதேவர்கள்வந்து நமஸ்கரிக்கச் சுகநித்திரையுடனே சாக்கிரங்கலந்திருந்தார்—எ-று. (௪)

தாழ்ந்தமடையுடைபுனல்போற் றம்பிரானடங்கருதி *
யாழ்ந்தவினைவழிமாற்றி யாநந்தபரவசனாய் *
வாழ்ந்தளவில்பேரின்ப வாரிவழியேயொழுகி ௧
வீழ்ந்தகருத்தினைமீட்டு மேட்டுமடைப்புலமேற்றான். *

இ-ள். பள்ளமடையை யெடுத்தோடுஞ்சலம்போல் பரமசிவம் தாருகாவனத்தில் நடித்தருளிய நிருத்தாநந்தத்தில் கருத்தைச்செலுத்தித்தாம் முன்பழுந்துந்துன்பக்குழியைமாற்றி ஒழியாதசுகபரவசராய்வாழ்ந்து அளவில்லாத பேரின்பவெள்ளத்திலே சென்றமிழ்ந்தின சித்தத்தை மீள்வித்து விடய ஞானங்களிலே கருத்தேறினார்—எ-று. (௫)

தெள்ளுமனந்தெளிபொழுதிற் றிருந்தநந்தனடிவணங்கி *
வள்ளலேயடியேனா மலரமளிமிசைமுன்போற் *
பள்ளிகொள்ளாதுணராதிப் பரிசிருந்தபடியடியேற் *
குள்ளபடியருள்செய்ய வேண்டுமெனவுரைசெய்தான். *

இ-ள். கலங்கினமனந்தெளிந்து விடய ஞானத்திலே யுறைத்தளவில் கிரதகிருத்தியனாயிருக்கிற சேடனமஸ்கரித்து அபீஷ்டவரதனே அடியேனாகிய விரிந்தவமளிதனில் முன்புபோலபள்ளிகொள்ளாமலும்உணராமலும் இப்படி யொருபிரகாரத்திலே யெழுந்தருளியிருந்தபடி அடியேனுக்குச்சத்தியமாகஅருளிச்செய்யவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தான்—எ-று

ஆங்கவனுநகைத்தருள்கூர்ந் தநந்தனிருவலர்கமலப் *
பூங்குழலுமிருவென்று புகன்றெனையாளுடைப்புனிதன் *
றாங்கரியபெருங்கருணைத் தன்மையினாலெனக்களித்த *
வோங்குதிருவருள்கேட்கி லுலவாதென்றுரைசெய்தான். *

இ-ள். அவ்விடத்து மகாவிட்டுணு நகைத்தருளி அதிகப்பிரியத்துடனே சேடனையும் பெரியதாமரையிலிருக்குந்திருமகளையும் நோக்கியிருங்களென்றருளிச்செய்து என்னையாண்டுகொண்ட இயற்கையான சுத்தன் என்றும் பெறுதற்கரிதாகிய பெரியகாருண்ணியத்தினியற்கையாலே எனக்குப்பிரசாதித்த மேலான அனுக்கிரகத்தைஉள்ளபடி நீங்கள் கேட்கவென்னில் ஒருகாலத்திலு முடியாதென்றார்—எ-று. (எ)

மன்னுமொளிவளர்பொருவில் வடகயிலைமலைமருந்தைச் *
சென்னியுறத்தொழுதென்னற் றிருந்துதிருமுகமதனா *

லென்னைவரவழைத்தருளி நகைத்தருள்கூர்ந்தென்கைமிசைத் *
தன்னிகரில்கரமூன்றி யெழுந்திருந்தான்முனித்துணைவன் *

இ-ள். வைகுந்தத்துக்கும் மனோவதிகரும்நடுவாய் நிலைபெற்ற சோதி ரூபமாயுயர்ந்த ஒப்பில்லாத உத்தரகயிலாசமலையில் சூக்ஷ்மாவேஷ்டையான மருநதை நேற்றியான்சென்று சிரசாரவணங்கின மாத்திரத்திலே உயிர்களு கருத் தோனருத்துணையாகிய ஆநதப்பரமேசுவரர் பிரசன்னம்பொருந்தின திருமுகத்தினலே என்னைத் தம்மருகேவரவழைத்தருளிநகைத்து அருள் கூர்ந்து பவிஷகிருத்தியத்தை நினைந்து அபயாஸ்தங்கொடுத்து என்கையி ன்மேலே தம்மொப்பில்லாத ஸ்ரீயத்தத்தையூன்றி யெழுந்தருளினர்—எ-று.

எழுந்தபொழுதொளிர்சங்கமெம்மருங்குமிகமுழங்கத் *
தழுவுமருமறைபரவத்தாவில்கணம்புடைசூழச *
செழுந்தவர்கண்மிடைந்தேத்தத்தேவரணிதொழத்திங்கட் *
கொழுந்தணியுமபெருமானகுலகிரியினடியணைந்தான் *

இ - ள். வீரசிங்காதனத்தில்நின்றும் இழிநதெழுந்தருளினபொழுது பானுகம்பனுல் ஊதப்படாநின்ற பிரகாசம்பொருந்திய சங்குகள் எத்திக்குஞ் செவிடுபடமுழங்கவும் ஒலிக்காநின்ற வேதங்கள்பரவுதல்செய்யவும் குறற மிலாத கணநாதர்கள்சூழ்ந்து சேவிக்கவும் வளவிய நித்தியவனுட்டானதரு ப்பணரான தபோதனர் நெருங்கித்துதிக்கவும் தேவர்கள்கூட்டந்தொழவும் அர்த்தசந்திர சடாதரனுகிய எம்பெருமான் அந்தக்கயிலாயத்தின் அடிவார த்தையணைந்தார்—எ-று. (௯)

மேயதொருமண்டபத்துவிரைந்தணைந்துதாருவனத் *
தூயவருமுனிவருளஞ்சோதிப்போநமக்கிசைய *
நீயரிவையுருவாகிநிலவுகெனவருள்செய்து *
நாயகனுந்திருமேனிநயங்கிளரவலங்கரித்தான் *

இ - ள. அவ்விடத்துத்திருவுள்ளத்துக்குப்பொருந்தினதோரேகாந்த மண்டபத்தில் துரிதத்திலெழுநதருளி தேவதாருவனத்திறபரிசுத்தராயிருக் கிற நாற்பத்தெண்ணுயிரம் ருஷிகளான பெரியோருடைய சித்தபாகம் பரீ ட்சிப்போம் நாம்கொண்ட வேடத்துக்குப்பொருந்த நீயும் ஸ்திரீ ரூபத்தைக் கொண்டு நம்முடனேகூட வருவாயாகவென்றெனக்கருளிச்செய்து ஆத்தும நாயகனுநதம்முடையதிருமேனி யழகுவிளங்க அலஙகரித்துக்கொண்டார்— அஃதெங்ஙனமென்னில். (௧0)

திருவடியின்மிதியடியுந்திகழுடைவெண்கோவணமேன் *
மருவரையும்புரிநூலும்வலஞ்சுழியுந்தியுமார்பு *
மொருவரையுமிருவரையும்புரையாதவுயர்தோளும் *
பரவருநற்பொக்கணமுந்தமருகமும்பலிக்கலனும்* *

இ-ள். ஸ்ரீபாதத்திலேமிதித்தருளினமிதியடியும்விளங்கப்பட்ட திருவுடையாடையும் உட்சாத்தும் இதுகள்பொருந்திய திருவரையும் முப்புரியான திருஎஞ்ஞோபவீதமும் வலமாகச்சுழித்த திருவுந்தியும் திருமார்பும் அதிற்சாமுத்திரிகா லக்ஷணம்பொருந்தின ஏகரோகையும் உதயாஸ்தமனமென்னும் இரண்டுபருவதங்களும் ஒவ்வாத உயர்ந்த திருத்தோள்களும் யாவர்க்கும் பரவுதற்கரிதாகிய நல்ல விபூதிப்பையும், தமருகமும் பிக்ஷாபாத்திரமும்—எ-று. (கக)

சீராருந்திருமிடறுஞ்செங்கனிவாய்ப்புன்சிரிப்பு *
மோராரும்வார்காதுமிலகுவிழித்தொழினயப்பும் *
வேராருந்திருநுதற்கீழ்விருப்புருவத்திருப்புருவந் *
தாராநிற்குங்கமலத்தனிமலர்போற்றிருமுகமும் *

இ-ள். சிறப்புநிறைந்த நீலமணிபோல்விளங்கின கண்டமும் செய்ய கனிவாயிற்றோன்றுகின்ற சிறுமூரலும் அழகுநிறைந்தவார்காதும் ஒளிசிறந்த திருஷ்டியின தொழில்நயமும் வேர்வுநிறைந்த திருநெற்றியிற்கீழாக விருப்பமே வடிவாயி நக்கிற திருப்புருவத்தைத் தனனிடத்திலே தோற்றுவிக்கும் மலர்ந்ததொருசெங்கமலம்போன்ற திருமுகமண்டலமும்—எ-று. (கஉ)

பொட்டுமலிதிருநுதலும்புரிந்துமுரிந்திசைந்தசைந்த *
மட்டுமலிகருங்குழலும்வளர்பவளவொளிமழுங்க *
விட்டுவிளங்கியவெழிலார்மேனியுமாய்மெல்லியலார் *
பட்டுவிழும்படியில்விழும்படியழகின்படிவமென *

இ-ள். அகலிய பொட்டுப்பொருந்தின திருநெற்றியும், நெறித்துச்சுருண்டு தன்னிலொத்து அலைந்த மணமிகுத்திருக்கிற கரிய திருக்கேசமும் பவளவொளியுங்கருகச் செவ்வொளிவிட்டுவிளங்கின அழகுநிறைந்த திருமேனியுடையதுமாகிய இவ்வடிவைக்கண்டு மாதாகள மோகபபட்டுவிழுந தன்மைபோல ஆடவாகளும்விழும்படி அழகின் உருவமபோல—எ-று. (கங)

மன்னனெதிருநுமளவில்வளரிருடாரகைகுழறிற் *
றென்னமலர்மயிர்சொருகியிலகநுதற்றிலகமுகம் *
பன்னரியதுகிலுடுத்துப்படர்தானைபின்போககித் *
தன்னிகரிறலைமுலைமேற்றனிக்காறைதனிற்றுவக்கி *

இ-ள். என்சுவாமியான தேவராசனெனக் கெதிரப்பமளவில் (யான் வடிவுகொண்ட தெவ்வண்ணமெனில்) நீண்டகங்குலுடனே நக்ஷத்திரங்கள் சலநதாற்போல அகத்திலேபலமலருங்கலநது திருமுடித்து அளகம்பிரகாசிக்கவும் நெற்றியிலிட்ட சிறுபொட்டினாலே முகசோபையுமுடாகவும் விலைபிடுதற்கரிய பட்டுவத்திரத்தை யுடுத்து அதன்முந்தானையை ஏகாசமாகப் போட்டு இந்த முந்தானையை வலக்கைக்குள்ளாலேவாயகி முலைமீதணிநத பதக்கத்தின்மேலே பிணிததுவைத்து—எ-று. (கச)

மாமணிநற்பாட்கமுமலிவித்தோர்வல்லியெனப் ❋
பூமலிசெங்கரத்துடனப்புண்ணியனேர்புணர்பொழுதிற் ❋
காமனெழிலழித்தவனுங்காமுறுவோனெனவெனது ❋
நிமைவிழிக்கடைநோக்கிச்சிறுமுறுவலிறைசெய்தான் ❋

இ-ள். பெரிய நவரத்தினப்பாடகமும்அழகுபெறமிகவணிந்து பூத்ததொருவல்லி சாதக்கொம்புபோலக் கையிலேயொரு பூங்கொத்தை மிகப்பிடித்துத்தருமமூர்த்தியான ஸ்ரீகண்ட பரமேசுரன்சந்நதியிலேசென்று பொருந்தினவளவிலே காமனழகையெரித்த அந்தக்கடவுளும் காமவிருப்பங்கொண்டவன்போலே எனது கொலைத்தொழில்பொருந்தின பார்வையை மோகத்துடனேபார்த்து மந்தகாசமுஞ் சற்றேபண்ணினார்—எ-று. (கரு)

அவ்வளையிலிமயமயிலமர்ந்திருப்பவகிலத்துப் ❋
பொய்விரவாமுனிவரிவன்புகழியக்கனெனவுணரச் ❋
செவ்வளைமேனியனடியேன்சேயிழையாய்ப்பின்செல்லச் ❋
சைவமுனிவர்களிருக்குந்தாருவன்மதுசாரந்தான் ❋

இ-ள். அந்தக்கயிலாசத்தில் ஈசுவரி தனித்தெழுந்தருளி யிருக்க உலகவாசனையற்ற இருடிகள் இவன் கீர்த்திபொருந்தின இயக்கனாக வேண்டுமென்று யோசிக்கச் செம்பவளக்குன்றுபோலுந் திருமேனியுடையவர் அடிமையாகிய யான் ஸ்திரீயாகப்பின்செல்லச் சிவபத்தரான இருடிகள்தபசுபண்ணிக்கொண்டிருக்கிற தேவதாருவனத்தை யணுகினார்—எ-று. (கசு)

சென்றுமுனிவர்களி நக்குந்தெருத்தலைச்சேரியிற்செறிந்து ❋
முன்றிலிடைத்துடிமுழக்கிமுறுவன்மிகமுகமலர்த்தித் ❋
துன்றுபலிகொணர்ந்தணையுஞ்சுரிகுழலாரொழிநோக்கி ❋
யன்றிறைவனின்றுபுரியபிநயமாயிரகோடி ❋

இ-ள். ஆச்சிரமமளவாக எழுந்தருளி இருடிகளிருக்குந தெருவில் முந்தின பன்னசாலையிலேபுகுந்து நடுமுற்றத்திலேநின்று தமருகத்தைமுழக்கி முகத்தினிடத்தி லொளிவிளங்க நகைத்தருளிக் கைநிறையப் பிக்ஷைகொண்டுவந்து அருகேநிற்கும் இருஷிபத்தினிகளுடைய அழகைக்கண்டு அப்போது தன்னுடைய விநோதத்தினாலேபண்ணினவபிநயம் ஆயிரகோடியாம்—எ-று.

எண்ணரியவபிநயங்களிறைபுரியநிறைகற்பிற் ❋
பண்ணமருமொழிமுனிவர்பார்ப்பனிகள்பலரீண்டி ❋
நண்ணருநாண்மடமச்சம்பயிர்பபென்னுமிவைநழுவக் ❋
கண்ணுதலோனிருமருங்குமொன்முகக்கைக்கொண்டார் ❋

இ-ள். சுவாமியானவர் எண்ணிறந்த அபிநயங்களைப்பண்ண நிறைந்த கற்பும் இசைக்கொப்பான மொழியுமுடைய இருஷிபத்தினிகள் பலர்கூடிக் கிட்டுதற்கரிய இயல்பான நாணம், கொளுத்தக்கொண்டு கொண்டது விடா

தமடப்பம் பேதைமையால் அச்சம் பயிலாதபொருளி லருவருப்பான பயி ர்ப்பு என்னும் நாலுங் கைநழுவவிட்டுப் பாலலோசனனிரண்டுபுறமுமொன் றுகவளைந்துகொண்டார்கள்—எ-று. (கஅ)

சாயவார்குழலொருகைகலையொருகையுறத்தாங்கிப் *
பாயவாள்விழியருவிபரவசராயெதிர்பயில்வார் *
தூயவாய்த்திருவாயிற்றுலங்குநகையென மொழிவா *
ராயவாவினியெம்மையணைத்தருளாயெனவயர்வார் *

இ-ள். நீளியகுழல் சரியஅதனை யொருகையினாலும் வீழும் மேகலையை யொருகையினாலும் இறுகப்பிடித்துக்கொண்டு வாளையொத்த கண்களில்நின் றும் அருவிபாய மோகவசத்தராய் [illegible]கைஞ்ஞெகிழ எதிர்சென்றுபொருந்துவா ர்சிலர், திருவாயினிடத்து நகையானது சுத்தமாய்விளங்குகின்றது என்பார்க ள்சிலர், எங்களுக்கிசைந்தவனே மால்கொண்டஎம்மை இப்போது தழுவிக் கொண் டருளென்று மோகித்துவிழுவார்சிலர்—எ-று. (கக)

ஐயமிடவென்றுகடிதரிசிகொடுபுறப்பட்டுக் *
கையமரவமுதாக்கிக்கலத்திடுவார்நிலத்திடுவார் *
கொய்யுமலரிலையுடனேகுவித்தகரத்துடன்கொணர்ந்து *
பையுமடகெனவிடுவார்நாமுய்ந்தோமெனநவில்வார் *

இ-ள். பிக்ஷையிடவேண்டுமென்று கடுக அரிசியள்ளிக்கொண்டு புறப்ப ட்டு மேலிட்ட காமாக்கினியாலும் விகாரவியர்வினாலுங் கையேபாத்திரமாக அதை அமுதுசமைத்துப் பிக்ஷாபாத்திரத்தி லிடுமாறுபோலக் கண்ணும்மன மும் வேற்று விகாரப்படுகையால் நிலத்திடுவார்சிலர், ஸ்ரீபாதத்திலே அர்ச் சிக்கவெடுத்த பத்திரபுட்பங்களை அஞ்சலியத்தத்துடனே கொண்டுவந்து மய ங்கிப் பிட்சாபாத்திரத்திலே நன்றாக வெந்த சாகம்போலாக அதனை இடு வார்கள் சிலர் இப்படி வடிவுமிகுத்ததொருநாயகனைப்பெற்றே மாதலால் நாமே பிழைத்தோமென்பார்சிலர்—எ-று. (உ௦)

முன்பிச்சைவனைக்கண்டமுகமென்பார்முயங்கிரதி *
மன் ⁰ பிச்சைவனப்பகழிமாரிசொரிந்திடுமென்பார் *
பின்பிச்சைகொண்டுவரப்பெரும்பிச்சையளித்தகல்வா *
ரென்பிச்சைகெடவுருகவெமக்கிரங்காரெனவயர்வார் *

இ-ள். இந்தமகேஸ்வரனைப்பார்க்குமிடத்து முன்புகண்ட முகச்சாயலா யிருக்கின்றது என்பார்சிலர், பொருந்தப்பட்ட இரதிமணவாளனாகிய மன்ம தன்தூணியிலநின்றும் அம்புகளை ஒவ்வொன்றாகவாங்கி சரவருஷமாக வரு ஷித்திடுமென்பார்சிலர் பின்னே யொரு பிடிப்பிச்சைகொண்டுவர எமக்குத் தாங்கரிய பித்தைத்தந்த கலப்பொம்இவர் எனபுமிச்சையுங்கெடும்படிநாம் வருந்தவும் நமக்கு இரங்கியருளாரென்று சிலாசொல்லுவார்கள்-எ-று.(உக)

⁰ பிச்சு-ஐவனப்பகழிஎன்பதற்கு காமவெறியைத்தருகின்ற பஞ்சபா ணங்களெனவும் ஒருபொருள்கொள்க.

நில்லுமினவளைதாருநீரென்றுதகைந்தொன்று ❋
சொலலிவிடுமெனவணைவார்துணைகொண்மணிமுலேகாட்டி ❋
யில்லுமிதுவெனமொழிவாரெவ்விடமுமிடமென்பார் ❋
புல்லியிடுமெல்லேயுடன்போதுதுநாமெனப்புகல்வார் ❋

இ-ள். நீரிவ்விடத்திலேநில்லும் போவீராய் லெம்முடையவளையலேத்தந்து போமென்று தடுத்துச் சம்மதியில்லாமையைச் சொல்லிவிடுமென்றுதொடர்வார்கள்சிலர், தம்மிலொத்து முத்துவடம்பொருந்தும்ஸ்தனங்கள்தோன்றநின்று எம்முடையமனேயுமிது தூரமில்லேயென மொழிவார்கள்சிலர், உமக்குப்பொருத்தமானவிடமே யெமக்கும் பொருத்தமானவிடமென்பார்கள் சிலர், நீர்சேரவேண்டுமென்று நினைத்திருக்கிறவிடத்தளவும் நாங்கள்வருகிறேமென்றுசொல்லுவார்கள்சிலர்—எ-று. (உஉ)

ஐயமுளதிலதிடையென்றறிவிப்பாரெனநிற்பா ❋
ரையமுளதிலதுயிர்வந்தணைந்துகொளென்பவர்போல்வா ❋
ரையமனுமெனக்கணைகொண்டநங்கனடர்ந்தலேயாமை ❋
யையமனுவெமைநோக்கியஞ்சலெனுயெனவயர்வார் ❋

இ-ள்.பிச்சையுண்டு இடையில்லேயென்று அறிவிப்பானைப்போல எதிரேவந்துநிற்பார்சிலர், எமதுடலில் உயிர்வாழ்க்கையுண்டு அது இல்லேயென்கிற சந்தேகம் இல்லேயாம்படி வந்தணைந்து பிழைப்பித்துக் கொள்ளென்பவனையொப்பார்சிலர், ஐந்தியமன்போலப் பஞ்சபாணங்களேக்கொண்டு காமராசன்மேலிட்டுப் பொருதாமல் தேவதேவனே பயப்படாதிருங்களென்று அருளிச்செய்யாமலிருக்கின்றீரென்று அயர்வார்சிலர்—எ-று. (உ௩)

ஆடுவாராடாதவபிநயங்கள்பலபுரிவா ❋
ரோடுவாரோடாமோவுண்கலனிங்குமக்கென்பார் ❋
கூடுவார்கூடாதகுழலலேயக்குழன்மொழியாற் ❋
பாடுவார்பாடாகமேல்விழுவார்பலராகி ❋

இ-ள். (விஷய ஆநந்தக்கடல்மேலிட்டு) ஆடுவார்சிலர், உலகத்தில் நடவாத சேட்டாவிதங்களேப் பலவாகப்பண்ணுவார்சிலர் (பலமுறை திரும்பிப் பார்க்கின்றொன்றுவிரைந்து) ஓடுவார்சிலர், தலேயோடாமோ உமக்குப்பிக்ஷாபாத்திரமென்பார்சிலர், பின்னும் சமீபத்திற் செல்லுவார்கள், வாரிமுடிக்கக் கூடாதமயிரலேயக் குழலிசைபோன்ற மொழியாற்பாடுவார்சிலர், பலர்கூடித் தாங்கள்கொண்ட கோட்பாடுபொருந்தத் திருமேனியின்மேல் விழுவார்கள்.

பேதையர்கண்முதலாகப்பேரிளம்பெண்மையர்முடிவா ❋
மாதரவரிருமருங்குமறுகுமறுகிடைநெருங்கி ❋
யோதமெழுந்தெனநிலவுமொலியுயர்வானுறநகைத்து ❋
நாதனெழுந்தருளவயனுனணைந்தபடிநவிலவேன் ❋

இ-ள். பேதை பெதும்பை மங்கை மடந்தை அரிவைதெரிவை பேரிளம் பெண் என எழுவகைப்பருவமுள்ள மாதர்களியாவரும் இரண்டுபக்கமும் ம யங்குகிற நடுத்தெருவில் சத்தசமுத்திரமும்ஒன்ருய்க்கூடிச் சத்தித்தெழுந்த துபோல ஒலிக்கும்ஓசை யண்டகோளகையைக்கடந்தப்பாலுஞ்செல்ல நகை த்தருளித் தம்பிரானர் மற்ருெருவீதியில் எழுந்தருள அவ்விடத்தி யானசென் று பொருந்திச்செய்த பிரகாரஞ்சொல்லுவேன்—எ-று. (௨௫)

கற்புடையமடந்தையெனக்கருதரிதாய்கண்டவர்கள் *
பொற்புடையபொதுமகளாப்புகல்வரிதாமபொலிவினதா *
யற்புதமாய்சிவந்துமிர்ந்தகன்றவயில்விழிக்கணைகள் *
விற்புருவத்துடன்முனிவர்விழியிலக்காவிடுமளவில் *

இ-ள். உடையினுலும் நடையினுலும் கையிற்பிடித்த பூவினுலும் குலஸ் திரீயென்று கருதக்கூடாமையாய்ப் பார்த்தவர்களுக்கு நாயகன்பின்னே நிழ ல்போலப்புறவடிபார்த்து நடக்கையால்அழகிய வேசிகளாகச்சொல்லவெ ண்ணுததன்மையுமாயிருக்கின்ற கபடவேஷத்தைத்தரித்து ஆச்சரியத்தையு டைத்தாய்ச் செவ்வரிபரந்து நீண்டு விசாலம்பொருந்திய கண்களாகியகூர் மையுள்ள அம்பினைப்புருவமாகியவில்லிலே தொடுதது என்னைப்பார்த்த விரு டிகள்கண்களே குறியாகவிட்ட மாத்திரத்திலே—எ-று. (௨௬)

எண்ணரியதிறலினர்களிடுநூலேகுறியாகத் *
திண்ணியநெஞ்சவைகுலையசிகையவிழவுடைநழுவப் *
பண்ணலருமபிநயங்கள்பலபுரிந்துபரவசரா *
யண்ணலெதிரெனைநோக்கியாதரித்தாரருமுனிவர் *

இ-ள். மட்டிடவொண்ணுத ஞானவீரமிகுநத முனிவர்கள் உபவீதமொ ன்றுமே அடையாளமாகத் திடசித்தங்கலங்கக் குடுமிகுலைய உடுத்த மரவுரி கள்நழுவிவிழ வேருெருவர் பண்ணுதறகரிய பலசிங்காரச்சேட்டைகளைப்பண் ணிக்காமமோகராய் என்னுடைய நாயகன்சந்நிதியிலே என்னைககணடு மகா விருடிகள் ஆசைப்பட்டார்கள் —எ-று. (௨௭)

எவராலுமென்னாலுமெய்தரியானெய்வுற்றுத் *
தவராசிவிடங்கடொறுந்தாவில்பலிகொளநடந்தான் *
சிவராகமடைவோரிற்சேயிழையாமெனநோக்கு *
பவராகாரபராதபரம்பரையோராயினர் *

இ-ள். பிரமாதிகளாலும என்னாலுஞ் சொப்பனத்திலுங் காண்பதற்கரி யான் சுவேச்சையினுலே இயக்கவுருவத்தைக்கொண்டு மகாவிருடிகளுடை ய குற்றமற்ற பன்னசாலைகடோறுஞ் சுத்தானபிச்சைகொள்வதற்கு நடந் தான் அந்தச்சிவத்தின் உண்மையை அறிந்து அன்புவைப்பவர்கள்போல் என் சொருபத்தை எண்ணி யறியாமல் இவளொரு ஸ்திரீயென்றுகருதி விகாரங் கொண்ட முனிவர்கள் சேட்டைகளைவே பண்ணி அபராதத்துக்குப் பழை யோராயினர்கள்—எ-று. (௨௮)

கோவமிகுமுதுமுனிவரொன்றாகக்குழுமியெழுந் *
தாவதெனுமிவனிந்தவாசிரமத்தஞ்சாதே *
காவன்மிகுங்கற்பழித்தகாபாலியெனக்கனன்று *
தாவமிகும்படிபரவாச்சாபங்கள்பலவிட்டார் *

இ-ள். இப்படியே ஆசாரவீனம்வரக்கண்டு கோபமிகுத்த விருத்தரான ருஷிகளெல்லாருங்கூடி வெட்கங்கொண்டு இப்படிவரலாமோவென்று எப்படிப்பட்ட அசுராகளி ராக்கதர் சித்தவித்தியாதராகளாலும் அண்டொணாத சிவார்ச்சனைமிகுந்தநம்முடையவாச்சிரமத்தில் பயப்படாமல் இந்தக்கபாலிவந்து பதிவிர்தாபாவத்தைக் குலைத்தானென்று குரோதனராய் அகக்கணத்திலே கோபமிகும்படி பூலோகத்திலே நடவாத எண்ணிறந்தசாபங்கள் அதியுக்கிரமாக இட்டாரகள்—எ-று. (௨௯)

இட்டபலசாபங்களிறைவனயன்மேவாது *
கெட்டபடிகண்டுசினமகெடாதமனத்தினராகி *
கட்டமளித்தருளென்றுதகைவார்போலெதிாநண்ணிச் *
சிட்டமலிதருகுண்டந்திருமுன்னேதிகழ்வித்தார் *

இ-ள். தாஙகள்சபித்த வெகுவிதசாபங்களுந் தம்பிரானாருகேசெல்லாமல் வியாத்தமானதுகண்டு மனத்தி லாறாதகோபத்தை யுடையவர்களாகி தேவரீரெஙகளுக்கு ஆநந்தநிருத்தந் தெரிசிப்பித்தருளுமென்று தகையுமவர்போலே யெதிர்ப்பட்டு சுவாமிக்குமுன்னே பெருமைமிகுத்தகுண்டத்தைச் சமைத்தார்கள்—எ-று. (௩௦)

எஞ்சாதவழலிருத்தியெடுத்துமனுக்கணித்தோதி *
கஞ்சானதிரவியங்களுடியவைபலகோலி *
நெஞ்சாலுநினைவரியநிருமலனேயிலக்காக *
வஞ்சாதேயவிசாரமவிசாரத்தமைத்தாகள் *

இ-ள். அந்தக்குண்டத்தில் குறைவுபடாத அக்கினியைததாபித்து மந்திரமுச்சரித்து அந்தயாகத்துக்குரிய விஷத்திரவியங்களை விசாரித்து அவைமிகுதியாகக்கொண்டு மனத்துக்கும் எட்டாத பரமசிவமே யிலட்சியமாகப்பயப்படாமல் விசாரணைத்தினாலே அவிசார ஓமத்தைப்பண்ணினார்கள்—எ-று.
விஷத்திரவியங்களாவன-எட்டி முதலியனவாம். (௩௧)

கருத்தின்கிழிசிவந்தமுனிக்கணங்கணத்திலுதிப்பித்த *
வெரிந்தருமுழுவைமையைநேரேவுதலுமெந்தைபிரான் *
பிரிந்தருளியது பிடித்துத்திருக்கரத்தினகநுதியா *
வரிந்ததவுரிபசும்பட்டாவுடைதொடைமேலுறவுடுத்தான் *

இ-ள். தெளிவுள்ள மனத்தினும் மிகச்சிவந்தகண்களையுடைய தாருகாவனத்திருடிகள் க்ஷணமாத்திரையில் அவிசாரவோமத்திற பிறப்பித்த கோபித்

தூக்கொர்ச்சிக்காநின்ற வியாக்கிரத்தைத் தம்பிரானார்முன்னேவிடுதலும் எந்தைபிரானார் திருப்புன்முறுவல்செய்து எதிர்த்த அந்தப்புலியைப்பிடித்துத்திருக்கரத்தினுனி நகத்தாலேயுரித்துத் தோலைச்செவ்வியபட்டுவத்திரம்போலத் தொடையளவும் பொருந்த உடுத்தருளினார்—எ-று. (௬௨)

ஏரடங்குகுண்டத்தினெரிவயிற்றிற்பிறந்தெழுந்த *
பாரிடங்களாரிடமாம்பரிசனமாயினபயிலச் *
சீரடைந்தமணிமுச்சிசசெய்யவிழிவெள்ளெயிற்றுக் *
கார்விடங்கொளொருபுயங்கங்கடிதுவரக்கைக்கொண்டான் *

இ-ள். அழகுசெறிந்த குண்டத்திலிட்ட அவிசாரவோமத் தீயினிடத்தில் உற்பத்தியான அனந்தபூதங்கள் ஏகாங்கியாயிருக்கிறதம்பிரானார்க்கு முனிவர்கள் வரக்காட்டின ஊழியக்காரரைப்போலப் பணிவிடைசெய்ய ஒளிமிகுத்தஇரத்தினச்சுடிகையுஞ் சிவந்தவிழியுமுடைய வெள்ளெயிற்றிற்கறுத்த விடம்பொருந்தின தொருபாம்பும் விரைவுடன்வர அதனை இடகரத்திலே முன்கைக் கடகமாக அணிந்துகொண்டார்—எ-று. (௬௩)

மைவிஞ்சுநெடுந்தடித்தின்வார்குழல்வார்சடையாகத் *
தெவ்வன்பரெதிரிரண்டுதிருக்கரங்களுருத்தெழமுற் *
கைவந்தநிலையமலர்க்கால்வந்துகலந்திசைப்பப் *
பவ்வங்கொண்முழுநஞ்சுநுதல்விழியும்பாரித்தான் *

இ-ள். அந்தகாரத்தைநீக்கி மேலிட்ட நெடிய மின்னல்தனைப்போலே மூந்தி நீண்டகரியகுழலானதே நீண்டசடையாகவும், அஞ்ஞானத்தாலே மாற்றாரான பத்தர்களாகிய அந்தஇருடிகள்முன்னே முந்தின திருக்கரங்களுமன்றி இரண்டு திருக்கரங்களுண்டாகித் தோன்றவும், முன்னே திடமான தாண்டவம் செங்கமலம்போன்ற ஸ்ரீபாதத்திற் கூடிப்பொருந்தவும், திருப்பாற்கடலிலே தோன்றினகுறைவறவிஷத்தைக் கண்டத்திலும் நெற்றியிலேகண்ணையும் வெளிப்படக்காட்டினார்—எ-று. (௬௪)

ஏய்ந்தவனன்முன்னுகர்ந்தவிருளுமிழ்வ்தெனவெரிவாய்ப் *
போந்ததிருமெரிமுச்சிப்பொறிவிழிவெண்பறகுறளன் *
சேந்தரவத்துடனரவந்திகழவரவரனெதிரோ *
பாய்ந்தருளிவெரிநெரியும்படியடிமேற்பயில்வித்தான் *

இ-ள். பொருந்தின அக்கினியானது இதற்குமுன்விழுங்கின இருளை இப்போதுஉமிழ்ந்தாற்போல குண்டத்தினக்கினியில்நின்றும் புறப்பட்டுப்பயங்கரமான ஆர்ப்பரவத்தையும் எரிகின்ற குஞ்சியையும் தீப்பொறிசிந்தும் விழிகளையும் வெண்மையுடைய பற்களையும் வாமனரூபத்தையுமுடைய முயல்கன் சிந்தும் பாம்பைக் கையிலேகொண்டு கொர்ச்சித்து மிகவதிர்ந்துவரக்கண்டு தம்பிரானார் விரைவிலே யெதிர்ப்பட்டருளி முயல்கன் கீழ்ப்படப் பாய்ந்து அவன் முதுகுநெரியும்படி ஸ்ரீபதத்தாலே மிதித்தருளினார்—எ-று.

மலங்கவெரிதரவேந்திமந்திரங்கள்வரக்கரத்தா *
லலம்புசிலம்பணியாகத்திருவடியிலமாவித்துத் *
துலங்குபலசடைதாழத்துணங்கைகணந்துதைவிப்ப *
வலங்கலணிதடந்தோளானருநடமாடுதலபுரிந்தான் *

இ-ள். அந்தமுனிவாகளேவின யாவும் தளர்ந்தபின் அக்கினிதன்னை வரவிட அந்தஅககினியைத் திருக்காத்திலேநதியருளி உச்சாடனமான மந்திரங்கள் ஆகரிஷணகற்பனையால்வர அதை ஓசையுளள அழகிய திருச்சிலம்புக்குத் தரிசுமாக ஸ்ரீபாதத்திறகரத்தாற்சாத்தி மினபோல துலங்கும் பலசடைதாழ்நதலையக் கணநாதாகள் துணங்கைக்கூத்தை மிகச்செய்யக் கொன்றைமாலையயணிநத பெரியதோளையுடையவர் அரியநடனஞ்செய்ய விரும்பினர்—எ-று.

தரிசுஎனபது-சிலமபுக்குள்போடுஞசிறுபரல். (௩௬)

தாகத்தாலலைந்துமிகத்தளாந்துதவவலிசலித்த *
மோகத்தாலிழந்தனலுமந்திரமுமவிடமுடிந்த *
சோகத்தானிராயுதராயததுளஙகுநடமிறைதொடங்கும் *
வேகத்தாலருமுனிவரொன்றுகவீழந்தாாகள் *

இ-ள். ஓமாககினியுட்டினத்தாலுண்டாகிய தாகத்தினால்வாடி தபோபலங்குறைநத மயககததினலே மிகத்தளாநது தங்களசெயலறறு அக்கினியையும மநதிரத்தையும் ஏவ அவைகள பொனவிதனத்தினலே தங்களுக்குரிய கருவியின்றிப் பயங்கரமான நடனத்தைத்தம்பிரானா செய்யத்தொடங்குறவேகத்தினலே பெரியமுனிவர்களெலலாரும் o வியாமோகதராய் விழுநதார்கள்—எ-று. (௩௭)

நடமுயலும்பொழுதஞ்சி நடுநடுங்கினானயரக *
கடகமெனவிடதரத்தைக் கட்டியவஙகைகவித்த *
விடையிலவிடையுடனெடுவா னெய்தியிடத்தணைந்தகுல *
மடவாலைமகிழ்நதவண்மேன் மலாந்தகடைககண்வைத்தான். *

இ-ள். அநத நிருத்தவேகம்பொறுக்கமாட்டாமல பயப்பட்டு நடுநடுங்கியானு மூர்ச்சிதனைசக்கண்டு சர்ப்பககடக தாரிதமான அழகிய திருக்கரத்தாலேயென்னை அஞசாதேயென் றமைததருளின அவதாரததில இடபவாகனத்துடன் ஆகாசமார்க்கத்தில்வநது இடபபக்கததிலபொருநதின பார்வதியின் மீதுபிரியப்பட்டு அவாமேலே இடததிருக்கடைக்கண வைத்தருளினார்—எ-று.

அரிவையணைந்தபினெங்கணுமலாமழையண்டாபொழிந்தனர் *
பிரமபுரந்தராவந்தனைபெருகினர்முன்புறவின்புற *
முருவமொழிந்திகழென்பழை யுடலதுகொண்டுபணிந்தெதிர் *
மருவநடுங்கியொடுஙகுதன் மலைமகளகண்டுமகிழ்ந்தனள். *

o வியாமோகமென்பது - ஆச்சரியத்தால்மோகித்தல்.

இ-ள். பரமேசுவரி யெழுந்தருளினபின்பு தேவர்களெங்கும் புட்பவருஷம் வருஷித்தார்கள். பிரமேந்திராதியர்கள அஷ்டாங்கபஞ்சாங்கங்களினாலே சந்நிதியிலே வந்தனையை வெகுவிதமாகப் பண்ணினார்கள். இருஷிகளின்புறம் மோகினிவேடத்தை நீங்கி அடியாரிகழுமென்னுடைய பழைய மாயாசரீரத்தைக்கொண்டு சர்வேசுரனைப்பணிந்து முன்புபோலேகூசாமலெதிரேநிற்கப் பயப்பட்டுப (பிரமேந்திராதிகளுக்குப்பின்னே) யொளித்து நிற்கிறதைக்கண்டு பரமேசுவரி மிகவுமகிழ்ந்தருளினா—எ-று. (௩௯)

விரவியவங்கணனெங்கணும் விரிசடைமண்டியலைந்திட *
வெரிவிரிசெங்கைசுழன்றிட விடிதுடிகொண்டிடவெண்டிசை *
பரிபுரபுண்டரிகந்தருபதயுகளம்பலருந்தொழ *
வருள்புரியெந்தைமடந்தையு மதிரநடங்கடொடங்கினன். *

இ-ள். நிருத்தத்தொழில் பொருந்தின பரமேசுவரன் விரிந்தசடை திக்கெங்கு மசையவும் சுவாலாக்கினியையேந்தின கரம் கொள்ளிவட்டம்போலே சுழன்றிடவும் எட்டுத்திக்கிலுமுள்ள யிடியோசையைத்துடியோசைகொள்ளவும் சிலம்பணிந்தசெங்கமலம் போன்ற இரண்டுதிருவடிகளையும் யாவருந தொழவும் கிருபாகரராயிருக்கிற தம்பிராணா பரமேசுவரியுநடுங்க வெகுவிதமான நிருத்தத்துள் பயங்கர நிருத்தத்தைத் தொடங்கினார்—எ-று. (௪0)

கரணமனந்தமுயன்றொலி கலவுசிலம்பணிகுஞ்சித *
சரணமிலங்கவலம்புரி தருகரமும்பொலிவுந்தகு *
திரணகின்மங்கைநெடுங்கய றிருநயனங்கள்செறிந்திடு *
புரணமுமொன்றியவென்றிகொள் பொருவில்புயங்கமுயங்கினன் *

இ-ள். திருவிளையாட்டினால் அநந்தமான கரணங்களை நடித்து ஓசைபொருந்தின சிலம்பணிநதகுஞ்சித பாதங்கள்விளங்க சாமுத்திரிய இலக்கணத்திலுத்தமமான வலம்புரிச்சங்க ரேகைபொருநதிய செங்கையும் அழகும் இளமையொத்துத் திரண்டதனமுமுள்ள பார்வதிதேவியின் கயனெடுங்கண்ணும் எநதை திருநயங்கள் பொருநதின பார்வையும் அதிலொருப்பட்டமனமும் மனதொத்தபாவமும் பாவமொத்தரசமும் பொருநதின பாசத்தைத்தள்ளின சுத்தநிருத்தமான ஒபபில்லாத புயங்ககரணத்தைப்பொருந்தினார்—எ-று.

புனிதபுயங்கமுயங்கிய பொழுதவனுந்தனடந்தரு *
மினிமைநுகர்ந்தமடந்தையு மெழிலவிடையும்பெறுகென்றரு *
ணனிமிகவென்கணுமங்கண னகைதரவுய்ந்துவணங்கினன் *
மனமுருகுமபடியன்புடன் வளர்விழியின்புவழங்கினன். *

இ-ள். சுத்தமாகியநடனஞ்செய்யத்தொடங்கினபொழுது தம்பிராணும் தம்முடைய நிருத்தத்திலுண்டான இன்பத்தை யனுபவித்த பரமேசுவரியை அழகிய விடபவாகனமேற்கொள்ளென்று அருளி அருளுடனே மிகு

தியாகத் தம்பிரானர் என்னைபபாரத்து நகைத்தருள அப்போது கிருதார்த்த னுகி நான் வநதனைசெய்தேன கல்லொத்த நெஞ்சுங் கரையும்படி பத்தியி குஞானப்பார்வையைப் பிரசாதித்தருளினர்—எ-று. (௪௨)

அரு'ருமருந்தவர்தம்பழி யகலநினைந்தருளங்கண *
சயசயசங்கரவென்றெதிர் தனையில்விழுந்துபணிந்தனர் *
நயநடனுந்தகுமங்கவர் நவையெவையுந்தொகவந்திருண் *
மூயலகனென்றுகவென்றதன் முதுகதிரும்படிநின்றனன். *

இ-ள். மோகித்துக்கிடக்கிற அரியதவத்தையுடைய விருடிகள் தம்பிரா னர் ஞானக்கண்ணைக்கொடுத்தபின் கிருபாகரனே எங்கள் குறறம்பொறுத்த ருள் சயசய'சங்கரனேயென்று சந்நிதியிலேயேசாங்கமாகப்பூமியில்விழுந்து நமஸ்கரித்தார்கள். அனுக்கிரகநிருத்தமூாத்திய மிரட்சிக்கத்தக்க அந்த விருடி களைவியாபரித்த ஆணவசததிகளெலலாங் கூடிவநது ஆணவமூலமாயிருக்கிற முயலகனைப்பொருநதுகவென்று ஆய்கஞாபித்து அதனுடைய (சத்திபொரு ந்தின) முதுகுநெரியும்படி மிதித்துநின்றருளினர்—எ-று. (௪௩)

பண்டையவிருள்பறியும்படி பங்கயபதமுதவும்பொழு *
தெண்டிகழிருடிகளகண்டன ரின்புறுதிருநடமன்பொடு *
கண்டனர்வெருவினர்நுண்டுளி கண்டருமருவிசொரிந்தனர் *
குண்டிகைகுசையிசைதண்டுகள கொண்டெதிர்குணலைமலிந்தனர். *

இ-ள். அநாதியே தம்மைமறைத்த ஆணவநீங்கும்படி தம்பிரானர் திரு வடித்தாமரையை அருளினபொழுது நாற்பத்தெண்ணுயிர மிருடிகளுங் கண் டாாகள் கண்டதேதென்னில் முன்புநடனஞ்செய்த சவுககிய நிருத்தத்தை அன்புடனே கூடிக்கண்டாாகள் மிகுநதபயங்கொண்டவாகளாகிக் கண்களி லிருநதும் ஆநநதபாஷ்பத்தைப் பொழிநதுகமண்டலம் தெர்பபைப்புல்பொ ருநதின தண்டு இவைகளைக் கைக்கொண்டு சநநிதியிலே குணலைக்கூத்தை ச் செய்தார்கள்—எ-று. (௪௪)

சூடினர்கரமலரஞ்சலி சூழ்வுறவமரர்துதைந்தனர் *
நாடியகருவிகொடும்புரு நாரதரிசைபடியும்படி *
பாடிலர்தெளிவிலர்நின்றனா பாரிடநிலவுதுணங்கைகொ *
டாடினகரணமிடுந்தொழி லாயினர்கணபரநாதர்கள். *

இ-ள். சுற்றுநெருங்கின தேவர்களஞ்சலி யத்தராய் நின்ருர்கள் தும் புருநாரதாகள் மனந்தெளிவிலராய்எண்ணப்பட்ட வீணைவாத்தியங்கொண்டு இசைபொருந்தும்படி பாடினாகளில்லை பூதகணங்கள் பொருந்தின துணங் கைக்கூத்தாடின உறுதிகரணம் இடுந்தொழிலே யாயினரெண்ணிறந்தகண நாதாகள—எ-று. (௪௫)

கரணமென்பது கூத்தின் விகறபம்.

அங்கரிபிரமபுரந்தரரண்டர்கண்முனிவரகண்டமு *
மிங்கெமதினியநடஞ்சிவலிங்கமதிசையநினொந்தொளிர் *
கொங்கலர்பலமலரன்பொடுகொண்டடிவழிபடுமென்றுயர் *
மங்குலினிடைவிடைதங்கியமங்கையொடிறைவன்மறைந்தனன். *

இ-ள். (இப்படியேநிகழும்அவ்விடத்து) அரி-பிரமன்-இந்திரன்-தேவர்கள் இருடிகள் பூதகணமுதலானோர் யாவரும் எம்முடைய ஆநந்தநிருத்தத்தை யிப்போது இவ்விடத்து உண்டாகிய இந்தச்சிவலிங்கத்தி னிடமாகத் தியானி த்து-விளங்கும் மணம்விரிந்தபலபுட்பங்களாலே திரிசந்தியுநாடோறும் பூசை பண்ணிப் போற்றுங்களென்று இடபத்திலேபொருந்தின பரமேசுவரியுடனே பரமேசுரன் பரமாகாசத்திலே மறைந்தருளினர்—எ-று. (சசு)

இறைமறைதருதிசைமுன்றொழு தெவர்களுமகல்வுழிவென்றிகொ
ளறிவுறுமொருமையனந்தநின்னமளியினொருநலமர்ந்தொளிர் *
கறவளர்மிடறனடந்தொழுகலவியினலமொடுகண்படு *
முறைதருதுயரமொழிந்தனனெனமுகமலரமொழிந்தனன். *

இ-ள். பரமசிவம் மறைந்தருளின திசையைநோக்கி நமஸ்கரித்து யா வருமகன்றபின் ஞானவீரத்திலேபொருந்து மொருப்பாடுடைய ஆதிசேஷ னே நீயாகிய சயனத்தில் நேற்றுப்பொருந்தி நீலவொளிவிளங்கின விடத் தைத் திருமிடற்றிலுடையவனது நிருத்தநதொழுத இன்பத்தோடே சாக் கிரம் சொப்பனஞ் சுழுத்தி துரியந் துரியாதித மென்னும்டஞ்சாவத்தையிற் படுந் துக்கத்தைநீங்கிஅருளால் அமிதமாக இருந்தனன்என்று முகாரவிந்த சேஷ்வவிளங்க மகாவிஷ்ணு அருளிச்செய்தார்—எ-று. (சஎ)

அண்டனதுயர்நடமென்றலுமஞ்சலிசிரமுறவன்பொடு *
கண்டவனொனமிகநுண்டுளிகண்டரவுருகுதல்கண்டரி *
தொண்டினரிவர்பணியென்பணிசுந்தரனடிபணியென்பணி, பண்
டெனதணையிவனொன்றுகொள்பண்பொழிவினியெனநொந்தனன். *

இ-ள், பகிரண்டகர்த்தாவினுடைய ஆநந்தநிருத்த மென்றமாத்திரத்தி லே பத்திமிகுதியினால் அஞ்சலியானது சிரமுற ஆநந்தநிருத்தங்கண்டு களி கூர்ந்தவரைப்போலே கண்ணானது மிகவுநுண்டுளித்தாரைகொள்ள மனதுநீ ராளமாயுருகிப் புளகத்துடனேநின்ற பரவசத்தை மகாவிஷ்ணுகண்டு இவ ர்தம்பிரானுக்குரியதொண்டர் இவர்க்குப்பணியேதென்னில் எலும்புமாலை யணிந்த பரமசிவத்தின் திருவடித்தொண்டாகும் என்பணியோவெனில் இ ன்றுமுதல் இவனெனக்குப் பாயலென்னும் புத்தியையொழித்தலென்று சொ ன்னமாத்திரத்திலே சேடன் மிகவும்விதனப்பட்டான்—எ-று. (சஅ)

இனியணையெனநனிதுஞ்சுதலிசைவிலதெனதுளநின்பணி *
தநயனைமுயலமொழிந்துயாதவமுயல்வதுதருமென்றலு *

மனமிகவுருகியனந்தனும்வரதனதினியநடந்தொழு ✽
துனைவினிதெனினுமகன்றிடுதொழினினைவரிதெனநொந்தனன். ✽

இ-ள். நீசயனமாயிருக்க நானஅந்தசயனத்தில் நித்திரைசெய்ய என் மனதிற் பொருத்தமில்லை உன்பணியான பாயற்றொழில்செய்ய உன்பிள்ளையைக்கறபித்து நீ மேலானதவங்களிலே முயலுகிறதே யுனக்குறுதியென்று மகாவிஷ்ணுசொல்லச் சேடனெஞ்சங்கரைந்து நெக்குருகி அபீஷ்டவரதனுடைய இனியதிருத்தாள் சீக்கிரத்திலே தொழுமருட்பாடே மிகவு மினிதெனினுந தேவரீரை நீங்கும்வகைநினைக்கவும் போகாதென்று விதனப்பட்டான்—எ-று. (௪௯)

மாதவன்மிகவுமகிழ்ந்திறைவாழ்வடகயிலைமருங்குற ✽
நீதவமுயல்கயல்கொண்டகணேரிழையதிபனும்வந்துநி ✽
ஞாதரவமரவரம்பலவர்சறவருடருமென்றபி ✽
னேதமில்பொருவிலனந்தனுமேசறுமரியையிறைஞ்சினன். ✽

இ-ள். சேடனுடைய அடிமைகதிறத்துக்குப் புருடோத்தமன் மிகவும் பிரியப்பட்டு ஸ்ரீகண்டபரமேசுரன் வாழ்ந்தெழுந்தருளியிருக்கும் உத்தரகைலாய பாரிசத்திலே நீபோயத் தவசுபண்ணு அங்கயற்கண்ணுமாபதியும் உன்னுடையதபத்தலத்திலே யெழுந்தருளி உன்ஆசைதீர வேண்டினவரமெல்லாந்தந்து மலததிரையமுநீக்கி அருளுண்டாக்குமெனறு மகாவிஷ்ணு உபதேசித்தபின்பு குற்றமும் ஒப்புமில்லாத சேடனுங் குறறமற்ற மகாவிஷ்ணுவை நமஸ்க்கரித்தான்—எ-று.

குற்றமில்லாத மகாவிஷ்ணுவென்றது தம்பிரானார் ஸ்ரீயத்தம்பற்றின பரிக்கிரகசத்தியாய் ஞானதிருட்டிபெற்றதனு லெனக்கொள்க. (௫0)

விரவரியருள்கொடனந்தனுவிரைவொடுதகவிடைகொண்டபின் ✽
மருவருதலைவன்மகிழ்ந்துறைவளர்வடகயிலைமருங்குற ✽
விரிபணமணிவெயிலசிந்திடவிரிவிழிகதிரைவிழுங்கிட ✽
வெரியெரிதிசைதொறுமண்டிடவிகழ்வறுதவமதிசைந்தனன். ✽

இ-ள். தன்னைநீங்காத மகாவிஷ்ணுவி னனுமதியுடனே சேடனும் சந்நிதியிலே தவம்பொருந்த விடைகொண்டபின்பு கனவிலுந் தேவர்க்குங்கிட்டுதற்கரியவனாகிய அரிபிரமாதிகளுக்குந தலைவன் வாழ்ந்தருளியிருக்கிற உயர்ந்த உத்தரகயிலாயபாரிசத்திலே மகாவிஷ்ணு சொன்னவிடத்திலேவந்து அக்கினிகறபித்து அகன்றபடங்களிலிருக்கிற ஆயிரமிரத்தினங்களும் ஆதித்தியகிரணங்களைத்தள்ளவும் பலலாயிரம் விழிகள்ஆதித்தனைத் தன்னுடையபிரகாசத்துள்ளேயடக்கவும் சுவாலிக்கிற பஞ்சாக்கினி எவ்விடத்தும் அன்னியமான திக்குகடோறும் போய்நிறையவும்பந்தபாசத்தை நீக்குகிற தபசைப்பண்ணினான்—எ-று. (௫௧)

## வேறு.

தவமிகமுயலும்போதுதன்னுயிர்ப்புமிழ்வதன்றிப் ✽
பவனனுமுணவுங்கொள்ளான்பலபகலகலவும்பாரான் ✽

சிவனடிகாணுங்கண்கடிப்பியமாக்குவான்போ
லுவமனில்கதிரோனுட்புக்கூறகிநேரோடவைத்தான்.

இ-ள். தபசைப் பண்ணுங்காலத்தில் தன்னுடையசுவாசமு மிரேசக மொழிந்து பூரககும்பகங்களும்பண்ணான் காற்றாகியதனக்குரிய உணவையுங் கொள்ளான் நெடுங்காலஞ்செல்வதுரு சிந்தியாண்தம்பிரானார் ஸ்ரீபாதங்களை இனிமேற்காணப்போகிற கண்களைச்சுத்தமாக்குவான்போல ஒப்பில்லாத ஆதித்திய மண்டலத்துக்குள்ளேசென்றுருகிஇரண்டறப்பண்ணினான்—எ-று.

இன்னவாறருந்தவங்களிவனியற்றிடநடஞ்செய்
மன்னன்மாமுனிவனைப்போல்வாய்மைகளளப்பானாகி
முன்னயனாகியன்னமுதுகிடமாகவேறி
யன்னவனெதிரோசென்றானவனும்மாதரங்கள்செய்தான்.

இ-ள். இப்படியே யதிககரோமான தபசை யிவன்செய்ய நிருத்தகிருத்தியஞ்செய்கிற தேவதேவன தேவதாருவனத்திலே இருடிகளுடைய சித்தசுத்தம் பரீட்சிக்கவந்தாற்போல முந்தப்பிர்மாவாகி அன்னத்தின்மேற்கொண்டு சேடனுக்கெதிரோசென்றான் சேடனு மிநதப் பிர்மாவைக்கண்டு அங்கிகாரஞ் செய்தான்—எ-று. (௫௩)

செய்தவன்றன்னைநோக்கிச்சினவரவுருவோய்செல்லன்
மெய்திகழ்தவங்கள்போதும்விரவுபோகங்கள்வீடு
பொய்தகாவித்தைசித்திபொருந்துவதொன்றெமக்குக்
கொய்துரைதருதுமென்றுகூறினான்முனிவர்கோமான்.

இ-ள். பிரமதேவன் தபுத்தைபண்ணுகிற சேடனைப்பார்த்துக் கரோமான சர்ப்பவேடத்தையுடையவனே சரீரம் வருநதப்பண்ணின தபசு இதுவரைக் கும்போதும் பொருந்தப்பட்ட இநதிராதிபோகங்கள் நம்முடைய சாலோக சாமீபசாரூப சாயுச்சியாதிபதங்கள் அசததியம்பொருநதாதவித்தைபதினாலு அட்டமாசித்திஎன்னும் இவற்றில் வேண்டுவனவொன்னறத் தெரிந்தே எம் முன்சொல்லுவாயாகதருவோமென்று பிர்மாஅருளிச்செய்தார்—எ-று.(௫௪)

வாசகங்கேட்டனந்தன்மகிழ்ந்தியான்புகழ்ந்தழைத்த
தீசனையென்னவேண்டிற்றெவர்தரினன்றுனக்குப்
பேசுகென்றனைத்தும்வேண்டாப்பெற்றிகண்டயனிகழ்ந்திங்
கேசறுதவஞ்செய்வான்வேறென்பெறவியம்புகென்ன.

இ-ள். இவ்வாறுசொன்ன பிர்மாவின்வார்த்தையைக்கேட்ட சேடன் காண விரும்பித்துதித்து யானழைத்தது பரமேசுரனை அங்ஙனமிருக்க நீ வநததேதென்ன உனக்கு வேண்டினதொன்றை யார்தந்தால் நன்று அதனைச்சொல்லுவாயாகவென வினவின யாவையும் அவனுக்குவேண்டாத கருத்தறிந்து பிரமதேவன் அபேட்சித்து இவ்விடத்தில் குறறமில்லாத தபத்தைச்செய்யுமது வேறினி யென்னபயனைப்பெறச்சொல்லென்றார்—எ-று. (௫௫)

முத்தியுமுடிவிலாதபோகமுநாலிரண்டாஞ்
சித்தியும்வித்தையாவுஞ்செய்வதென்றிகழ்வனத்தி
லத்தனன்றெவர்க்குநலகுமாநநதநிருத்தங்காணும்
பித்தமேவிட்டதென்றுபேசினுனேசிலாதான்,

இ-ள். உன்னுடையபதமுத்தியும் ஒழியாத இந்திராதிபோகமும் அட்டமாசித்தியும் வேதாதிசர்வகலையும் இவைகொண்டு செய்வதென்ன விளங்குந்தேவதாருவனத்தில தம்பிரானு ரபபோது யாவர்க்கும் அருளின ஆநந்த நிருத்தம் எப்போதெரிசிப்போமென்கிற மோகமிகுத்ததென்று சொன்னுன் குறறமில்லாத சேடன்—எ-று. (௫௬)

முந்தயனவனைநோக்கிமுடியநீமுடியாதொன்றைச்
சிந்தனைசெய்தபித்துத்தீர்தராதெனநகைத்தங்
கந்தமில்சுதந்தரத்தோனுர்சொலவனத்திலன்று
வந்தருணடம்புரிந்தான்மதியிலாயெனவுரைத்தான்.

இ-ள். தேவருஷிகளுக்குப் பிரதானனுன பிரமாசேடனைப்பார்த்து ஒருகாலுமுடியாததொன்றை முடியவேண்டுமென்று கருதின உன்னுடையபிராந்திஞானம் முடியப்போகிறதில்லையென்றுநகைத்தருளி அந்நாளந்ததேவதாருவனத்திலே முடிவிலாத சுதந்தரசததிமானுயுள்ள பரமேசுரனுர் யார்வேண்டவநது அருள்நடமாடினுர் புத்தியில்லாதவனேயெனமுன்—எ-று. (௫௭)

ஆலவாயனந்தனென்று மாடுவானவனேயன்றே
சாலவாதரித்தாற்முனே தருபவன்முரானென்மு
லேலுமிங்கென்னவன்னத் திறையவனந்தோவந்தோ
காலமுமநேகஞ்சென்றுங கழிந்திலதாசையென்முன்.

இ-ள். விஷமூறும் வாயினையுடைய அனந்தன் அனவரததாண்டவஞ்செய்யுமவன்சிவனன்றே தானேநடனதரிசனம் தநதருளுமவன் அதனைத்தரிசிக்கவேண்டுமென்றுமிகவும்விரும்பினுல் தந்தருளானென்றுசொன்னுல்அநதவார்த்தை பொருந்துவதோ என்றுசொல்ல அன்னவாகனனுன இறைவன் விதனப்பட்டு ஐயொவை யோஅனெகங்காலம் போயிருக்கையிலுமிவனுசை ஒழியவில்லை யென்முர்—எ-று. (௫௮)

நொந்தபங்கயனைநோக்கி நுடங்குடலளவேயன்றே
வந்தமில்காலஞ்சேய்த்தன் றதுவுமென்றயராககண்டு
மிந்தநீயிறந்தாற்பேறிங் கென்னெனவனந்தனின்றென்
சிந்தையிங்கிதுவாச்செத்துந் திருநடஙகாண்பேனென்முன்.

இ-ள். இப்படி விதனப்பட்ட பிர்மாவைப்பார்த்துச் சேடன்என்னுடைய சரீரமுள்ள மட்டுமெல்லவோ நீர்முடிவில்லாத காலமென்றது தூரமன்று அந்தச்சரீரமு மொழியக்கண்டு இப்படிக்கொத்த நீயிறநதாலெந்த வுடலிலே

யிங்கே நிருத்தங்காண்பாயென்ன சேடனுனவனிப்போது என்னுடையசித்த ம் இந்த ஆநந்தநிருத்தத்திலே யாதலாலச்சரீரம் விட்டாலும் இந்தக்கருத்தே வித்தாக மற்றொருசரீரமெடுத்துங் காண்பேனென்றான்—எ-று. (௫௯)

ஆங்கவனுறுதிகேளா வன்னமேயானுநல்கித்
தீங்கில்பங்கயனேமுன்னேத் தேவர்கண்மலர்கள்சிந்த
வோங்கிருங்கணங்கள்சூழ வொண்ணுதற்றிலகவல்லிப்
பூங்குழலுமையாள்பாகம் புரந்தரனுயிருந்தான்.

இ-ள். சேடனுடைய அலைவற்ற திடவார்த்தையைக்கேட்டு அன்னத்தை இடபமாக்கி பாசாதீதனுயுள்ள பிர்மாவே அரிபிரமாதிகள் புட்பவருஷம வருஷிக்கவும் தேவர்களுக்கு மேலான ஏகாதசவுருத்திரகணங்கள் சூழவும் நல்ல நெற்றித்திலகத்தையுடைய ஒப்பற்ற வல்லிசாதக்கொம்புபோன்று புட்பகேசியென்கிற திருநாமத்தையுடைய உமையவளை வாமபாகத்திலே வைத்தருளி ஸ்ரீகண்டபர மேசுவரனுகி யெழுந்தருளியிருந்தார்—எ-று. (௬0)

கண்டபோதனந்தனஞ்சிக் கரசரணுதிகம்பித்
தண்டனேபோற்றியாண்டவமலனேபோற்றிதிங்கட்
டுண்டனேபோற்றிநாயேன் சொன்னவைபொறுப்பாய்போற்றி
கொண்டனேர்கண்டாபோற்றி கூத்தனேபோற்றிபோற்றி.

இ-ள். பிரமசொரூபத்தைச் சிவசொரூபமாகக்கண்ட போதுசேடன் பயப்பட்டுக் கரசரணுதி அவயவங்கணடுங்கிநின்று பகிரண்டகர்த்தாவே யிரட்சி பெத்த முத்திகளிலெனக்குப் பிராணனுயநின்று ஆண்டுகொண்ட நிமலனே யிரட்சி அர்த்தசந்திரனைச் சடாமகுடத்திலே தரித்த சிவனே யிரட்சி நாயேன்புத்திபூர்வமாகச்சொன்ன பிரதியுத்தரங்களைப் பொறுத்தருளுவானே யிரட்சி காளமேகத்துக்கொத்த கண்டத்தையுடையவனே யிரட்சி ஆடியகூத்தனே யிரட்சி யிரட்சி—எ-று. (௬௧)

ஆண்டிடவேண்டிவந்தவமலனேபோற்றியென்று
மாண்டகுமனங்கரைந்துமண்மிசைவீழ்ந்திறைஞ்ச
நீண்டசெஞ்சடையானனேநோசெலவுகைத்தணைத்துக்
காண்டகுகருணைநல்கிக்கைத்தலமுடிமேல்வைத்து.

இ-ள். எனையாட்கொண்டருள நினைத்தருளி யித்தனைதூரம் எழுந்தருளின சுத்தனே யிரட்சியென்று திடசித்தம் நீராளமாயுருகிப் பூமியிலே விழுந்திறைஞ்சினவளவில் நீளிய செஞ்சடையோன் இடபத்தைச் சேடனுக்கெதிரோ செல்லவுகைத்தருளி அதன்பின் அவனையணைத்த நளிக்காணத்தக்க பாவனுதீட்சைபண்ணி யிவனுடைய தலைமேலே ஸ்ரீயத்தம்வைத்து—எ-று.

காண்டகு கருணைநல்கிக் கைத்தலமுடிமேல்வைத்து என்பது பாவனுதீட்சையும் பரிசதீட்சையுமெனக்கொள்க. (௬௨)

இப்படித்தவங்கள்செய்தாலன்றிநம்மினியகூத்து ❋
மெய்படத்தெரியாதன்று விளங்கிடக்கடவதுன்ற ❋
னெய்ப்புறுதுயரந்தீர்கவெனவுரைத்தெம்மையுண்மை ❋
செப்புதுமுணர்கவென்றுகூறினன்றேவதேவன். ❋

இ-ள். இவ்வண்ணந் திடமான தபசுகள்செய்தாலொழிய நம்முடைய ஆநந்தநிருத்தம் சத்தியமாகத்தெரியாது அந்நாள் வெளிப்படத்தோன்றக் கடவது தபசுசெய்து இளைத்த உன்னுடையவிதனத்தைத் தீர்வாயாகவென்று அருளிச்செய்து இனி நம்முடைய சத்தியத்தைச்சொல்லுவோம் அறிவாயாகவென்று தேவர்கள் தேவரருளிச்செய்தார்—எ-று.

இதில்அன்று எனனுஞ் சுட்டு வருங்காலச் சுட்டெனக்கொள்க. (௬௩)

வையகமாயையின்கண்வினைவழிவருங்கடாதி ❋
செயபவனொழியத்தோன்றுசசீலததவுயிர்கள்சேர்தற் ❋
கெவ்வகையுணர்வுண்டெனனிலிலங்குமைந்தொழிலியாவு ❋
முய்வகையாலியற்றற்கியாமுளோமெனவுரைத்து. ❋

இ-ள். நாதாதிபிரிதிவி யந்த மானதத்துவமெல்லாஞ் சுத்தமாயை அசுத்தமாயை எனனும இரண்டுகாரணத்திலும் ஆன்மாவின் கன்மசீவன மேதுவாகததோனறும், அஃதெங்ஙனமெனில குடஞ்-சால்-கரகமுதலானவை நிமித்தகாரணமான குலாலனையொழிநது உண்டாவனவல்லவென்கிற சீலத்தை ஒக்கும், கிஞ்சிக்கினனன ஆனமா செடத்துவங்களைபபொருநதிப்புசிக்க அறிவெபபடியுணடாமெனில் விளங்கிய பஞ்சகிருததியபேதமெலலாங் கன்மசாமியம்வரும்படி செய்தற்கு அநாதியே பிராணனுயநின்று நாம் நடத்துவோமென் றருளிச்செய்து—எ-று. (௬௪)

சகளநிடகளமெமகருததருசமாமேனியாநீ ❋
யுகளமுமுணரிபசத்தியுபாதானமாகபபாச ❋
நிகளமதகறறவன்பாநோநிகமுருவமொன்றென் ❋
றகளமாய்ஞானமேயாயகண்டமாயமாந்ததன்றே. ❋

இ-ள். சகளநிட்களமும நமக்குப் பரிக்கிரகரூபமுஞ் சைவதந்திர ரூபமுமாயிருக்கும் இந்த இரண்டுரூபங்களையும் நீயின்றுவிசாரிகநில் அசுத்தமாயை சுத்தமாயையென்னு மிவைகளை யுபாதானமாகக்கொண்டு பாசவிலங்கை முறிக்குமபடிக்குச்சகலர் பிரளயாகலரிவர்களுடைய கனமசாமியத்திலே யிவர்களைப்போலத் தூலசூக்குமமாய்வந்து சத்திநிபாதமபண்ணிப் பாசச்சேதம் பண்ணிச் சுத்தகேவலத்திலேகூட்டுகிற கிரியாசத்தியதிட்டானமானரூபமொன்று மறறொன்று விஞ்ஞானகலரிறபக்குவரில பரமுத்தறகு நிராதிகாரமாயிரட்சிக்குமிடத்தில் கலாதீதமு மாய்ஞானமுமாயக கண்டிக்கப்படாத ஞானரும் அபரமுத்தறகு ரட்சிக்குமிடத்துச் சாதி காரணரூபமாயிருக்கும்—எ-று.

இதற்குப்பிரமாணம் சிவம் சத்தி நாதம் விந்து என்கிற பிரமாணத்தையுங் கண்டுகொள்க, சகளநிட்களம் நமக்குத் தஞ்சமாமேனியென்பதற்குச் சிவ சத்தியென்பாருமுளர், கிருத்தியத்துக்குச் சுத்தமாயை அசுத்தமாயையை யதிட்டிக்கும தொழிலைத்தான் செய்யாதாதலான் மறுக்கப்பட்டது. (சரு)

இருவகையிவைகடந்தவியல்புநம்மொளியாஞான *
வுருவமாநந்தமானவுயிரியாம்பெயரொமக்குப் *
பரபதம்பரமஞானம்பராற்பரமிலதுகாத்த *
திருமலியிச்சைசெய்திதிகழ்நடமாகுமன்றே. *

இ-ள். முன்சொல்லப்பட்ட சகளம் நாலுக்கும் நிட்களம் நாலுக்குமப் பாலாகிநம்முடையபிரகாசமான சுபாவசத்தியே நமக்குவடிவு இதற்கு ஞேயமானபிராணன்நாம் எமக்குப் பரபதம் பரமஞானம் பராற்பரமெனறுபெயா சங்காரம் இரட்சை சிருட்டி திரோபவம் அநுக்கிரகம்என்கிற பஞ்சகிருத்தியம் நம்முடையகூத்து—எ-று. (சசா)

ஆரணமனைத்துநாநின்றுடுதுமென்றுபோற்றுங் *
காரணங்காலந்திக்குககருத்திடங்காணமாட்டா *
சீரணிதேவதாருவனத்திடைத்தெரியநின்று *
நாரணன்முதலோர்காணநாடகநடித்தஞான்று. *

இ-ள். அநந்தமான வேதங்களும் அநவரததாண்டவம் நாம்பண்ணுவோமென்று துதியாநிற்கும் இன்னகாரணத்தினாலேயென்றும் இன்னகாலத்திலேயென்றும் இன்னதிக்கிலேயென்றும் இனனவிடததிலேயென்றும் அறியமாட்டா அழகுவிளங்கின தேவாருவனத்தினடுவே தெரியநின்று நாரணன் முதலோர்காண நிருத்தஞ்செய்தநாள்—எ-று. (சஎ)

அன்றருவனம்பொருமையலைந்தமையறிந்துநாமும் *
வென்றிகொண்டங்கணைந்தின்விட்டனமுனக்குமின்று *
நின்றிடமிதுவாய்க்காட்டுநிலயமன்றதுபொறுக்கு *
மன்றுளதென்றனிந்தவையகம்வாழ்வதாக. *

இ-ள். அந்நாட்பெரிய தேவதாருவனம பூமிக்கு மத்தியமல்லாதபடியினாலே அசைந்தபடியைக்கண்டு நாமும் வெற்றியுடைத்தான நடங்கள் சிறிதுபொழுதிற் தீர்ந்தவிட்டோம் உனக்குமிபபோது இவ்விடத்திலேநின்று தெரிசிப்பிக்குங்கூத்தன்று சத்தியமான ஆநந்தநிருத்தத்துக்கு அதிட்டானமான ஞானசபையொன்றுண்டென்றருளிச்செய்தார் இநதவையகம்வாழ்வதாக. ()

அனந்தனுந்தொழுதுபோற்றியடியனேனுய்யத்தேவ *
ரினந்தருமறைகள்காணுதிலகுமன்றுலகிலுண்டாய் *
நினந்தமிலருளாற்காட்டுநினைவுமுண்டாகிநீயே *
வனந்தனில்வந்தாயென்றுல்வாழ்ந்தனனன்றேவென்றான். *

இ-ள். சேடனும் வணங்கித்துதித்து யான் பிறவிக்கடலிலே யாழாமற்கரையேறிப்பிழைக்க அரிபிரமாதிகள் வேதங்கள்காண்பரிதாய்ப் பிரத்தியட்சம்

அநுமானம் ஆகமமென்கிற பிரமாணங்களுக்கும் அப்பாலாய் எப்போதும் எல்லாப்பதார்த்தங்களினும் விளங்காநிற்கும் ஞானசபை இவ்வுலகத்திலே ஓரிடத்திலேயுண்டாய் தேவரீருடைய ஆதியந்தமில்லாத பூரணஞானத்தினாலே காட்டவேண்டுமென்கிற சுட்டறிவுமுண்டாகிச் சர்வவியாபியாயிருக்கிற தேவரீரோ ஏகதேசருமாய்ப் போக்குவரவுமுடையருமாய் அத்தில்லைவனத்தில்வந்தீராகில் கிருதார்த்தனானேன் அன்றோவென்றான்—எ-று. (௬௯)

வலங்கைமான்மழுவோன்போற்றும்வாளரவரசைநோக்கி *
யிலங்குந்திடும்பிண்டமண்டமவைசமமாதலாலே *
யிலங்கைநேரிடைபோமற்றையிலங்குபிங்கலையாநாடி *
நலங்கிளரிமயநேர்போநடுவுபோஞ்சுழுனைநாடி. *

இ-ள். வெற்றிபொருந்தின ஸ்ரீயத்தங்களிலே மானுமழுவுந்தரித்த பரமேசுரர்-புகழ்ந்து வினவுஞ் சேடனைப்பார்த்து தாபரமாயிருக்கிற அண்டசிருட்டியும் சங்கமமான சரீரசிருட்டியுமொக்கு மாதலாலே சரீரத்தில் இடைநாடி யிடத்திலும் பிங்கலைநாடி வலத்திலுஞ் சுழுமுனைநாடி நடுவிலும்போமாறுபோல இந்தப்பரதகண்டத்தில இடைநாடி யிலங்கைக்குநேரோபோம் பிங்கலைநாடி நன்றாகவுயர்ந்த இமயபருவதத்துக்கு நேரோபோம் இந்த இரண்டு நாடிக்குநடுவே போஞ்சுழுமுனைநாடி—எ-று. (௭0)

நாடருநடுவினாடிநலங்கிளர்தில்லைநேர்போய்க் *
கூடுமங்கதனின்மூலக்குறியுளததற்குத்தென்னர் *
மாடுறுமறைகள்காணுமன்னுமம்பலமொன்றுண்டங் *
காடுதுமென்றுமென்றானென்னையாளுடையவையன். *

இ-ள். தாரணாதிகளாசைகூடாதவர்களுக்கு நாடுதற்கரிய சுழுமுனைநாடி நன்மைமிகுந்த தில்லைவனத்திற் செவ்வையேபோய்க்கூடும் அந்தப்பதியில் ஸ்ரீமூலத்தானமுடைய தம்பிரானார் சுயம்புவானகுறியுண்டு அந்தச் சிவலிங்கததுக்குத் தெற்காக நாலுதிக்கிலுஞ்சூழ்ந்து பொருந்தின வேதங்களுககெட்டாத நிலைபெறற அம்பலமொன்றுண்டு அவ்விடத்திலே அநவரததாண்டவஞ்செய்வோமென்றார் என்னையாளுடைய ஐயர்—எ-று. (௭௧)

மற்றதுசிதம்பரத்தவாய்மையான்மாயாநீர்மைப் *
பற்றுடனழியாதென்றும்பயின்றுளதுயிாகளெண்ணி *
னற்றவஞ்செய்தானீடுநாடருஞானநாட்டம் *
பெற்றவர்காண்பர்காணப்பெறுதவர்பிறப்பரன்றே. *

இ-ள். முன்சொன்னஅம்பலஞ் சத்தியமான ஞானகாசமாதலால் நிவிர்த்தியாதி பஞ்சகலாசூநியம் பிறந்த மகாசங்கார காலத்தினுமழியாது ஆதியந்தசூநியமா யெக்காலமும் பொருந்தியுள்ளது சுத்தாத்துமாக்களெண்ணிறந்த சிவபுண்ணியத்தைச்செய்தால் முன்செய்த சிவபுண்ணியத்தினாலே கன்மசாமியம்பிறந்த அளவில் ஆசாரியனாலே சத்திநிபாதமு மலபாகமுமு

ண்டாகிப் பாசச்சேதம்பண்ணி யொழியாதஞானக்கண்ணைப்பெற்றவரோ அரி பிரமாதிகள் நாடுதற்கரிதான சிதம்பரத்தைக்காண்பார்கள் இப்படிக்காண ஞானதிருட்டிபெறாதவர் எண்பத்துநான்கு நூறாயிரமச்சிலும்பிறந்துழல்வர்.

மாயாநீர்மைப் பற்றென்றது மந்திரபதவன்ன புவனதத்துவகலைகள். (௭௨)

நீயினிக்காளவாயுநிலவெரிகதிரார்கண்ணு *
மாயிரஞ்சிரமுங்கண்டாலஞ்சிடுமகிலமுன்னே *
தூயவத்திரியுந்தாரந்துலங்கநசூயைதானுஞ் *
சேயெனநின்னைவேண்டித்திருந்தருந்தவம்புரிந்தார். *

இ-ள். நீயினி யொருபாயஞ் சொல்லக்கேள் நஞ்சுநிறைந்த பேழ்வாய்க ளும் சோமசூரியாக்கினி பிரகாசங்களிலும் மிகுந்த பிரகாசத்தையுடைய கண்களும் ஆயிரம்பணா மவுலிகளுமாயிருக்கக்கண்டால உலகபிராணிகள் மிகப்பயப்படுவார்கள் நெடுநாளைக்குமுன்னே ஒரு இதியாசமுண்டு அஃதெங் ஙனமெனில் பரிசுத்தனான அத்திரியென்கிற ஓரிருடியும் அநசூயையெனகிற பத்தினியும் பிள்ளையில்லாமல் தங்களுக்கு உன்னைப் பிளளையாகப்பெறவேண் டுமென்று விஷ்ணுவைநோக்கித தவஞ்செய்தார்கள்—எ-று. (௭௩)

அரியவர்க்குன்னையீந்தானன்றுநீபிறத்தலஞ்சி *
யிருதுவாய்ப்புநிதையாய்வந்தேற்றவஞ்சலிபபாலெய்தி *
மருவுமைந்தலையோர்பாலமாசுணமாககண்டு *
பரிவினறபயத்தானீப்பபதஞ்சலியானபண்பால். *

இ-ள். விஷ்ணுஉன்னை அவர்களுக்குப் புத்திரனாகக்கொடுத்தான் அப் போதுநீ சனனமாகப்பயப்பட்டு ருதுவாய்ஸ்நானஞ்செய்துபரிசுத்தையாய்க் கரையிலேவந்தேற்ற கையிலேவந்து நீ ஐந்துதலையொருந்தின சிறுபாம்பாகக் கண்டு பரிவினாலும் பயத்தினாலுங் கைவிடப பாதத்திலே விழுகையாலே பத ஞ்சலியென்று பண்புபற்றிய பெயருனக்குண்டாதலால—எ-று. (௭௪)

ஆங்கதுவாகியிந்தவனந்தனுநினைவிறேடும *
பாங்கினனீங்கலாகாபபதஞ்சலியெனனுநாமங் *
தாங்கிநீநாகலோகந்தகுவழிசார்கநாப்ப *
ணோங்கலொன்றுளதுதென்பாலுயாபிலவழியுமுண்டால. *

இ-ள். அந்தவுடலாகி இந்தச்சேஷபுத்தியுடனே சற்குணம் விடப்படாத பதஞ்சலியென்கிற நாமத்தைத்தரித்து நீ நாகலோகத்துக்குப்பொருந்தின வழியே போகக்கடவை நாகலோகத்துக்கு நடுவேயொருமலையுண்டு அதற் குத் தென்புறமாக வுயர்ந்தபெலததுவாரமுண்டு—எ-று. (௭௫)

திடமதன்முடிவுதில்லைத்திகழ்வனமாகும்வாய்தல் *
விடவுடபாலிலாலமென்னிழறன்னிலந்தத் *
தடவரைக்கொழுந்துமூலத்தானமாஙகுமியாயிந்தப *
புடவியிலமராபோறறுமபொறபமரறபுததத. *

இ-ள். சத்தியமாக அந்த பிலத்துவாரத்தின் முடிவு விளங்குந் தில்லைக் காடாயிருக்கும் அந்தபெலத்துவாரத்தை நீங்கின அளவில் வடக்காக ஆலமரத்தின் குளிர்ந்தநிழலில் நாம் உனக்குமுன்னேசொன்ன பெரியமலையின் கொழுந்து மூலத்தான லிங்கமூர்த்தியாய் இப்பூமியில் தேவர்கள்தொழும்படியான பொலிவுள்ள அற்புதத்தையுடையுது—எ-று. (௭௬)

பூசையங்கியற்றிக்கூத்தும்புந்திசெய்தரும்புலிககா *
லாசிலாமுனியிருந்தானவனுடனமர்கநாமு *
மோசைகொள்பூசம்பொன்னேடுறுதினம்பொருந்துமுச்சி *
தேசுறுநடநீர்காணசசெய்துமென்றருளிசசெய்தான். *

இ-ள். அவ்விடத்திலே நம்முடைய நிருத்தங்காணவேண்டுமென்று மனசாரவேண்டிக்கொண்டு பூசைசெய்து அரியவியாக்கிரபாதனென்கிற சுத்த ருஷி யிருக்கிறுன் அவனுடனே நீயும்போய்க்கூடுவாயாக நாம்பிரசித்தமான தைப்பூசத்தில வியாழக்கிழமையுடனேகூடின சித்தயோகத்தில் மத்தியான காலத்திலே அவ்விடத்திலே பிரகாசமான ஆநந்தநிருத்தத்தை நீங்கள் காணப்பண்ணுவோமெனறருளிச்செய்தார்—எ-று. (௭௭)

திருவருள்பெற்றமற்றைத்திகழனந்தனும்விழுந்து *
பரிவொடுபணிந்தெழுந்துபரவசனுகிநிற்பப் *
புரிகுழலுமையாளோடும்பூதமுங்கணமும்போற்ற *
விருவிசும்பதனிலவிண்ணோரிறையவனுறமறைந்தான். *

இ-ள். அநுக்கிரகம்பெறறதனாலே விளங்கினசேடனும் பூமியிலேவிழுந்து பத்தியுடனே நமஸ்கரித்து எழுநது பரவசனுகிநிற்ப நெறித்த கூநதலையுடைய பார்வதியாரோடு பூதங்களுங் கணநாதர்களும்போறற பெரிய ஆகாயத்துக்குநடுவே தேவதேவனாநதரத்தானம்பண்ணிஞா—எ-று

இதிற்பெரியவிசுமபென்றது நாலுபூதங்களுக்கும் இடங்கொடுத்து நிறகையாலெனக்கொள்க. (௭௮)

அண்ணலார்மறைந்தபோதங்காசைநேராசையோடு *
மண்ணிலேவீழ்ந்திறைஞ்சிவானவனருளாலந்தத *
துண்ணெனுமுருவநீங்கித்தொழுபதஞசலியாமேனித் *
திண்ணமாரிலிங்கமாகசசிலபகலசிந்தைசெய்தான். *

இ-ள். அவ்விடத்தில் பரமேஸ்வரர் மறைந்த அளவில் அத்திக்கைநோக்கி அன்புடன் பூதலத்திலேவிழுந்துபணிநது தம்பிரானுர் திருவருளினாலே கண்டார்பயப்படுகிறசேடனுருவம்போய் கண்டவர்கள் நமஸ்கரிக்கும் பதஞ்சலிரூபம்பெற்றுச் சிலகாலம் பரமேஸ்வரனைத்தியானஞ்செய்தார்—எ-று.

வேட்டுவறகுறித்தபசசைமென்புழுப்போலநாதன் *
காட்டியமேனிகொண்டுகண்டதுதொழுதுபண்டை *

நாட்டெதிரணையவண்ணனயந்தவாகேட்டுநாக *
ரீட்டமுந்தலைவரானுரியாவருமெதிர்கொண்டார்கள். *

இ-ள். வேட்டுவனாகிய குளவியைக்குறித்திருந்த பச்சைப்புழுவானது குளவியின்மேனி கொண்டாற்போலப் பதஞ்சலிவேடத்தை நினைத்திருந்து தம்பிரானுர் திருவுள்ளத்தினாலேகற்பித்த அந்தவேடத்தைக்கொண்டு தனக்குப்பதஞ்சலிவேஷமாகக்கண்டு இந்தசரீரத்தைக்கூட்டின அருளைத்தொழுது பழையநாகலோகத்துக்குச் சமீபமாகச்சென்று பொருந்த நம்முடையிராசரு வந்தாரென்ற பிரியவார்த்தையைக்கேட்டு வாசுகி தக்கன் கார்க்கோடன் பதுமன் மகாபதுமன் சங்கபாலன குளிகன் அநந்தன்முதலான நாகராசாக்களுமெதிர்கொண்டார்கள்—எ-று. (௮0)

மண்டிவந்தெதிர்கொண்டார்களுமாசுணவரசர்சூழ *
வண்டர்தம்பெருமானல்குமருவரையமலன்மேனி *
கண்டுவந்திறைஞ்சநின்றகார்க்கோடன்முதலோர்போற்றி *
விண்டுநீபணிவானென்கொல்வேண்டியதென்றுரைத்தார். *

இ-ள். நெருங்கிவந் தெதிர்கொண்டுமுழங்கப் பிரியவார்த்தைகள்சொல்லுஞ் சர்ப்பராசாக்கள்சூழவந்து தேவதேவனருளிச்செய்த பெரியமலையாக மூலத்தானமுடையதம்பிரானுர் திருமேனியைக்கண்டு பிரியத்துடனே நமஸ்கரிக்கச்சூழநின்ற சர்ப்பராசாக்களில் கார்க்கோடன்முதலான இராசாக்கள் இந்தமலையை ஒருபொருளாகஎண்ணி நீர் விரும்பவேண்டியகாரணம் என்ன என்றார்கள்—எ-று. (௮௧)

காதலினோக்கியுள்ளகைப்பொருள்கண்டோர்யார்க்கும் *
பாதிடுமுரவோர்போலிப்பருப்பதம்பாதலகீழ்ப் *
போதமார்தானமெல்லைதில்லையாய்ப்பொருந்திவாழு *
நாதனூர்காணுமென்றுகூறினுனுரகராசன். *

இ-ள். தங்களிடத்துள்ள பொருள்களையெல்லாம் மிகுந்தஆசையுடனே கண்டவர்எல்லார்க்கும் வரையாமற்பகுந்து கொடுக்கும் பெரியோரைப்போல இந்தப்பர்வதம் பாதாளம்ஏழுக்கும் கீழாகச்சொல்லப்பட்ட சொற்பொருள்முடிந்தவிடமதிட்டானம் முடிவுக்கு எல்லைசிதம்பரமாகப்பொருந்தி விளங்கும் நம்முடையசுவாமிதான் காணுமென்று நாக இராசன்சொன்னுன

இதிற்பாதலக்கீழ்என்பதற்கு பாதாளமேழுனுங்கீழ் சொறகழிவு பாதமலமொன்கிற பிரமாணத்தையும் கண்டுகொள்க. (௮௨)

அலைபணத்தலைவாயாமுனறிந்தவாகேட்டியாயிற் *
றலைவனேமலையென்றெண்ணிசசங்கித்துமிருந்துமிந்தப் *
பிலவழிகீழுற்றெல்லைபெற்றிலமேலுஞ்சாலச *
செலவரிதென்றுமீண்டுந்தெளிவிலமென்றுசெப்பி. *

இ-ள். அலைபோனறபடத்தையுடைய அரசனே யாங்களறிந்த முறைமையைநீகேட்பாயாகில் இந்தச் சுவாமியே இந்தமலையென்றெண்ணிச சந்தேகித்

திருப்போம் பின்னையுமிது இன்னதென்றறியவென்று இந்த பிலத்துவாரத்தி ற் கீழ்நோக்கிப்போகிற வளைவழியேசென்றும் முடிந்திடங் காணப்பெற்றோ மில்லை யிந்த வளைவழியே மேனோக்கிப்போகியும் போகப்படாமல் மீண்டுவ ருவோமாதலாலிது எங்களுக்குத்தெரியப் போகாதென்றுசொல்லி—எ-று.

அத்தகுவாய்மையாலேயவர்களாதரித்துப்போற்றிப் ✽
பத்தியாலிறைஞ்சக்கண்டுபதஞ்சலியவரைநீங்கிச ✽
சுத்தமார்பிலம்வணங்கித்துணைவனேதுணையாவுன்னி ✽
யித்தலந்துயரநீங்கவேறுவானேறலுற்றான். ✽

இ-ள். அவர்களப்படிச் சொன்னதினாலே யிந்தமலையைப் பெரியசத் தியமான சிவரூபமென்று அறிந்து சர்ப்பராசாக்களெல்லாரும் ஆசையும் பத் தியும்பொருந்தி நமஸ்கரிக்கக்கற்பித்துப பதஞ்சலிமகாருஷி சர்ப்பராசாக்க ளைநீங்கிச் சுத்தமான பிலத்துவாரத்தை நமஸ்கரித்து உயிர்த்துணைவனை வழி த்துணைவனாகத் தியானித்து இந்த உலகத்தில் ஆன்மாக்கள் துக்கமான நரக லோகத்தினின்று சிவலோகத்துக்கேறும்படி நாகலோகத்தினின்று பூலோக த்தில்வர பிலததுவாரவழியாய் ஏறினார்—எ-று. (அச)

அரவணையாடவாடுமண்ணலஞ்செழுத்துங்கண்ணாக் ✽
காவிலாவழியாலெண்ணில்காலங்கள்கழியவேறிக் ✽
குரைகடன்மணியுமுத்தும்பவளமுங்கலமுங்கொண்டு ✽
திரைநிரைவணங்குந்தில்லைத்திருவெல்லைசேரவந்தான். ✽

இ-ள். திருவரையிற் பாம்பாடும்படி நிருத்தஞ்செய்யும் பரமேசுரன் ப ஞ்சாக்ஷரமேகண்ணாக வெளியானவழியா லெண்ணிறந்தகாலங்கழிய ஏறிஆ ரவாரஞ்செய்யுங்கடலானது மாணிக்கமும் முத்தும்பவளமும் மரக்கலங் களும் கொண்டுவந்து காணிக்கையிட்டுத் திரைநிரையாலே வணங்குந் தில்லைத்திருவெல்லைக்குச்சமீபமாகவந்தார—எ-று. (அரு)

உருகிடவுள்ளங்கண்ணீரோவாமலொழுகவுச்சிக் ✽
கரகமலங்கள்கூம்பக்கணபணமணிவிளங்கத் ✽
திருவருள்வளரஞாலஞ்சிவமயமாகமாயா ✽
விருள்கெடஞானபாநுவெனநிலமேலெழுந்தான். ✽

இ-ள். பூபாரந்தாங்குகிறோமென்கிற அகங்காரத்தாலும் பதினாலுலோக ங்களையுஞ் சிருட்டிக்கதபிரமாவையுந் திருவுந்தியிற்றோற்றுவித்த விஷ்ணுவை த்தாங்குகிறோமென்கிற அகங்காரத்தாலும் சிக்கென்று வச்சிராகாரம்போன் றிருக்கின்ற அந்தகரணந் தேவதாருவனத்தில் நிருத்தம் விட்டுணுவின்பக்கலி லே கேட்டு மெத்தென்று பின்பு கயிலாயபாரிசத்தில் ஸ்ரீகண்ட பரமேசுர ன் தீக்கையினாலே நெகிழ்ந்துடைந்து பின்பு நாகலோகத்திற் சுயம்புலிங் க தரிசனகாரணத்தினாலும் பிலத்துவாரத்தி லுண்மையினாலுஞ் சத்திநி பாதம் உதித்தமையாலும் இதற்கு முன்காணாத வாச்சரியத்தைக் காண்கை யினாலும் நீராளமாயுருக சிற்றாற்றில் பிரமப்பிரளயம் போலக்கரை புர

னடு கண்களாலே யொழியாத தாரைகொள்ள உச்சியிற்குவிந்தகராம்புய ங்களிந்தத் தலத்தில் தாபரசங்கமாதிகள்சேர்ச் சிவமாகத்தோன்றுதலா ல் அநவரதமுங்குவிந்து செல்ல நெருங்கின பணாரத்தினங்கள் ஞானப் பிரகாசத்தினாலே விளங்க அநாதியே யாணவசத்தியைப் பிரேரித்திடுந மோமயமாகிய திரோதானம் அருளாய்ப் பிரகாசிப்பிக்க இந்தப்பூலோகத்தி ல் ஆன்மாக்கள் சிவப்பேற்றைப்பெற ஒழியாதவாணவமொழிய இப்படியெழும் ஞானசூரியனைப்போலே அப்பெலத்துவாரத்திலே நின்று பூமியிலெழுந்தார்.

எழுந்தருள்வனமிறைஞ்சியிருந்தவாகண்டுகொணூச் *
செழுந்தவவுருவைநோக்கிததிருமுனிதிகைபபத்திங்கட் *
கொழுந்தணிவேணியண்ணலருளினாற்கொழும்புலிககா *
லழுந்துமாதவனைநேர்சென்றுதரவதனுற்கண்டான். *

இ-ள். எழுந்திருந்தமாத்திரத்தில் நிட்களமான தில்லைவனத்தை நமஸ்க ரித்து இருந்தபடியைக்கண்டு இதற்குமுன் கண்டறியாத திவ்வியமானதபோ வேடத்தைப்பார்த்து வியாக்கிரபாதர் இவராரோஎன்று திகைப்ப இளம் பிறையை வேணியிலேபொருந்தின சுவாமியருளிச்செய்தபடியே கொழுவிய புலிக்காலபொருந்தின முனியின்எதிரேசென்று மிகுந்த ஆதரத்தினாலே பத ஞ்சலிகண்டார்—எ-று. (அஎ)

மங்கலவுருவாமேனிமாமுனியதிசயித்துச *
செங்கைகளேந்திமேனிததிசழவுகண்டுவந்துசெலவா *
வெங்குறைவாய்நீபோவதெவவனவேதுநாமரு *
சங்கைகளகலவெலலாஞசாறறுகவென்றுசெபப. *

இ-ள். திவ்வியசரீரத்தையுடைய வியாக்கிரபாதமுனி மிகவும் ஆச்சரிய ப்பட்டு பதஞ்சலியினுடைய தேசசுமிகுந்த சரீரத்தைக்கண்டு இருகை யுமேந்தி யுபசாரஞ்சொல்லி அருட்செல்வனே நீ யெங்கேயிருப்பாய் நீயெ வவிடங்குறித்துப் போகின்றாய் உனதுபெயரேது என்னுடையசந்தேகங் கெட இவைகளெல்லாம் வருத்தமுச்சொல்வாயாகவென்று கேட்கச்சொல் லுவார்—எ-று. (அஅ)

அடிபுலித்தாளோய்கேள்யானனந்தனுநந்தமான *
நடநெடுவனத்துளண்ணனயந்தவாநலகியென்னை *
நெடியவனமளிகொள்ளாநீமையானீபபநீங்கித் *
தடவரைமருங்கேயானுந்தவம்பலகலாஞசார. *

இ-ள். பாசச்சேதம்பண்ணியுள்ளவியாக்கிரபாதரேகேட்பீராக நான் ஆதிசேஷன் உயர்ந்ததேவதாருவனத்திலே தம்பிரானனந்தநிருத்தம்பண் ணினபிரகாரத்தை விஷ்ணுவெனக்குஅநுக்கிரகித்து என்றுதரத்தைக்கண்டு என்மேலே விஷ்ணு பள்ளிகொள்ளாமற தபசுபண்ணக் கற்பிக்க யானும போய்ப் பெரிய கயிலாயபாரிசத்திலே நெடுங்காலந்தபசுபண்ண—எ-று. ()

வாசமாமலரோனுகி வாய்மைகளளந்துதானுந்
தேசினிலணைந்துவந்தென் சிரமிசைக்காமிருத்திப்
பாசமதகலநாயேன் பதஞ்சலியாகநல்கி
யாசிலாவுபதேசங்களளவிலாவகையளித்து.

இ-ள். வாசனைபொருந்தியதாமரைப்பொகுட்டில் வீற்றிருக்கும் பிரமனு கி வந்துஎன்னுடைய சித்தசுத்தியறிந்து பின்னர் தம்முடைய திருமேனியை ப்பொருந்தி எனக்கு நேரே இடபத்தையுகைத்தருளிப் பஞ்சபாசநீங்க என் றலையிற் சிவாஸ்தம்வைத்தருளி அடியேன் பதஞ்சலிரூபங்கொள்ளும்படி திருவுள்ளஞ்செய்தருளி குற்றமில்லாத உபதேசங்களினுலே யொன்றுலு மளவிடப்படாத தம்முடைய உண்மையுமுணர்த்தி மேலும் ஒன்று அருளிச் செய்ததுங் கேட்பாயாகவென்ருர்—எ-று. (கo)

வேண்டிநங்கூத்துக்காண வியாக்கிரபாதனென்னு
மாண்டகுமுனியுந்தில்லைவனத்தினனவனுநீயுந்
தாண்டவங்காண்டிர்நாகத்தலத்துயர்பிலத்தாலேறி
யாண்டிருவென்றுனென்றுனருமுனியயர்ந்துவீழ்ந்தான்.

இ-ள். நம்முடைய ஆநந்தநிருத்தங் காணவேண்டி வியாக்கிரபாதனெ ன்னும் பேரையுடைய பெரியமுனியும் தில்லைவனத்திலேயிருக்கிருன் அந்தமு னியும் நீயுமாகக்கூடி நம்முடையதாண்டவத்தைக் காணக்கடவீர் நாகலோக வழியாகச்சென்று பிலவழியாலேயேறி அவ்விடத்திலே யிருவென்று திருவுளம்பற்றினுரென்ற மாத்திரத்திலே வியாக்கிரபாதமுனி பரவசராய் வீழ்ந்தார்—எ-று. (கக)

அருள்புரிகருணைவெள்ளத்தழுத்தினுமெனனனையண்ண
றிருவுளம்பற்றயான்முன்செய்தவமென்னேவென்றென்
றுருகினுன்கண்ணீர்வாரவுயர்பதஞ்சலிநீதந்த
கரவிலாவருளாமென்றுகைகளாற்கட்டிக்கொண்டான்.

இ-ள். தம்பிரானுரொளிபொருந்தின கருணைசாகரத்திலே என்னையாழ் வித்தார் இவ்வாறு திருவுள்ளம்பற்ற நான் முனனேசெய்த சிவபுண்ணியமே தோவென்று பலகாலும்உரைத்து அருள்மேலிட்டுக் கண்ணீர்தாரைகொள்ள நின்றுருகினுன் உருகி பெரிய பதஞ்சலியே நீ கொண்டுவந்துதந்த பிரியவார் த்தைகள் மறைப்பில்லாத வருள்தானேயென்றுவந்து கைகளினுலே கட்டிக் கொண்டார்—எ-று. (கஉ)

திண்ணமார்சிறியோன்பெற்றசெல்வமாமென்னஞானக்
கண்ணினுலமலன்கூத்துக்கண்டுளங்களித்தான்போன்றங்
கெண்ணிலாவின்பமுற்றங்கிலங்குபொற்கயத்துமூழ்கப்
பண்ணிநாண்மலரான்மூலப்பரமர்தாள்பணியவுய்த்தான்.

இ-ள். வலிமைபொருந்திய வறுமையடைந்தவன் செல்வம்பெற்றதன்மைபோலவும் ஞானதிருஷ்டியினாலே சிவபெருமானுடைய ஆநந்தநிருத்தங்கண்டு சித்தங்களித்தார்போலவும் எண்ணிலாதபர மாநந்தம்பொருந்தி அவ்விடத்தில் விளங்கும் புண்டரீகப் பொய்கையிலே மூழ்கப்பண்ணி நாட்பூவினாலே திருமூலத்தானமுடைய தம்பிரானார் ஸ்ரீபாதத்திலே நமஸ்கரிப்பித்தார்—எ-று. (௧௩)

வலங்கொண்டுகுடபாற்றெய்வவாவியின்மூழ்குவித்து
நலங்கிளர்தன்னையாண்டநாதனைவணங்கநல்கித்
தலம்புணர்பன்னசாலைதகுவித்துச்சாகமூல
பலங்களுமிலங்கப்பின்னாட்பரிந்தருள்விருந்தளித்தான்.

இ-ள். பிரதக்ஷணமாகவந்துசென்று மேற்புறத்திற் றிவ்விய பொய்கையில்மூழ்குவித்துக் கிருபையின்மிகுதியினாலே தம்மையாண்ட திருப்புலீச்சுரமுடைய தம்பிரானாரையும் வணங்குவித்து அவ்விடத்திற்பொருந்தின பன்னசாலையிலேகொண்டுபோய் அன்றுகழித்து மறுநாள் மிகுந்தபரிவுடனே சாகமூலபலாதிகளினாலே விருந்திட்டார்—எ-று. (௧௪)

மனக்களிகூருநாளில்வனமதன்குடபாற்றெய்வப்
புனற்றடங்கண்டுமூழ்கிப்புணர்குணகரைமேற்போற்றத்
தனக்குமோர்நாயனாரைத்தாபித்துவணங்கித்தங்க
வனித்தமில்சாலைவாவியதன்வடபாலமைத்தான்.

இ-ள். இருவரும் அன்பினாலே களிகூர்ந்திருக்குநாளில் ஓர்நாள் அந்தப்புலீச்சுரத்துக்குமேற் புறத்திற்போய்த் திவ்வியமாயிருக்கிற ஒருபொய்கையைக்கண்டு ஸ்நானஞ்செய்து அந்தக்குளத்துக்குக் கீழ்கரையிலே தாம்வழிபடதமக்கும் ஒரு சிவலிங்கப்பெருமானைத் தாபித்துப் பூசித்து இருக்க நித்தமான சலிப்பில்லாத பன்னசாலையைக்குளத்துக்கு வடக்கேகட்டினார் பதஞ்சலிமகாமுனி—எ-று. (௧௫)

ஆங்கிடமாகநாளுமமர்ந்தனந்தேச்சுரத்துந்
தீங்கில்வண்புலீச்சுரத்துந்திகழ்சீர்மூலத்தானத்து
மோங்கியநாதன்பாதமுறவுறவணங்கியாட
லீங்களித்தருளுகென்றங்கிருவருமிருந்தாரன்றே.

இ-ள். அந்தப்பன்னசாலையே இருப்பிடமாகப்பொருந்தி நாள்தோறும் திருவனந்தேச்சுரத்திலும் குற்றமில்லாத வளப்பம்பொருந்திய திருப்புலீச்சுரத்திலும் விளங்கும் ஸ்ரீமூலத்தானத்திலும் விளங்கிய தம்பிரானார் திருவடிகளைப்பற்றிப் பொருந்த அருச்சித்துவணங்கி ஆநந்தநிருத்தம் இவ்விடத்திலே தந்தருளும்என்று பூசாந்தத்திலே வேண்டிக்கொண்டு அந்தத்தலத்திலேஇருவரும் தபசுபண்ணிக்கொண்டு இருந்தார்கள்—எ-று. (௧௬)

வெண்டிரையொலியார்தில்லைமிருவனவிலங்கியாவும்
பண்டைநம்புலியனன்றிப்பாம்பனும்வந்தானென்று
திண்டிறற்களநிமிர்த்துச்செவிகளுஞ்சிலிர்த்தியேங்கி
மண்டியகாலஞ்செல்லமருங்குறவணைந்தவன்றே.

இ-ள். வெண்மையாகிய அலைகளையுடைய கடலோசைமுழங்குந் தில்லை வனத்தில்நெருங்கின மிருகாதிகளெல்லாம் முன் நம்முடனேகூடித்திரிகிறபு லியனுமன்றி இப்போதுஒரு பாம்பனும்வந்து இவனைக்கூடினான் அதேதோ வென்றுபயப்பட்டுத்திண்ணியதிறலையுடைய கழுத்துயர வெறித்துப்பார்த்து ச் செவிகளும் சிலிர்த்திப்பார்த்துப் பயப்பட்டு அகலநின்று நெடுங்காலஞ் சென்று பழகினபின் முன்போலே கூடச் சஞ்சரித்தன—எ-று. (கஎ)

நாடொறுமமையந்தோறுநவநவமாகவந்து
கூடினரநேகராகக்குழகனைவழிபட்டேத்தித்
தாடலையுறப்பணிந்தோர்தழைநிழற்சார்ந்திருந்தென்
பூடுருகிடுமாறண்ணலுரைத்தவாவிரித்தவாயில்.

இ-ள். இருவினைஒப்புஞ் சத்திநிபாதமுமுடைய ஆன்மாக்கள் நாள்தோ றும் காலங்கள்தோறும் புதுமைபுதுமையாகவந்து அநேகம்பேர் கூட்டமா கித் தம்பிரானை அருச்சித்துத் தோத்திரஞ்செய்து சீர்பாதஞ் சென்னியிற் பொருந்தவணங்கி ஒரு குளிர்ந்தமர நிழலைப்பொருந்தியிருக்க என்புந்தசை யும் நீராளமாம்படி தம்பிரானருளிச்செய்த பிரகாரத்தைப பதஞ்சலிசொ லலிப் பாராட்டிக்கொண்டிருந்த அவதரத்திலே—எ-று. (கஅ)

வந்தவர்சொலக்கேட்டமன்றுளதென்றவெல்லை
சிந்தையாலிறைஞ்சிசென்றுசிரமுறப்பணிந்துகூத்துப்
புந்தியால்வணங்கிமேனிபுளகமும்பொலியப்போந்தங்
கிந்தவாறெண்ணில்காலமிருவருமேகுவித்தார்.

இ-ள். வந்தமுனிவர்கள் ஒருஞானசபை இவ்விடத்திலுண்டென்றுசொ ல்லக்கேட்டு அவவெல்லையைச் சித்தத்தினாலே நமஸ்கரித்து அவ்விடத்திலே போய்த் தலையாரவணங்கி ஆநந்தநிருத்தத்தையும் புந்தியினாலேவணங்கிப் பாவனாதரிசனத்தினாலே தேகம் புளகத்துடனேபொலியமீண்டு இப்படியே அவ்விரண்டுபேருடனும் இருந்து எண்ணிறந்தகாலத்தைப்போக்கினார்கள். ()

பதஞ்லிச்சருக்கம்

முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - கநஎ.

# நடராசச்சருக்கம்.



காலமுமநேகஞ்சென்றுகழிந்தபின்கடவுள்கூறுஞ்
சீலமார்சித்தயோகந்தெளிவுறநாடிச்சிந்தை
சாலவுமகிழ்ச்சிபொங்கத்தருக்குமிக்கிருக்குமிக்குப்
பாலமுதனையநர்மம்பயில்வுமாய்முயலுநாளில்.

இ-ள். இப்படி அநேககாலஞ்சென்றபின் கடவுளருளிச்செய்த பரிசுத்தம் நிறைந்த சித்தயோகம்விளங்கக்கண்டு சித்தமிகவுங்களிகூர வளப்பமிகுந்திருக்கிற கரும்பு ரசம் பால் அமிர்தம் இவைகளையொத்த ஐந்தெழுத் தருள்நிலையிலேபொருந்தித்தவமுயலுநாளில்—எ-று. (௧)

இங்கிவர்தம்பாலன்பாலிறைநடக்கருத்தராய்முற்
றங்கியவாறைஞ்ஞூறுதாபதரணையநீரிம்
மங்கலதினத்துவாழுவம்மினென்றுரைத்துத்தாமும்
பங்கமிலதுகணத்திற்பன்முறையெண்ணியெண்ணி.

இ-ள். இவ்விடத்திருந்தரிஷிகள் எதிரோ அன்பினாலே கடவுள் நிருத்தங்காணுங்கருத்தினராய் முன்னேவந்திருந்த மூவாயிரம் பிரமரிஷிகள் வந்தணைய நீங்களும் இந்தமங்கலமான சித்தயோகநாளிற் பெருவாழ்வுபெறவாருங்களென்றுசொல்லித் தாமுங்குறைவற்ற சித்தயோகத்தை ஒரு கணப்போதில்பலகால் அலகிட்டு எண்ணி எண்ணிப் பார்த்துப் பார்த்து இருந்தார்கள்—எ-று. (௨)

கறவையான்வரவுபார்க்குங்கற்றினமெனவுங்கார்சே
ருறையுணவுணர்ந்துநோக்கியோய்ந்தபுள்ளெனவுமோங்கற்
செறிமுகின்முழவுகேட்குந்திகழ்மயிற்றிரளும்போல
விறையவனடமேசிந்தித்திடைத்தினங்கடத்திறார்கள்.

இ-ள். தாய்ப்பசு எப்போதுவருமோவென்று பார்த்துநிற்கும் கன்றுகூட்டம்போலவும் மேகத்தைப்பொருந்து மழைத்துளி யுணவைப்பார்த்து எப்போதுமழைபெய்யும் என்று வாடியிருக்குஞ் சாதகப்புள்ளுப்போலவும் முழவின்னொலியையொத்த மலைத்தலையிற்செறிந்தமேகத்தின் முழக்கங்கேட்கவிரும்பும்விளங்கும்மயிற்கூட்டம்போலவும் தம்பிரானார் நடனத்தைச் சிந்தித்துநடுவுள்ளநாட்களைக் கழித்தார்கள்—எ-று. (௩)

வென்றிகொளங்காண்முன்னாள்வெய்யவன்விரைந்துவெள்ளிக்
குன்றினைநண்ணியண்ணல்கூத்தயர்தரவகன்று
னென்றமையறிந்தான்போலங்கிராவழிபோந்துதில்லை
யொன்றியகடற்பாற்றோன்றியெழுந்துவந்துச்சியுற்றான்.

இ-ள். வெற்றிபொருந்தி யெல்லாயோகங்களுக்கு மேலான அந்தவியாழக்கிழமை பூசமான சித்தயோகத்துக்கு முன்னாள் ஆதித்தன்விரைந்து சென்று கயிலாயத்தைப்பொருந்தித்தம்பிரானார் சிதம்பரத்திலே நிருத்தஞ்செய்ய எழுந்தருளுகிறார் என்கிறசெய்தியை அறிந்தவனைப்போல அங்கு நின்றுங் கடுக இராவழிபோந்து தில்லைவனம்பொருந்தின கீழ்கடற்பால் தோன்றி ஆகாசமார்க்கமாகவந்து நடுப்பட்டான்—எ-று. (௪)

இரவியுமுச்சியெய்தவிருகரமுச்சியெய்த
வருபவரெதிரோம்வந்தான்றேவர்கடேவன்வந்தா
னரியயர்பெருமான்வந்தானென்றெழுவதற்குப்பின்னே
பரவியவொலியுங்கேளாப்பார்மிசைபபதறிவீழ்ந்தார்.

இ-ள். ஆதித்தனும் ஆகாயத்தின்மத்தியில்வர இரண்டுகைகளும் உச்சியிற்பொருநதக்குவித்தவைத்துக்கொண்டு தறகாலத்திலே நிருத்ததெரிசனம் பண்ணவரும்ரிஷிகள்எதிரோ ஓம்வநதான் தேவர்கள் தேவன்வந்தான் இருவர் தேடுதற்கரியான்வந்தான் என்றுதற்காலத்திலே சங்காதிவாத்தியங்கள் தொழிறபடுவதற்குப்பின்பாக வீசிய*தரங்கநியாயமாகப் பரந்துவருமொலிகேட்டு மூர்ச்சித்துத்தரையில் வீழ்நதார்கள்—எ-று. (௫)

ஆயிரமதியுதித்தவருவரைபோலவேத
மாயிரம்வகையாலோதுமதுதகப்பானுகம்ப
ராயிரமுகத்திரண்டாயிரங்கரத்தாலணைக்த
வாயிரஞ்சங்குமோமென்றறைந்தனதழங்கவங்கண்.

இ-ள். ஆயிரஞ் சந்திரர்களுதித்த பெரியமலைபோலவும் வேதம் ஆயிரம் முகமாகக் கோஷிக்கிறதுபோலவும் பானுகம்பரென்கிற கணேசுவரர் ஆயிர முகத்திலும் இரண்டாயிரங்கரங்களிலும் பொருநதவைத்த ஆயிரம்சங்கும் எல்லாங்கேட்பப் பிரணவோச்சாரணம்பண்ணின அவ்விடத்து—எ-று.

மலை, பானுகம்பர்சரீரம், மதி சங்கு, வேதம் ஓசையுமெனக்கொள்க. (௬)

நடமுபல்விரகுந்தாளகதியுநல்லருளாற்பெற்ற
வடகுவடனையதோள்களாயிரமுடையவாணன்
சுடர்விடுகடகக்கையாற்றொம்மெனப்பன்முகத்த
குடமுழவெழுமுழககங்குரைகடன்முழககங்கொள்ள.

இ-ள். தாண்டவாதி பேதங்களும நடத்திலுண்டான விசாரங்களும் அநந்தமானதாளபேதங்களும் தாளத்திலுண்டான வழிகளும் தம்பிரானாருடைய நல்லருளினாலே பெற்ற மேருவையொத்த தோள்கள் ஆயிரமுடையவாணாசுரன் ஒளிவிடபபட்ட கடகம்பொருநதின கைகளினாலேமுழக்கதொ

* தரங்கநியாயம என்பது - ஒரு அலைக்குபபின் மறுஅலைவருதல்.

ம் என்கிற அனுகரணவோசையோடேகூடின பலமுகத்தினையுமுடைத்தான குடமுழவிலே எழாநின்றவோசை ஆரவாரம்பொருந்தின எழுகடலின்முழக்கத்தையும் கவுளீகரித்துக்கொள்ள—எ-று.

தாண்டவாதிபேதங்கள் பரதநூலும் அந்நூல்முற்றுணர்ந்தவர்களும் இன்மையின் விவரித்துஎழுதாதுவிடப்பட்டன.

ஐந்துதுந்துபியுமாசிலருமறையொலியுநீடு
கந்தருவங்கள்கூடுங்கானமுங்கடவுள்பாதத்
தந்தமிறிருச்சிலம்பினரவமுங்கேட்டாரும்பர்
சிந்தியமந்தாரத்தின்செழுமலர்தெரியக்கண்டார்.

இ-ள். தோற்கருவி துளைக்கருவி நரம்புக்கருவி கஞ்சக்கருவி கண்டக்கருவி யென்கிற பஞ்சவாத்தியங்களும் குற்றமில்லாத வேதகோஷமும் பெரியயாழிற் கூடுங்கானமும் தம்பிரானார் ஸ்ரீபாதத்திலே ஒழிவில்லாத திருச்சிலம்பினதோசையுங் கேட்டார்கள் தேவர்களாலே வருஷிக்கப்பட்ட வளமந்தாரத்தின் மலரைப் பூமியிலேதெரியக் கண்டார்கள்—எ-று. (அ)

தாகத்திற்றண்ணீரோசைதகவொலிசெவிமடுத்து
மோகித்தாரெழுந்தாராற்றார்முகமெலாங்கண்ணீர்வாரச்
சோகித்தார்தொழுதார்போற்றிதுணைவனேபோற்றிதோன்றா
வாகத்தாயருளாயென்றென்றலறினார்வாய்களார.

இ-ள். பாலைநிலத்தில் நடப்போர்தண்ணீர்த் தாகமேலிட்டு அருவியோசைகேட்டு அருந்தியும் தாகந்தணியாமல் வருந்துமவர் விடாய்த்து விழுந்ததுபோலத்தம்பிரானா ரெழுந்தருளுகிற ஆர்ப்பரவங்கேட்டுங் கட்புலன்படாதிருத்தங்காணமல் மோகித்துவிழுந்தார்கள் பரவசமாக எழுந்திருந்தார்கள் பொறையாற்றார் முகமெலாங் கண்ணீர்வாரப்பொருமினார் நமஸ்கரித்தார் தோத்திரம்பண்ணினார் உயிர்த்துணைவனே இரட்சிதோன்றாத்திருமேனியுடையவனே யருள்வாயாகவென்றென்று வாய்விட்டு அலறினார்கள்—எ-று. (௯)

எண்ணருங்காதல்கூருமிருவருங்காணஞானக்
கண்ணினைநல்கமுன்னைக்காரிருள்கழிவுற்றின்ன
வண்ணமென்றறியவாராவளரொளிமன்றுண்மாதோ
டண்ணனின்றாடுகின்றவாநந்தநிருத்தங்கண்டார்.

இ-ள். எண்ணிறந்தபத்திபொருந்தின வியாக்கிரபாதரும் பதஞ்சலியுங்காண இவர்களுடையபரம குருவாய் ஸ்ரீகண்டபரமேசுரர் ஞான திருட்டியை அநுக்கிரகிக்க அநாதியே சகசமான ஆணவத்தை நீங்கி இத்தன்மையதென்று அறியக்கூடாத மிகுந்த ஞானப்பிரகாசமான மன்றில் ஞானசத்தியை அதிட்டித்து தம்பிரானார் நிருத்தஞ்செய்யக்கண்டார்கள்—எ-று. (௧0)

திருவடிநிலேயும்வீசுஞ்செய்யகாலுஞ்சிலம்பு
முருவளரொளியும்வாய்ந்தவூருவுமுடுத்ததோலு
மரைதருபுரிவுங்கச்சினணிகளுமழகார்ருந்தி
மருவியவுதரபந்தகஙேகாப்புநூல்வாய்ப்புமார்பும்.

இ-ள். நின்றருளிய ஸ்ரீபாதமும் தூக்கியருளிய சிவந்தபாதமும் திருவடிகளிற்சாத்தியருளிய திருச்சிலம்பும் திருமேனியில் மிகுந்தபிரகாசமும் அழகியதிருத்தொடையுஞ் சாத்தியருளிய புலித்தோலாடையும் அதுதரித்த அணியும் அவ்வரையிற்சாத்தியருளிய கச்சினழகும் அழகுநிறைந்த திருவுந்தியிலே பொருந்தின உதரபந்தனச்சேவையும் திருஎக்கிஞோபவீதம் பொருந்தின திருமார்பும்—எ-று. (௧௧)

வீசியசெய்யகையும்விடதரக்கரங்கவித்த
தேசுவண்டுடியுமங்கிசெறிவுமுன்றிரண்ட தோளுங்
காசுகொண்மிடறுந்தோடார்காதும்வெண்குழையுங்காண
மாசிலாமணிவாய்விட்டுவழங்கிடாநகைமயக்கும்,

இ-ள். வீசியருளிய சிவந்த கரமும் புயங்கம்பொருந்தின ஸ்ரீயத்தத்தைக் கவித்தருளியபிரகாசமும் பரநாதம் பொருந்தின வளவியதமருகமும் தியகலும் முன்னேதிரண்டதோளும் நீலவொளிபொருந்தின திருமிடறும் திருத்தோடும் வெள்ளிய சங்கக்குழையும் பொருந்தின திருச்செவியும் வெளிப்படக்குற்றமற்ற திருவாய்ப்பவளமு நீக்கமறச் சிரித்தருளிய மோகனமும்-எ-று.

ஓங்கியகமலச்செவ்வியொளிமுகமலருங்கண்கள்
பூஙகுழலுமைமையநோக்கும்புரணமும்புருவப்பொற்பும்
பாங்கமர்நுதலும்பின்றாழ்படர்சடைப்பரப்பும்பாம்பு
நீங்கருந்தாருநீருநிலவுமேனிலவுநீறும்.

இ-ள். மேலான தாமரைமலரின் அழகுபோன்ற திருமுகப்பிரசன்னமும் மலர் அணிந்த குழலியார் என்கிற உமையைப்பார்த்தருளுகிற திருநயனங்களின் கடாட்சவிளக்கமும் திருப்புருவத்தின்அழகும் அழகியதிருநெற்றியும் பின்தாழ்ந்து விரிந்தகற்றைச்சடையும் சர்ப்பமும் நீங்காத கொன்றைமாலையும் கங்கையும் சந்திரனும் திருமேனியிற் பரம உத்தூளனமும்—எ-று.(௧௩)

கடிமலரணையவாரிக்காரிருளளகஞ்சேர்த்த
முடியுநன்னுதலும்பொட்டுமுயங்கிருபுருவவில்லும்
வடிகொள்வேல்விழியுங்காதும்வளர்குமிழ்மலருந்தொண்டைப்
படிவவாயிதழுமுத்தநகையுமெய்ப்பசுமைவாய்ப்பும்.

இ-ள். இருண்டமேகத்தை யொத்த திருக்குழலிலே மணம்பொருந்தியமலர்கள் சேர்த்துச் சொருகினதிருமுடியும் நல்ல திருநெற்றியுந் திலதமும் பொருந்தின இரண்டு வில்லை ஒத்த திருப்புருவமும் வடித்தவேல்போன்ற

விழியும் திருக்காதும் விளங்குக்குமிழ மலர்போன்றதிருமூக்கும் ஆதொண்டைக்கனிபோலும் திருவாயிதழும் முத்துப்போலு நகையும் பச்சென்ற திருமேனியழகும்—எ-று.

கடிமலரலேயவென்று பாடமாயின், கடிமலர்சரிய வாரிமுடித்தவென்று ரைக்க. (௬௪)

பூங்கமுகமர்கழுத்திற்பொலிந்தமங்கலநாண்பொற்பும்
பாங்கமரமையார்தோளும்பங்கயச்செங்கைதாங்கு
மோங்குசெங்கழுநீர்ச்செவ்வியொளிதருமலருந்தாருங்
கோங்கரும்பவைபழித்தகொங்கையுங்குலவுபூணும்.

இ-ள். கன்னிக்கமுகுபோன்ற திருக்கழுத்தில் நித்தியமான பொலிவினையுடைய திருமங்கல நாண் அழகும் பக்கம்பொருந்தின மூங்கிலேப்பார்க்கிலும் அழகியதோளும் கைத்தாமரையிலே ஏந்தும் மேலான அழகுவிளங்கின செங்கழு நீர்ப்பூவும் செங்கழுநீர்த் திருமாலேயுங் கோங்கு அரும்புகளை நிந்தித்த திருமுலேத்தளமு மொளிபொருந்தின திருவாபரணமும்—எ-று. (௬௫)

துடியமரிடையும்பாந்தட்டொகுபணந்தகுநிதம்ப
வுடையமர்துகிலுமல்கவொல்கியநிலேயுஞ்செய்ய
வடிமலர்மிசையணிந்தவாடகப்பாடகக்கீழ்
விடுசுடர்சசிலம்பும்வாய்ந்தமெல்லியல்வியந்துகாண

இ-ள். துடியையொத்த திருமருங்கும் பெரும்பாம்புகளின் விரிந்தபடங் கூடியது ஒத்த நிதம்பத்தலத்திற்சாத்தியருளிய பரிவட்டமும் மிகவும் அசைந்த நிலேயும் சிவந்த ஸ்ரீபாதத்திற்சாத்தின பொற்பாடகத்துக்கீழே ஒளிவிளங்கும் திருச்சிலம்பும் பொருந்தின பரமேசுவரி அதிசயித்துக்கண்டருள.

ஆடியபெருமான்வெய்யோனலர்கதிராயிரத்துக்
கூடியமண்டலம்போற்குறைவிலாவகைநிறைந்து
நாடருஞானமன்றுளுய்யவயன்மான்முன்பு
தேடருமேனிகொண்டுதிருநடஞ்செய்யக்கண்டார்.

இ-ள். சத்தியே திருமேனியாகக்கொண்டு சத்திகாண ஆடிய தம்பிரானர் ஆயிரமாதித்தப் பிரகாசம் ஒன்றுகக்கூடின மண்டலம்போல குறைவற நிறைந்து நாடுதற்கரியஞானசபையில் நம்போல்வாரை யிரட்சிக்கவேண்டி முன்புபிரமாவிட்டுணுக்கள் தேடக்காணுத சோதி சொருபத்தை யதிட்டித்து நிருத்தஞ்செய்தருளக் கண்டார்கள்—எ-று. (௬௭)

வேறு.

பொருவில்புயங்கப்புனிதனடங்கட்புலன்மேவத்
தெரிபொழுதங்கத்தொருசெயலின்றிச்சிரமேவக்
காமலர்நுந்தப்புனல்விழிகம்பித்துளைகாணு
விருவருமின்பக்கடலுளலேந்தாரொன்செய்தார்

இ-ள். ஒப்பில்லாத அலைவற்ற தாண்டவத்தைப்பொருந்துஞ் சுத்தனது நிருத்தங் கண்ணுக்குப் புலப்படத்தெரிந்தவளவில் அவயவத்தில் யாதொரு சேட்டையுமற்றுச் சிரத்திலே கைம்மலர்பொருந்த விழிநீர்த் தாரைகொள்ளநடுக்கமுற்று உரைகுழறி வியாக்கிரபாதரும் பதஞ்சலியும் இன்பச்சாகரத்திலே மிதந்தார் இனிவேறே யென்செய்வார்—எ-று. (கஅ)

தற்பரமாகுந்தலைவனதுண்மைத்தன்மைப்பொற்
சிற்பரமாமம்பரவொளியுந்தன்றிருமேனிப
பொற்புடனும்பொலிவும்விழிக்குட்புணராதா
லற்புதனேயிங்கார்கிலமென்றென்றயர்கின்றார்.

இ-ள். சுட்டுணர்வுக் கபபாற்பட்ட முதல்வனது சத்தியமான சுபாவம் விளங்கின ஞானத்துக்குமேலான சிதம்பரபிரகாசமும் தேவரீருடையதிருமேனியின் பிரகாசத்துடனேயாடும் அந்தப்பிரகாசமும் பார்வைக்கடங்காதபடியாலே ஆச்சரியமான திருமேனியையுடையவரோ சத்திநிபாதக்குறைவினாலே எங்கள் நினைவுமுடிக்கப பெறுகின்றோ மில்லையென்றென்று வருந்துகின்றாகள்—எ-று.

தன் திருமேனி பொற்பு என்பதற்குத் தன்னுடைய திருமேனியிலேபொருந்தின பரமேசுவரியெனினு மமையும். (கக)

காரணனேமுன்காமனைவேவக்கண்வைத்த
பூரணனேநின்புகழ்நடம்யாரும்புணர்வெய்தப்
பாரிருண்மோகந்தீருருண்ஞானம்பணியென்றென்
றாரணமோதுஞ்சாகைகளோராயிரமாக.

இ-ள். சர்வகாரணனே முன்னாள் மதனன்வெந்து வீழத் தீக்கண்ணைப்பார்த்தருளிய பரிபூரணனே தேவரீருடைய புகழ்பொருந்திய நிருத்தமெல்லாருங்காணக் கடாட்சிப்பீராக இருளையும் மயக்கத்தையும் நீக்கும்படியான உமதுகிருபைபொருந்தின திருவடிஞானம் பணித்தருள்வீராகவென்று வெகுவிதமாகச் சாகைகளினாலே விண்ணப்பஞ்செய்தன*வேதங்கள்—எ-று.

ஒருவனைநேரோயிருவருமுன்னான்மறையஞ்சா
றிரவுறுமாறேழையமினியெட்டும்படியின்பங்
கரைமுதலாமுறெனவருநாதாதியின்மீதே
பரதபராபரபரிபுரபாதாபணியென்றார்.

இ-ள். ஒப்பில்லாத முதல்வனைச் சந்நிதிப்பட்டு நின்று விட்டுணுவும் பிரமாவும் முனனான்குவேதங்களும் தேசோரூபத்துக்கஞ்சாமல் வேண்டிக்கொள்ளுகிறவழியை ஒன்றும் அறியாதயாங்களு மின்பம்பெறும்படி பிருதி

---

*வேதமென்றது வேதகாத்தர்களை.

விமுதல்முப்பத்தாறென்று சொல்லப்பட்டுவரும பரநாதத்தின்மேலே நிருத்தஞ்செய்பவரோ பராபரப்பொருளானவரோ திருச்சிலம்பணிந்த ஸ்ரீபாதத்தையுடையவரோ பணித்தருள்வீராக வென்றார் இநதிராதிகள்—எ-று (உக)

கரணமனைத்தும்புலனிவைகாணுகைவிட்டான்
மரணமெமக்கிங்கிதுதமியோம்வாழ்வருண்மாறிற்
றிரணமுமெய்ச்சஞ்சலமிலதென்றுலொன்றுநின்
புரணமெனக்கொண்டருளுகவென்றார்நின்றார்கள்.

இ-ள். தத்துவங்களெல்லாங்கூடினாலும் விஷயங்களையறியமாட்டாதத்துவங்கள்கூடாதபொழுது எங்களுக்குக் கேவலம்பொருந்தும், இவ்விடத்து அருள்நீங்கித் தனித்தவிடத்து எங்கள்வாழ்விது, தேவரீர் அருளில்லாவிடத்துத் துரும்பும் அசையாதென்று உண்மையாக வேதாகமங்கள் ஒன்றாகச் சொல்லுதலாலே அவ்விடம்உம்முடையபூரணமொழியவில்லை ஆதலாலெங்கள் சுதந்தரமான கேவலக்காணியையும் பூரணமான தேவரீருடைய சுதந்தரசத்தியையுந் திருவுள்ளத்திலே கொண்டருளி எங்களையும் பிரோகரிப் பித்தருள்வீராகவென்றார்கள் அவ்விடத்துநின்ற ரிஷிகள்முதலானோர்—எ-று.(உஉ)

இவ்வகையேநான்மறைமுதலேனோரிரவெய்தப்
பைவிரவாரபபணியணிநாதன்பரிவாலிப்
பொய்விரவாமெயப்பொலிவினர்யாரும்புணர்வெய்தத்
திவ்வியமாமம்பரபதஞானந்தெரிவித்தான்

இ-ள். இவவாறு வேதமுதலான தேவர்களும் இருடிகள்முதலானோர் யாவரும்வேண்டிக்கொள்ள படம்பொருந்திய சர்ப்பாபரணமணிந்த சிதம்பரநாதர் அநுக்கிரகத்தினாலே இப்படி சத்தியம்பொருந்தின திருமேனிப் பொலிவினையுடைய பக்குவராகிய வேதரிஷிகள்முதலான யாவரும் பொருந்துதலுறத் திவவியமாயிருக்கிற பரமாகாசப்பத்தி ஞானததைத் தெரிவித்தார்—எ-று. (உ௩)

நாரணன்வேதாவாசவன்வானோர்நவைசேரா
வாரணமேலோர்தாபதர்மூவாயிரவோர்நற்
சாரணர்தாவாநாரதர்பூதாதிகளாசைக்
காரணரோனோராடலைநேரேகண்டார்கள்.

இ-ள். அரிபிரமன் இந்திராதிதேவர்கள் குற்றமில்லாத வேதங்கள்முதலாக உயர்ந்தோராகச் சொல்லப்பட்ட பெரியோர்கள் மூவாயிரம் பிர்மரிஷிகள் நல்லசாரணர் குற்றமில்லாத நாரதர் பூதமுதலானோர் திக்குப்பாலர்கள் மற்றுமுண்டான இருடிகள்யாவருந் தம்பிரானார்நிருத்தத்தைப் பிரத்தியட்சமாகக் கண்டார்கள்—எ-று.

எண்ணருங்காதல் கூருமென்கிற. ம-வது திருவிருத்தந்துவக்கிநாரணன் வேதாவென்கிற உச - வது திருவிருத்தம் அளவாக்ச்சொல்லியது ஏதென்னில், வியாக்கிரபாதர் பதஞ்சலிகளுக்குத் திரோதானத்தைநீக்கி ஆநந்த சுபாவ நிருத்தத்தைத் தரிசிப்பித்ததும் அரிபிரம இந்திராதிவேதங்களுக்கும் ஆணவளவைவ விந்து அவத்தைநீக்கித் திரோதானத்தில் அருளாநந்த நிருத்தந் தரிசிப்பித்ததும் மூவாயிரம்ருஷியாதி யானவர்களுக்குக் கலாபந் தநீக்கி வயிநதவாநந்தந் தரிசிப்பித்ததுங் கண்டுகொள்க. (உச)

கண்டனர்கண்ணுக்கின்புறமுன்னேகரமுச்சிக்
கொண்டனருள்ளக்கொள்கைததும்பககுறியாரப்
பண்டருவேதப்பாடலோடாடிப்பரபோகத்
தண்டனதாமெய்க்கருணையினூடுற்றலைகின்றார்.

இ-ள். கண்களுக்குச் சுகம்வரப் பிரத்தியட்சமாகக்கண்டனர் கரங்களுச்சியிலே பொருநதக்கொண்டார்கள் தங்கள்நினைவு நிரம்பிவழிகிறது போலக் கண்ணீரும புளகமுமாகியகுறிகளநிறைய இசைபொருந்திய வேதகிதத்தோடு ஆநநதக்கூத்தாடி பரபோகந்தரும் தம்பிரானுருடைய காருண்ணியசாகரத்திலே மிதநதார்கள்—எ-று. (உரு)

பரபதகஙகாதாவரவிந்தாசனனுசசிச
சிரமரிகண்டாவிருடருகண்டாமிருதெவ்வர்
புரமெரிகண்டாபவமிரிகண்டாவெனவோதிக
கரமலர்சிந்தாவரகரவென்றாகணநாதா.

இ-ள். மேலானபதமுள்ளவனே கங்காதரனே கமலாசனனுடைய உச்சித்தலையரிந்து துண்டபடுத்தினவனே கறுப்புநிறத்தைக்காட்டின கண்டத்தையுடையவனே மிகுநத மாறுபட்டோர புரங்களையெரித்தவீரனே சநநத்தைக்கெடுக்கிற ஞானக்கண்ணை எங்களுக்குத்தந்தருளென்று விண்ணப்பஞ்செய்து புட்பாஞ்சலிபண்ணி அரகராவென்றார் கணநாதர்கள்—எ-று. (உசு)

ஆடினதொந்தாயாகமசிந்தாமணியேயென்
றோடினர்நின்றாரோகைமலிந்தாரொளிர்கண்ணீர்
வீடினர்குன்றாமூடியவெந்தீவினைதீரத்
தேடுமருந்தேதாவருளென்றார்சிலதேவர்.

இ-ள். பரவசராய்நின்று கூத்தாடினர் எந்தையே யாகமத்துக்குச் சிந்தாமணியேயென்று ஓடினா பரவசராயநின்றார் அதிப் பிரியப்பட்டார்கள் வெளிப்பட ஒளி பொருந்தின கண்ணீர்த்தாரை கொண்டார்மலைபோன்று எங்களை மேலிட்ட கொடியதீவினைதீர யாவருநதேடுமருந்தே யருளைத்தருவாயாக வெனறார்கள் சிலதேவர்கள்—எ-று. (உஎ)

மாலயன்மேலாவாசவனேசாமதியேசெங்
கோலநில்லாவாபாலனநீறுகோவேதிண்
காலனிலாவாகாதியகாலாகதியேவண்
பாலநிலாவாகாவெனநேரேபணிவுற்றார்.

இ-ள். அரி பிரமர்களுக்கும் மேலானவனே இந்திரனுக்குச் சிநேகிதனே சர்வாத்துமாக்களுக்கும் அறிவே செவவண்ண விளக்கமுடையவனே பாலொத்தவெண்ணீற்றனே கோவே திண்ணிய காலனைஇல்லையாகும்படி காய்ந்தருளிய ஸ்ரீபாதனே சமயிகளெல்லாரும் அறுதியிட்டுசசொல்லும் வழியே வளவியபால சந்திரசேகரனே சமுசாரதாபத்தில் நாஙகளழுந்தாமல் இரட்சியென்று சந்நிதியிலேபணிந்தார்கள்—எ-று. (உஅ)

திகழ்தருசெம்புன்றலைதிரிமுண்டஞுசோசங்கத
தகுகுழைநுண்கண்சிறுநகைதந்தந்தாழபண்டி
டகுசகனந்திண்டொகுசரணந்தண்பாரகஙகப
புகழ்கரணங்கொண்டயாவவநந்தம்பூதஙகள்.

இ-ள். விளங்குகின்ற செங்குஞ்சித்தலை - நெற்றியிலே திரிபுண்டரம்- சங்கக்குழைபொருந்தினகாதுகள -சிறியகண்கள- புன்னகையையுடைய பறகள்- தாழ்ந்தவயிறு- இரண்டுபிரிவாகிய பிருஷ்டபாகம் என்னு மிவைகளையுடைய பூதங்கள் பலம்பொருந்தியகால்கள பூமியிலேபொருந்த*உற்புலித கரணஙகொண்டு ஆடுவன—எ-று. (உகூ)

மலரொரிமுசசிக்குழிவிழியொட்டற்கவுளவாய்விட்
டிலகெயிறொடடைக்களமிருநெடடைககரமீர
லுலருதரஞுசிற்றரையுயர்தெறறறபதமோடும
பலவலகைககொத்திடுகுணலைககொத்தினபாணி.

இ-ள். எரிபோலவிரிந்தமயிரை யுடையபெருந்தலையும் குழிந்தகண்களும் ஒட்டியகன்னமும வாய்க்குவெளியில் புறப்பட்டபறகளும் ஒட்டையினகழுததுப்போன்ற கழுததும நீண்ட இரண்டுகைகளும் ஈரலுலாந்தவயிறும சிறிய அரையுமுடையனவாய உயாந்ததெற்றுதல்பொருந்திய முட்டிக்காலுடனே பலபேயகள் குனிததிடுஙகுணலைக் கூத்துக்குச்சரியாகக் கைகளைககொட்டின—எ-று. (௩௦)

தோடிறையேவாய்விடலருடாாசுரிகூழைப்
பாடளியாறோடேழிசைகோடாவகைபாடத்
தாடகுமாடாாநூபுரம்விடாவொலிசாாவிந
தாடினாபாடாவாடினாாபீடாரர்மாதா.

*உற்புலிதமெனபது கூத்தின்விகற்பம்.

இ-ள். இதழ்சற்றே நீங்கின புட்பங்கள் நிறைய வுள்ளவைத்துச்சொரு கின கொண்டைபபுறத்தில் வண்டுகள் யாழோடுகூடச்சத்தசுரமும் மயங்கா மறபாட தாளுக்குத் தகுதியாகக் கால் வடிம்பிறபொருநதின பொறசிலம் போசையைக்கூட்டி ஆடினர் பாடாமல மயஙகினா பெருமையையுடைய தேவஸ்திரீகள்—எ-று. (௬௧)

அண்டாகண்மிண்டப்பண்டெழுநஞசுண்டமுதீயுங்
கண்டனகண்டப்பண்டைநடஙகண்குளிர்வித்துக்
குண்டிகைகொண்டைநதண்டொடுமண்டிக்குலேவேணி
முண்டமிலங்ககொண்டயாகின்றார்முதுவோாகள்.

இ-ள். தேவர்கள் விஷவேகத்தைச்சகிக்கமாட்டாமல் திரண்டுவநது வி ணணப்பஞ்செய்ய பண்டுசமுத்திரத்திலே தோன்றிய நஞ்சை அமுதுசெய் து அவர்களுக்கு அமிர்தத்தை யீநதருளும் நீலகண்டனது அகண்டபரிபூரண மான அநாதிநிருத்தத்தாலே கண்களைகுளிர்வித்து கமண்டலம் சோமன்க ட்டின தணடுகள் ஒன்றுக்கொனறுநெருங்கிச் சடையவிழத் திரிபுண்டரம்வி ளங்க வெகுவிதமாக ஆடினா பழைய மூவாயிரமுனிவர்கள்—எ-று. (௬௨)

வீரதராவான்மேருகராகான்விரிகொன்றைத்
தாரவராவாகர்வெனநேரோதகவாரா
நாரதரோரார்சாரணரேனோர்நசையாழின்
பாரகராராவார்வமொடாடும்பணியுற்றார்.

இ-ள். வெற்றியையுடையவனே பெரிய மகம்மேருவை வில்லாகக் கைக் கொண்டவனே வாசனைமிகுநத கொன்றைமாலையணிநத பரமசிவமே நாகத் தையாபரணமாகஉடையவனே எங்களை ரட்சியென்று சந்நிதியிலே முறைப் படிவந்து தும்புரு நாரதர்களுமஅழகுபொருந்திய தேவதூதர்களும்மற்றைத் தேவர்களும் காந்தர்வ வேதபாரகராகிய வித்தியாதரர் முதலானவர்களும் நீங்காதஆசையோடு ஆடுநதொழிலைப் பொருநதினார்கள்—எ-று. (௬௩)

குடமுழவங்கொக்கரைபொருதாளங்குழல்வீணை
படகநெடுங்கத்திரிகைதடாரிபணிலங்க
டிகரடஞ்சசசரிபலகொண்டோர்தொகவாரா
நெடுமுகிலஞ்சக்கடலொலியெனசநிகழ்வித்தார்.

இ-ள். பிரதானவாத்தியமான குடமுழாக்கள்-கொக்கரையென்கிற வா த்தியங்கள்-சர்வவாத்தியங்களுக்கும் சுருதியான தாளம் - வேய்ங்குழல்கள் வீணைகள்- தம்பட்டம் - பெரியகத்திரிகை-பம்பை-தவளச்சங்கங்கள்- தமரு கம கரடிகை-சச்சரி முதலானவாத்தியங்களைக் கைக்கொண்ட மேளதோர் ... கூடிவநது மேகங்கள் திடுக்கிடவும் சமுத்திரவொலிகுறையவும் முழக் ... ...ார்கள்—எ-று. (௬௪)

பரிவுடனுடுங்தொழிலினராய்முன்பலர்வாழந்
தெரிவுறநீடும்புலிமுனியோனுந்திகழ்வெய்து
மரவரசோனும்பரவசராய்நின்றழநேரே
வரமெவைகூறுங்கரவெனநாதன்மகிழ்வுற்றுன்.

இ-ள். அன்புடன் கூத்தாடுந் தொழிலையுடையராய்ச் சந்நிதியிலேபொருந்தினோர் யாவரும் பெருவாழ்வுபெற்றுவாழ உண்மையைத்தரிசித்துச்சுபாவகுணத்திலேயழுந்தின வியாக்கிரபாதரும் அநந்த நிலையைப்பொருந்தின பதஞ்சலியும் பரவசராய் நின்றழ அங்ஙனம் சந்நிதியிலே நின்றழும் வியாக்கிரபாதரையும் பதஞ்சலியையும் பார்த்தருளி நாம்கொடுக்க உங்களுக்கு வேண்டியவரங்களைக் கேளுங்களென்று மகிழ்ந்து திருவாய்மலர்ந்தருளினார்—எ-று. (௩௫)

அண்டர்பிரான்முன்புண்டரிகத்தாண்முனியன்பிற்
கண்டுளிசோரக்கைதொழுதுள்ளங்கசிவெய்திப்
பண்டுனைநாளுங்கண்டிடுமாறென்பயில்பூசை
கொண்டருள்வேறிங்குண்டிலவேதுங்கொளவென்றன்.

இ-ள். தேவதேவன் திருமுன்பே வியாக்கிரபாதர் அன்பினாலே ஆனந்தபாஷ்பம் பெருகநின்று கைகூப்பித்தொழுது மனமுருகிமுன்போலத் தேவரீரைநாள்தோறும் கிரியாவிதிப்படி யானபண்ணுகிறபூசையை உண்மையாகக் கைக்கொண்டருளவேண்டும் இதுவே யனறிப்பெறவேண்டிய குறை வேறொன்று மில்லையென்றார்—எ-று. (௩௬)

ஆடுகவென்றங்காடுமரஞ்சீரருள்செய்யக்
கூடுமநந்தன்கூடுமநந்தங்கொடுவெமமை
நீடுமநந்தங்கேதநினைந்தோநிலன்மேவுஞ்
சேடர்கடுன்பந்திரநினைந்தோதெரியாது.

இ-ள். வேண்டும்வரத்தை உரையாடுங்களென்று அவ்விடத்தில் நிருத்தஞ்செய்யும் பரமேசுரர் அருளிச்செய்ய அன்புபொருந்திய பதஞ்சலி தன்னைக்கூடும்முடிவில்லாதகொடிய தீவினையிலகிட்டிக்கும மனதிற்றுன்பும் ஏதுக்களாகிய துக்கவாதனையாலே னெனம்மனத்தைவாடுபொருந்தமோவென்று எண்ணியோதெரியாது பூலோகத்தைப்பொருந்துஞ் சேஷமாயுள்ள ஆன்மாக்கள் பிறவித்துன்பத் திர என்று எண்ணியோதெரியாது.—எ-று.

தெற்குக்கயிலாச பாரிசத்தில் தவமுயலும்பொழுது பரமசிவஞ்சாந்நித்தியஞ்செய்து பிரமாவாக வெளிப்பட்டு இவர்வாய்மைகளைச் சோதித்துப் பின்பு தற் சொரூபமானபோது வேண்டியதென்னவென தாருகாவனத்தில் செய்த நிருத்தத்தைத் தரிசிக்கவேண்டுமென்றுசொல்ல இது இடம் அன்று அங்கு சிதம்பரத்தில் காணக்காட்டுதுமென றருளிச்செய்ய அவ்வண்மை அந்த

ன்னைப்பொருந்தும் அந்தமில்லாத கொடுமையுடைய தீவினையிற் றங்குமனதுக்குத் தம்மிடத்திற் றங்கும் ஏதுக்களாகிய சுகதுக்க வாதனையிற் பட்டு மறைப்புவருமென நினைந்தோவெனினுமனமையும்- பூமியிற்பொருந்தும் புண்ணியபாவசேஷமாயுள்ளவர் சேஷர்களென வடமொழித்திரிவு. இது என்சொல்லியவாறேவெனில் தனது சஞ்சிதப் பிராரத்தவஆகாமியத்தாற் பிறவிவருமெனநினைந்தோ பூலோகத்துப்பொருந்துஞ் சேஷமாயுள்ள புண்ணியபாவமுடைய ஆன்மாக்கள் பிறவித்துன்பநீர நினைந்தோ இப்படி நிருத்தஞ் அநவரதஞ்செய்யவென்றது, தெரியாதெனவே இரண்டும் வேண்டியென்ப துபொருந்தும்—எ-று. (௩௭)

சென்றுவணங்கித்திகழுமநந்தத்திறலோனு
மின்றிகழ்வாழ்வோர்விழிபுணர்காலந்தொறுமன்றந்
துன்றியஞானச்சோதியுணேசத்துணையோடு
மென்றுநடந்தந்தருளவிரங்காயினியென்றான்.

இ-ள். வந்துவணங்கி விளங்கும் அநந்தனுகிய வெற்றியுடையோனும்மின்போல விளங்கப்பட்ட உடம்பில்வாழும் ஆன்மாக்கள் வெளியாரக்காணும் அககாலந்தோறும் அம்பலத்தில் பூரணமாய்நிறைந்த ஞானப்பிரகாசத்துள் காதலையுடைய துணையாகிய பராசத்தியுடனேகூட இன்றுமுதல் என்றும் நிருத்தத்தைப் புலப்படுத்தி அருளாயினி என்றான்—எ-று. (௩௮)

தேவர்கடேவன்றிருவருளங்கப்படிசெய்ய
மேவியபோதங்கிருவருமிக்காடினர்மிக்கோ
*ராவெனவேழெண்கடலொலிபோல்வைத்தலைவுற்றார்
பூவலயம்பூமலைதகவானோர்பொழிவுற்றார்.

இ-ள். தேவர்களுக்குத்தேவன் அவ்விடத்து அப்படித் திருவருள்செய்யப்பொருந்தினபோது வியாக்கிரபாதரும் பதஞ்சலியுமாகிய இருவரும் ஆநந்தக்களிப்புமேலிட்டு ஆடினர் மற்றுமுள்ள தேவர்கள் இருடிகள் முதலாயினோர் ஏழென்று *எண்ணப்பட்ட கடலோசைபோல ஆரவாரித்துச சிரசின்மேல் கைவைத்துச்சுழல லுற்றார்பூமிவட்டத்தில் புஷ்பங்கள் மலைக்கு ஒப்பாக நிறையும்படித்தேவர்கள் புஷ்பமாரி பொழிந்தார்கள்—எ-று. (௩௯)

எங்குமுழங்கத்துந்துபிசங்கத்தொலிநீடச்
சங்கையிலின்புற்றும்பர்களேனோர்தாம்வாழப்
பங்கமிலின்பத்தோருபதேசம்பரிவான்மிக்
கங்கவர்தங்கட்கெங்கள்பிரானருள்செய்வார்.

இ-ள். திக்குகளெங்குந் துந்துமிமுழங்கச்சங்குகளின் ஓசைபெருக மயக்கமின்றிப் பேரின்பத்தழுந்தித் தேவர்கள் இருடிகள் முதலானோர் வாழப்

*ஆ - என்பது அதிசயவிரக்கச்சொல்.

பங்கமில்லாத இன்பமிகுந்த ஒப்பற்ற உபதேசம் அன்புடையார் தங்களுக்கு எம்மை அடிமையாக உடைய தம்பிரானார் அருளிச்செய்வார்—எ-று. (சo)

ஞானநமக்குத்திகழ்விடநம்மிற்பிறிவின்றேன்
றானதுசிந்துசசத்தமர்ஞாலந்தகலாது
தானுடலுட்பட்டிடுமுயிரிற்றங்குதல்போலவோம்
வானவர்சுற்றிக்கோலுமினென்றான்மன்றாடி.

இ-ள். நமக்கு ஞானமானதுவிளங்கப்பட்ட அதிட்டானம-நம்மிடத்தில் பிரிவினறி ஒனறானது சிததாகிய ஞேயம் சத்தாகிய ஞானம - அமரப்பட்ட இப்பூமியைவிட்டு அகலாதது எப்படியென்னில-உடலில் உடபட்டிருககும் உயிரினைப்போல அந்தஞான த்திற்கு ஞேயமாகிய உயிராய்த்தங்குதல் செய்வோமாகையால தேவர்களேஇநத இடத்தைச்சுறறி அம்பலமாகக கோலுமினென்றார்அம்பலத்தாடினா—எ-று. (சக)

தொன்மையஞானம்பெற்றதுசுற்றுமபொருளாயவான்
முன்மலர்தூவித்தொழுநடராசன்முதுநூலிற்
சின்மயமாமன்றிரண்மயமொன்றுண்டதுசேரப்
பொன்மயமாகுமபுவியினர்காணுமபொழுதென்றான்.

இ-ள: பழமையையுடைய ஞானமாகிய சிதம்பரத்தில் அத்தன்மையைத்தம்பிரானா அருளினாலேசுட்டி அறிவுபெற்ற ஸ்தலசனதையாவருககுந திரவியமேதாமெனறு ஆராய்வான் காரணமாகித் தேவர்களெல்லாஞ் சநநிதிமுன்பு புஷ்பாஞ்சலிபண்ணி நமஸ்காரஞ்செய்ய நடேசர்சொல்வார் வேதத்தில் ஞானமயமாய் இம்மன்றினுககுஇரண்மயகோசமென்றொருபெயர்உண்டு அது விசுவத்திலுள்ளவர் கண்டித்துககாணும்பொழுது அடங்கப பொனனின சொரூபமாகுமென்றா—எ-று. (சஉ)

என்றருளுஞ்சீருடலைமேலகொண்டிமையோர்பொன்
சென்றழறங்கித்தேசுடனேடிசசெலவற்று
நின்றதுகொண்டங்கருளபடிமாவாநிகழ்வித்தா
மன்றகுமென்றங்கதுபடிமாவாமவிவித்தார்.

இ-ள். என்றருளிச்செய்யுந் திருவருளைத் தேவர்கள் தலைமேறகொண்டு கனகமஅழலிறசென்று தங்கிகளங்கமற்றுத் தனனுடைய ஒளியுடனகூடி ஒடிஒட்டறறுநினற பொன்கொண்டுதம்பிரானார் அவவிடத்து அருளியபடியே பெரிதாக அம்பலத்தைச் செய்வித்தாா அதற்கு நம்மனனராகிய சிதம்பரேசுராபொனனமபலமாகத தகுமெனறு அவவிடத்துசசொனனபடி மறைவாகாமம் பொன்னம்பலமென்று எலலோரையுஞ் சொலவித்தா—எ-று. ()

பொன்னசலஞ்சேர்பொருளனமுயகரும்புறபோன்முற்
பன்னருஞேயப்பரிபதஞானந்தருபானமைச

சின்னிலேமன்றந்தேவர்கள்செய்யுந்திருமன்றந்
தன்னேயுமன்றேசெய்ததுஞானந்தாஞக.

இ-ள். பொன்னுகிய மகமேரு பருவதத்தைச் சேர்ந்த பொருள்பொன்னுறற்போலவும், அளத்திற்போடும்புல் உப்பாறற்போலவும், முற்சொல்லுதற்கு அருமையுடைய ஞேயாதிட்டானமான பரபதமென்னும் ஞானநிட்டையைத்தரும் முறைமையையுடைய ஞானநிலையாகியமன்றம்-தேவர்களாற்செய்யப்படும் அழகிய கனகசபையையும் அப்போதே ஞானந்தாஞகச் செய்தது—எ-று. (௪௪)

அன்றுதொடங்கித்தேவர்களுஞ்சீரரவோனுந்
துன்றுபுலிக்கான்முனிமுதலாகுந்தூயோருஞ்
சென்றுவணங்கித்திசைதொறும்வாழத்திருவாளன்
மன்றினடந்தந்தென்றுமகிழ்ந்தான்மாதோடும்.

இ-ள். அன்றுதொட்டு அரிபிரமேந்திராதி தேவர்களுஞ் சிறப்புடைய பதஞ்சலிபகவானும் திடசித்தமுடைய புலிக்கால் முனி முதலாகுஞ் சுத்த இருடிகளுந், திசைகளின் உள்ளவர்களும்வந்து வணங்கி முத்தியில்வாழ்வதாக மஹைசுவரியமுடைய பரமேசுவரன் பொன்னம்பலத்தில் எப்போதும் நடனஞ்செய்து பராசத்தியோடு மகிழ்ந்தருளினர்—எ-று. (௪௫)

கரவினிருத்தம்புரியவிருத்தங்கழிகானின்
மிருகமனேத்தும்பறவைகண்முற்றுமிகுநாதப்
பரிபுரசத்தம்பருகிமதித்தம்பிகைபாத
மருவி ० நிரக்கம்பெருகிய்ரக்கமலிவுற்று.

இ-ள். மறைப்பில்லாத நிருத்தத்தை ஈசுரன்செய்ய மாறுபாடுநீங்கிய காட்டில்வாழும் மிருகங்கள் அனேத்தும், பறவைகள் அனேத்தும், நாதமிகுந்த திருச்சிலம்பினது சத்தத்தைச் செவியாரப்பருகிச் சத்திநிபாதம்பொருந்தி அருளேக்குறித்துக் கண்ணீர்பெருகிச் சிவஞானத்திற்பொருந்தி வாழ்ந்தன.

அரவரசன்சொற்றகவரமுன்பெற்றனஞகக்
கரவில்கணங்கட்புனன்மிகநுந்தக்கரநாலுந்
திரிநயனம்பொற்சுரிகைபிரம்பொப்பருசெம்மை
மருவியநந்தித்தலேவனேவந்தித்தெதிர்நின்ருர்.

இ-ள். பணிக்கரசஞகிய பதஞ்சலி முன்புவேண்டிக்கொண்ட சொற்படியே திருவுள்ளம்வாழ்ந்தருளி அநவரததாண்டவஞ்செய்ய வரங்கொடுத்தருளப் பெற்றனஞகக்கண்டு அசத்தியம் இல்லாத கணநாதர்கள் கண்ணீர் மிகத்ததும்ப நான்குதிருக்கரங்களும் திருநயனமும் பொற்சுரிகையும் பிரம்பும் ஒப்பில்லாத செம்மையாகிய சாரூபமும்பொருந்திய நந்திகேசுரஞகிய தலைவனேவணங்கி யெதிர்நின்ருர்கள்—எ-று. (௪௭)

---

० நீரக்கமெனற்பாலது - விகாரவகையால் நிரக்கமெனக் குறிகினறது.

பன்னுகணத்தோர்தலைவன்வருத்தம்பாராதே
நின்னிலயத்தின்னிலைதகநாளுநில்லென்றூர்க்
கென்னையுரைக்கோமிதுபிணிகைக்குமெனிலெய்த்தோர்
தன்னைநருக்கிசசாறுகொள்வாருந்தகுமென்றூர்.

இ-ள். இப்படிச் சொல்லபபடாநின்ற கணங்கள்நாயகனுடைய திருமேனி வருத்தத்தைவிசாரியாதே நினனுடைய ஆநநதநிருததமாகிய புயஙகததினிலைபொருநத அநவரதமு நில்லெனறு வரம்பெறறுக கொண்டவர்களைக்குறித்து நாமென்னசொலவோம் இந்தமருநது பிணியை யோட்டுமெனில நோயினுல இளைததோர் அம்மருநதினை வேருடன்பிடுங்கி நருக்கி அதனசாறறைப்பிழிநது கொள்ளுதல்போலுமு என்றூாகள—எ-று. (சஅ)

தாணுவைமுன்னர்சசாருநர்கண்ணிற்றகநட்டம்
பேணுவதாகப்பெருகுவரம்பெற்றனரொன்று
லாணையெனுமென்றூரறிவாரநாமினியன்பிற
காணுநர்காணுங்காலமவகுததல்கடனென்று.

இ-ள். சிதம்பரேசுரா சநநிதிமுன்னர் வநதவர் கட்புலனுககுக்காண அநவரதநிருத்தத்தைத் தொழுவதாகப பெருத்தவரம பதஞ்சலிமுனிவர் பெற்றனர் என்றால் திவ்விய ஆக்கினை யேதாமெனறுயாவரறிவார அனபினுல் தரிசிப்பார்க்குத் தரிசிக்கும் காலங்கறபித்தல் நமக்கு இனிக்கடனெனறு குறித்து—எ-று. (சக)

அங்ககமுற்றுந்தங்கினர்காவலயற்காவ
லெங்கணுமொய்க்கும்பாரிடமுமபரிடைக்காவல்
பொங்குசினத்திண்கூளிகள்காளிபுறக்காவ
றங்குவருக்கந்தம்மினெருக்கந்தகுவித்து.

இ-ள். காலம்வகுக்கில் காவல்முதலவேண்டுமாதலின் அவ்விடத்தில் கெற்பகிரகமுழுவதும் அநநதாதிகளாகிய தாங்களே காவலாகவும், அதறகயலான இரண்டாமிடமெங்கணும்நிறையும் பூதாதிகள் காவலாகவும் அதற்குமூன்றுவதாகிய இடையில் இநதிராதிகளாகிய தேவர்கள்காவலாகவும் அதற்குநாலாவதாகிய புறத்தில்மிகுநத சினத்தினையுடையபேய்களுங் காளிகளுங் காவலாகவும் இப்படியிருககும் தமகள்வருக்கததில் நெருக்கமாகவிருககக் கறபித்து—எ-று. (௫௦)

காலையுமுச்சிக்காலமும்வானோரோனோர்சீர்
மாலையின்மைக்கட்பூவையர்தாமேவளர்கங்குன்
ஞாலநரர்க்கெக்காலமும்யாருநணுகாத
வேலைகளத்தறகிசசையிருபபாமிகுவிததார்.

இ-ள். விடியற்காலமும் மத்தியானகாலமுந் தேவர்களும் இருடிகளுஞ் சிறப்புடைய சாயுங்காலத்தில் மைக்கண்ணுடைய தேவமாதரும் இருள்வளரா நின்ற ராத்திரிகாலங் கணநாதரும் பூலோகத்துமானிடருக்கு முன்சொன்ன நான்குகாலமும் தரிசிக்கவும் எவரும் வாராதகாலங்கள் தம்பிரானார்க்கு இச்சையிலிருப்பாகவுங் கற்பித்தார்—எ-று. (ருக)

நிலையமிதற்கிங்கிதுநிலையென்றுன்மன்றேறி
யலைவறநிற்குமபடியுமுவந்தானென்றுன்முற்
கலைஞருரைக்கும்பொருளளவன்றேவந்தோவித்
தலைவன்முயக்கஞ்சகலர்மயக்கந்தானுமால்.

இ-ள். தமது நிருத்தத்திறகுச் சுழுமுனு ஸ்தானமானசிதம்பரமே இடமென்றுர். அன்றியும் பொன்னம்பலத்தி லநவரதமும் அசைவறநிற்கும்படி மகிழ்ந்தாரென்றுல் அநாதியே வேதாகமங்களின்வழியே யாகாதிகள் முதலானவறறில் வல்ல கலைஞானிகளுரைக்கும் பொருள் அதறகு அளவன்று, ஆதலால் இநதத்தம்பிரானர் திருவுள்ளப்பாங்கு சகலர்க்குமயக்கமாம்-எ-று

பூவமர்வோனும்பொருகடலோனும்புத்தேளுந்
தேவர்கள்கோனுந்திருமுனிதானுந்திகழ்நாகர்
காவலனேயிககருணைநடங்காண்வரவைத்தாய்க்
கேவல்செய்வோமற்றென்செயவல்லோமென்றார்கள்.

இ-ள். பூவில்இருப்போனுகிய பிரமனும், அலைபொருதுங் கடலுடையோனுகிய விஷ்ணுவுந், தேவர்களும் தேவர்களுக்கரசனுகிய இநதிரனும், அழகியமுனியாகிய வியாக்கிரபாதரும, விளங்கபபட்ட நாகராஜனுகிய பதஞ்சலிபகவானே - இநதக்காருணணியநிருத்தஞ் சருவான்மாக்களுக்குங் காட்சிபெறக்கறபித்தாய உனக்கு நாங்கள் ஏவலசெய்வோமல்லது வேறெனசெயக்கடவோமென்றாகள்—எ-று. (ருந)

இப்பரிசாமிங்கிவரொடுபூதம்பேயகாளி
முப்புரிநூலோர்பூமகள்விண்ணோர்முதலாகத
தப்பருமெல்லைக்குடசிவலிஙகந்தாபித்துத்
துப்புறழ்மேனிசசோதியைநாளுந்தொழுநாளில்.

இ-ள். இப்பரிசாகிய வியாகக்கிரபாதமாமுனி பதஞ்சலிமாமுனி அரிபிரமேநதிராதிகளுடனே பூதம்-பேய்-காளி-தில்லைமூவாயிரவர் இலக்குமி தேவர்முதலானோர முததிவழுவாத சிதம்பரத்தலததின் எல்லைக்குள்ளே சிவலிங்கஸ்தாபனஞ்செயது செம்பவளககுன்றொத்த திருமேனியுடைய தம்பிரானாரை நாள்தோறும்பூசித்துத தோத்திரஞ்செய்துகொண் டிருக்குஙகாலத்தில்.

வீசியகங்கைக்கங்கைவிடாவந்தர்வேதித்
தேசமிலங்கத்திசைமுகன்யாகஞ்செய்தற்குப்
பூசைவழங்கிப்புவியுழுதப்புப்பூரித்துற்
றுசறுதுங்கசசாலைகளின்பத்தமைவித்து.

இ-ள். திரைவீசிய கங்கைககரைநீங்காத அந்தர்வேதிப்பிரதேசம்விள ங்க பிரமா யாகஞ்செய்யக்கருதி அவவிடத்தில இந்திராதிமுதலாயுள்ள தே வதைகளுக்கும் பூசைபண்ணி பூமியையுழுது தண்ணீரால்நிறையக்கட்டி ஒருப் பட்டு விதிமுறையில் குற்றமற்ற பெரியயாகசாலைகளை மனோகரமாகச் செய் வித்து—எ-று. (ருரு)

திருமலிவித்துப்பறவைபடுத்துசசிலகுண்டங்
கருதிநிறுத்திப்பசுநிரைகடடபபெறுகம்பஞ்
சருநெய்குசைப்புற்சமிதைசிருக்குசசிருவந்தண்
பருதிபொரிப்பொற்குவைபழவெறபுப்பலகொண்டு.

இ-ள். இலக்குமிமுதலானோரை ஸ்தாபனம்பண்ணி பருந்துபடுத்து விதி ப்படியிலுண்டான குண்டங்களைக்கருடன்மேல் அந்தந்தத்தானங்களில் விதிப் படி அமைத்துப்பசுக்கள்கட்டக் கம்பங்கள்-சரு-நெய்-குசைப்புல்- சமிதைக ள்-சிருக்குச்சிருவம், குளிர்நதபருதி, பொரிபொற்குவியல், பழமுதலானவை எல்லாப்பதார்த்தங்களையும் பலமலைபோலக் குவித்துக்கொண்டு—எ-று.(ருசு)

சிந்தைமகிழ்ந்தும்பரைவரவேள்விசெயல்செய்வோர்
மந்திரமோதிபபாவகசோமாவருணவா
முந்துமுராரிவாதிமிராரிவாமூவா
விந்திரன்வாவாசங்கரன்வாவாவென்றார்கள்.

இ-ள். சித்தங்களிகூர்ந்து யாகத்தொழில்செய்வோர் தேவர்களைவரும்ப டிக்கு மந்திரம்ஓதி பின்னும் அவரவர்மந்திரங்களைச்சொல்லி அக்கினிதேவ னே-சந்திரனே - வருணனே வா, எக்கியத்துக்குமுதலான விஷ்ணுவே வா, அந்தகாரசத்துருவாகிய ஆதித்தனே வா, மூப்பு இளமையில்லாத இநதிரனே வாவா, சங்கரனே வாவா என்று ஆவாகனம்பண்ணினார்கள்—எ-று. (ருஎ)

யாருமணைந்தாரின்றினியென்னுமிதுவென்றென்
றோருமுனன்பார்யாவருமின்பாரொளிர்தில்லைச
சேரவிருந்தார்போதுமினென்றேசென்றேபு
காரதகொண்டேமீளுகவென்றான்மறைநாவான்.

இ-ள். ஆவாகனம்பண்ணின தேவாகள்யாவரும் இங்குவந்துபொருந்தி னார்களில்லை இனி யான்துடங்கின யாகம் ஏதாய்முடியும் என்றென்று பல காலும்விசாரித்து உணருமுன் இங்குவரவேண்டின அன்பையுடைய யாவரு ம் பிரியத்துடனேவிளங்கிய சிதம்பரத்திலேகூடி இருக்கக்கண்டோம் யாகத்

துக்குவாருமென்று சீர்போயாகிலும் நாரதரே அழைத்துக்கொண்டு மீள்வா யாகவென்று சொன்னார் பிரமதேவர்—எ-று. (ருஅ)

நயமுனியும்போய்நடவதிபன்றுடொழுதொல்லைச்
சயமலிதில்லைத்தாபதர்விண்ணோர்தமைநீர்காள்
பயன்மலியாகத்தனைவருமெய்தப்பணிநீயென்
றயனுரைசெய்தானென்றுரைசெய்தானனைவர்க்கும்.

இ-ள். நாரதமுனிவரும் சிதம்பரத்திலேசென்று நடராசன் ஸ்ரீபாதந் தரிசனம்பண்ணிச் சடுதியிலேவந்து ஞானவீரமிகுத்த தில்லைவாழந்தணரையும் தேவர்களையுங்கண்டு நீங்கள் புத்திமுத்திப்பயன் மிகுந்தயாகத்துக்கு எல்லா ரும் வரத்தக்கதாக் நீகற்பியென்று பிரமாசொல்லி என்னைவரவிட்டார் என் று அனைவர்க்கும் சொன்னார்—எ-று. (ருகூ)

நாரதனார்சொற்றேவர்கள்கேளாநகைசெய்தெம்
பேரவிதீயிற்றாவுகயாமேபெறுவோமிப்
பாரினினாளும்பேரருளாளன்பரதத்தே
ளாரமுதுண்போமினியவியுண்போமன்றென்றார்.

இ-ள். நாரதமுனிவர்வார்த்தையைக்கேட்டுத்தேவர்கள்நகைத்து எங்களு டைய அவிர்ப்பாகத்தை எங்கள்முகமாகிய அக்கினியிலே ஓமம்பண்ணக்கட வர் அதை நாங்கள்பெற்றுக்கொள்வோம் இந்தப்பூமியிலே நாள்தோறும் தம் பிரானுருடைய நிருத்தாநந்தத் தேன்பருகுகின்றோம் அதைஒழிந்து இனியுங்க ளஅவிர்ப்பாகங்கொள்ளோம்என்றார்கள்—எ-று.

உங்களவியை நெருப்பிலேபோடும் எங்களுக்குவேண்டாம் அந்தப்பதமெனு ஒருபொருள் நிகழ்ந்தமை கண்டுகொள்க. (கூ0)

மற்றவர்தஞ்சொற்பெற்றவனும்போய்மலரோன்முன்
சொற்றனனந்தக்கொற்றவன்யாமுஞ்சொன்னால்வந்
திற்றைமகங்கைப்பற்றுவனொன்றேயிறைவாழும்
பொற்றிகழ்தொல்லைத்தில்லையினெல்லைபுகுந்துற்றான்.

இ-ள். அந்தத் தேவர்கள்வார்த்தையைக்கேட்ட நாரதமுனிவரும் மீளப் போய்ப் பிரமாவின்முன்பே அவர்கள் சொன்னபடியேசொன்னார், அந்தவார் த்தையைக்கேட்ட பிரமாவானவர் நாரதர்போய் மீண்டதும்ஒழிய இரண்டா வது நாமும்சென்றால் இங்குவந்து இன்றுநடத்துகிற யாகத்தைக்கைக்கொண் டு முடிப்பர்என்று யோசித்து அநாதியே தம்பிரானார் திருநடஞ்செய்யும் பொ லிவுவிளங்குந் பழையதில்லைவனத்தி னெல்லையைச்சென்று கிட்டினார்—எ-று.

மலரவனுந்தாபதரொதிர்கொண்டானொனவாழ்வுற்
றலைபுனல்சென்றுடியபினொழுந்தாரழலாடு
நிலயம்வணஙகாநிகழ்சிவகங்காதரநீறா
தலைவபுயங்காபரணவிரங்காய்தகவென்றான்.

இ-ள். பிரமாவைப் பிரமரிஷிகள்யாவரும் எதிர்கொண்டார்கள் எதிர் கொண்டமாத்திரத்திலே நம்முடைய எண்ணம் முடியுமெனப் பிரமா மிகவு ம்பிரியமுற்றுப் பொற்றாமரைப்பொய்கையிலே ஸ்நானஞ்செய்து நியமம்முடி த்தெழுந்துசென்றுதியாடுங்கூத்தனை நமஸ்கரித்து விளங்காநின்ற சுத்தனே' க்ங்காதரனே, நீறுசார்ந்த திருமேனித்தலைவனே, நாகாபரணனே, என்னை யும் அடியாருடன்கூட இரங்கி அருள் என்று விண்ணப்பஞ்செய்தார் -எ-று'

இரங்காய்சரணென்று பாடமாகில் தேவரீர்பாதத்திலே சரண்புக இரங்கி அருள்வீரென்றுபொருளுரைக்க. (கூஉ)

வேதனும்வேள்விக்கேதிகழ்வானாய்விடைகொண்டே
நீதறமூலத்தானமிறைஞ்சிச்சிவலிங்கச்
சோதியைமேவச்செய்யிடமெங்குந்தொழுதன்பிற்
போதுகவென்றப்புலிமுனிசாலைக்குள்புக்கான்.

இ-ள். பிரமாவும் யாகம்பண்ணிமுடிக்கக்கருத்தராய் நடேசமூர்த்தியை நமஸ்கரித்து விடைபெற்றுக்கொண்டு யாசத்திற்கு விக்கினம்வராமல் ஸ்ரீமூ லத்தானமுடைய தம்பிரானையும்நமஸ்கரித்து வேண்டிக்கொண்டு திருப்பு லீச்சரமுதலான எங்குமுள்ள சிவலிங்கத் தானமெல்லாநதொழுது அன்பினு லேவாருமென்று அழைத்து வியாக்கிரபாதர்கைப்பற்றிக்கொண்டு அவர் பன் னசாலைக்குள்ளேபுகுந்தார்—எ-று. (கூரு)

இந்திரன்விண்ணோர்புலிமுனிநாகர்க்கிறையோன்மெய்ச்
சிந்தையரோனோர்சூழவிருப்பத்திகழ்போத
னந்தமிலாதீர்மகமுயல்வேனனைவீரும்
வந்தணைவானீர்தந்திடுவீரோவரமென்றான்.

இ-ள். இந்திரன் தேவர்கள் வியாக்கிரபாதர் பதஞ்சலி கேவலசகலம் நீங்கின சுத்த இருடிகள் மற்றுமுண்டானவர்கள் சூழ்ந்து இருப்ப நடுவே தேசஸ் உடனேவிளங்கின பிரமாவானவர் எல்லாரையும்பார்த்து முடிவில் லாத சிவபத்தியையுடைய நீங்கள்யாவரும் யான்பண்ணுகிற யாகத்துக்குவ ந்து அநுக்கிரகம்பண்ணும்படி வரந்தருவீர் என்றுகேட்டார்—எ-று. (கூச)

பூமகனெண்ணம்புகறருபோதுட்பொருளுன்னி
யோமெனவோதாதவனிதராறுரையனும்பர்
கோமகனீயுட்கொண்டதெனென்னக்குளிர்கஞ்சத்
தேமலிதாரோய்செப்பியதன்றேசெயலென்றான்.

இ-ள். பிரமதேவர் தாம் நினைத்துவந்தகாரியம் சொன்னவளவில் அதில் பிரயோசனம் பொசிப்புமாத்திரமே யாதலால் அதில் அபேட்சைய ற்றுப் பொருந்தாமல் தலை கவிழ்ந்திருந்தார்கள். பிரமா இந்திரனைப்பார் த்து உனது அபிப்பிராயம் என்னையென்று கேழ்க்கக் குளிர்ந்த பரிமளம்மி

சிய தாமரைமாலையையுடையவரே நீர் அநுக்கிரகித்ததன்றோ எனக்கும் பொருத்தமென்றான்—எ-று. (சுரு)

அங்கவனின்சொற்கொண்டுதுவண்டுள்ளயன்வேள்விக்
கெங்கணுமின்பத்தாபதருண்டாயினுமெந்தைக்
குங்கடமன்புக்கொப்பவரின்றென்றன்றோயா
னிங்குவருந்திற்றின்றெனநின்றநகிரவுற்று.

இ-ள். அவ்விடத்துத் தேவேந்திரன் அநுமதிபண்ணின பிரியவார்த்தையை உட்கொண்டு தில்லைவாழந்தணர் அநுமதிபண்ணாத இதறகுச் சித்தங் கலங்கிப் பிரமா யாகத்துக்கு நன்றாக உபதரிசனம்பண்ண எவ்விடத்தும் நல்ல பிராமணருண்டாயினும் எம்முடைய தம்பிரானிடத்தில் உங்களைப்போலப் பத்தியையுடையவர்கள் வேறில்லை எனபதினாலல்லவோ யான் இவ்விடத்திலேவந்து வருநதி யுங்களைவேண்டிக்கொள்ளுகிறேன் என்று பலகாலும் இரந்துசொல்லி—எ-று. (சுசு)

பூவமர்வோனப்புலிமுனிகைப்பொன்முகிழ்பற்றி
யாவதெனுனேதூதனுமானாலமர்தில்லைத்
தாபதரானோர்யாரையுமாவாழ்தருமவேள்விக்
கேவுதனீயேமேவுதலன்றோவியல்பென்றான்.

இ-ள். கமலாசனர் அந்த வியாக்கிரபாதருடைய முகிழ்போன்றஸ்ரீ அத்தத்தைப் பற்றிக்கொண்டு சொல்லுகிறார் நீரே பராமுகமாயிருநதால் எந்தக் காரியம்நிறைவேறும் யானே தூதனுமாய்வந்தெனகாரியஞ்சொல்லினமையால் தில்லைவனத்தில்பொருநதின பிரமரிஷிகள் எலலாரையும பெரியலட்சுமி கரமானயாகத்துக்கு என்னுடனேகூட வரவிடுதலை நீரேறறுக்கொண்டு செய்வதன்றோ கிரமம்என்றார—எ-று. (சுஎ)

கோகனதன்சொற்கொண்டுபுலிக்கான்முனிகோப
மோகமிலின்பத்தாபதர்மூவாயிரவோரு
மாகருமன்றத்தேகனையாமிங்கினிநுஙகட
காகவணங்கப்போய்வருவீரென்றறிவித்து.

இ-ள். பிரமாசொன்ன வார்த்தையை வியாக்கிரபாதர் உட்கொண்டு குரோதமோ காதிகளைநீங்கின சத்தியஞானத்துடனே கூடியிருக்கிற பிரமரிஷிகள் மூவாயிரவோரும் இந்திராதிதேவர்களும் கேட்ப யாம் இன்றுமுதலாக உங்களுக்காக நீங்கள்போய் வருமளவும் ஒப்பில்லாத சிதம்பரமூர்த்தியைத் திரிசந்தியும் நமஸ்கரிப்போம் நமக்காகப் போய்வாருங்களென்று அறிவித்து-

போதுகவென்றப்புலிமுனிபோதன்பொதுமேவுஞ்
சோதியைவந்தித்தருள்விரவெய்தத்தொழுதொலலோர்

காதலெனுடன்புற்றகலநினைப்போர்கமனேடு
மேதகுமெய்யும்போமினியென்றேவிடைகொண்டார்.

இ-ள். வருகவென்று வியாக்கிரபாதர் பிரமா இவர்கள் சிதம்பரமூர்த்தி யை நமஸ்கரித்து நிகழ்ந்தகாரியம் விண்ணப்பஞ்செய்து திருவருள்பெறத் தொழுகிற பழையபிரமரிஷி தேவர்கள்ஆகிய இவர்கள் ஆத்மநாயகனுடனே இரண்டற அன்புறக்கலந்து போகத் துணிவோர் யமனுடனே தூலசரீரமும் போவதுபோலப்போனர்கள்—எ-று. (சுகூ)

சென்றபினந்தத்திருமுனியுஞ்சீரரவோனும்
பின்றிகழ்வேணிப்பிஞ்ஞகன்மன்றம்பிரியாத
வொன்றியசிந்தைத்தாபதர்மீள்வுற்றுடன்வாழ்வ
தென்றுகொலோவந்திடுநெறியேதோவெனநொந்து.

இ-ள். மூவாயிரம் பிரமரிஷிகளும் பிரமா உடனே சென்றபின்பு வியா க்கிரபாதரும், பதஞ்சலியும், பின்தாழ்ந்துவிளங்குகின்ற சடைக்கற்றையை யுடையபிஞ்ஞகனுடும் சிதம்பரத்திலே யொன்றி இருக்கிற சித்தபாகத்தை யுடையபிரமரிஷிகள் மூவாயிரவோரும் மீண்டு எம்முடனேகளிகூர்ந்து வா ழுநாள்என்று உண்டாமோ அவர்களை அழைக்கும் உபாயம் ஏதோவென்று விதனப்பட்டுக்கொண்டு—எ-று. (எ0)

அந்தமிலின்பத்தெந்தைபிரானுரமர்நாளிற்
சிந்தைவிளங்கத்தில்லைவிளங்கத்தேனுருங்
கந்தவலங்கற்சுந்தரசிங்கக்கவுடேசன்
வந்தமைசந்தச்செந்தொடையான்மேல்வருவிப்பாம்.

இ-ள். முடிவில்லாதபேரின்பத்தையுடைய-எந்தைபிரானுராகிய- வியாக் கிரபாதரும பதஞ்சலியு மிவ்வாறிருக்குநாளில் தனக்குச் சித்த சுத்தியுண்டா கவும் தில்லைத்தலம் விளங்கவும் தேனிறைநதவாசனையையுடைய மாலையணி ந்த சுந்தரனுகிய சிங்கவன்மனெனும் கவுடதேசத்தரசன் சிதம்பரத்திற்குவ ந்தமையை அழகுபொருந்தியசெம்மையாகிய செய்யுட்களினுலே மேற்சொ ல்லுவாம்—எ-று. (எக)

நடராசச்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-உஉஅ.

---

# இரணியவன்மச்சருக்கம்.



முற்காலத்திமையவர்கண்முன்பணிந்துதொழமுதல்வ
னற்காலத்துடனவில்வானல்வகைமாயையுநடத்திச்
சொற்காரும்பொருளெவையுந்தொல்லூழியுறத்தொடுத்த
வற்காலநிலைவிடிவதாமளவாமமையத்து.

இ-ள். பிரமகற்பத்திற் பிரதமமான சிருஷ்டிகாலத்திலே தேவர்கள் எல்லாரும்வந்து நமஸ்கரித்துச் சிருட்டி அவதாரியை அருளிச்செய்யவேண்டுமென்று பிரசன்னம்பண்ண முதல்வனாகிய பரமேசுரர் தனக்கு நல்லதுணைக்காரணமான காலதத்துவத்தை அதிட்டித்து அருளிச்செய்வார் தனுகரண புவனபோகமாகிய நால்வகைபபட்டமாயைகளையும் நடத்திச்சொல்லின்கட் பொருந்தும்பொருளெவையுமாகிய மந்திரபதவன்னபுவன தத்துவங்களும் தொன்மையையுடைய ஊழியில்முடியத்தொடங்கிச் சங்காரகாலத்துநிலை முடிவதாகிய எல்லையாம்பருவத்தில்—எ-று. (க)

சத்திகளிற்கருத்திருத்தித்தாவிலருமாமாயை
யுய்த்ததனிநாதியைவகையுமுதிப்பித்து
வைத்தெழுந்துமொழிமறைநூன்மந்திரமேமுதலாய
சுத்தவழிபிரித்தசுத்ததத்துவங்கடொருமுதலில்.

இ-ள். சிருட்டிக்க வேண்டுமென்கிற இச்சையினாலே ஞானசத்திமுதலிய சத்திகளில் கிருபையைபொருத்திக் குற்றமற்றநிஷ்களமான மாமாயையைச் சேர்ப்பித்து அதனில் நாதம் - விந்து - சதாசிவம் - மகேசுரம்-சுததவித்தை என்னும் பஞ்சதத்துவங்களையுமுண்டாக்கி ஒடுக்கின-வன்னம் - பதம் - வேதாகம சாத்திரங்கள்-மநதிரகலை-சூக்ருமாதிவாக்குகள் - புவனங்கள்-மற்றுமுண்டான சுத்தாத்துவாவைத்தோற்றிவித்து அசுத்ததத்துவமாகிய பிரிதிவியாதி கலாந்தமாகவொடுங்கின அதோமாயையில்—எ-று. (உ)

கலைமுதலாநிலன்முடிவாக்கண்டுணர்வங்கதிற்கருதிப்
பலவுயிர்களிருவினையாற்பயனுலகம்பெறப்பயிற்றி
மலரயன்மால்வரநல்கிமறநிலைவைநீர்பற்றிவிரித
நலைகடலும்வடவரையுமாள்வீரொன்றளித்தருளி.

இ-ள். கலாதத்துவமுதல் பிரிதிவிதத்துவம் ஈருகச்சிருட்டித்து ஞானக்கிரியை அந்தமான சுத்தவித்தியாதிகள் கலாதிகளுக்கு உணர்வாகவும் கலாதிகளந்தக்கரணதிகளுக்கு உணர்வாகவும் அநதக்கரணங்கள் புறக்கரணங்களுக்கு உணர்வாகவும் இநதவகையிலே தம்முடையசததிகள்நின்று பிரேரிக்கும்

படிகற்பித்துச் சர்வாத்துமாக்களுக்கும் புண்ணியபாவத்துக்கு ஈடாகத் தந்து வங்களைக்கூட்டிப் புசிப்பிக்கத்தக்கதாக அநுக்கிரகசத்தியையுங் கற்பித்து பிரமாண்ட சிருஷ்டித்திதிகளுக்குக் காரணராக பிரம விஷ்ணுக்களையுண்டாக்கி இந்தப்பூலோகத்தில் சிருஷ்டி திதிகளுக்கு அதிகாரிகளாய்த் திருப்பாற் கடலும் மனோவதியாகிய வடவரையும் ஆண்டுகொண்டிருங்கள் என்று திருவுளம்பற்றியருளி—எ-று. (ங)

அந்தணர்களுளராளுராகுதிக்காமாதாக்க
டந்தனமந்திரமுன்னேசாற்றினமித்தன்மையினுன்
முந்துமவிபெறத்திங்கண் மும்மாரியிமையவர்கள்
சிந்தவுணவுளவாகியகிலமெலாந்துயர்தீர.

இ-ள். முன்பு பிராமணரைச் சிருட்டித்தோம் வேள்விக்காக பஞ்சகோமாதாக்களைச்சிருட்டித்தோம் மந்திரங்களை ஆதியிலே அருளிச்செய்தோம் இத்தன்மையால் தேவர்கள்முந்தும் அவிர்ப்பாகம்பெறவும் மாதம் மும்மாரி பெய்யவும்அதனால்பயிர்கள் விளையவும் உயிர்களுக்கெல்லாம் ஆகாரம் உண்டாகி பூலோகமெங்குந் துயரந் தீரவும்—எ-று. (ச)

சுருதிவழியொழுகினர்கள்சுவர்க்கத்தாராகமநூற்
சரியைகிரியாயோகர்சாலோகசாமீப
வுருவமமைவினராகவுதவுதுமெம்முடனுகும்
பெருகியஞானிகளெம்மைப்பெற்றார்போக்கற்றாரே.

இ-ள். இப்படி யுண்டான உலகத்திலே வேதவிதிப்படி நின்றவர்கள் சுவர்க்கபதவியைப் பெறுவார்கள் ஆகமத்திற்கூறிய சரியை கிரியா யோகத்தை அநுட்டித்தவர்கள் சாலோக சாமீப சாரூப பதம்பெற அருள்வோம் எம்முடனே ஒருப்பட்ட பூரணஞானமே தங்களுக்கு அறிவான ஞானிகள் எம்மைப்பெற்றவர்களும் எம்முட னீக்க மற்றவர்களுமாம்—எ-று. (ரு)

மண்ணுலகின்முறைபுரியாமடவரைநால்வகைத்தண்டம்
பண்ணிநெறிநடத்திடவும்பலரறியாவகைபுரிந்த
வெண்ணில்வினைவிதிவழியேநுகர்விக்குமியல்பிற்குந்
திண்ணியராமிருதருமருளராகச்செய்துமெனா.

இ-ள். பூலோகத்திலே வேதாகமமார்க்கத்தில் நடவாத பேதையரை சாம பேத தான தண்டம்பண்ணிச் சன்மார்க்கத்தில் நடப்பிக்கவும் அந்தக் கரணங்களினாலே பலரறியாவகை குரூரமாகப் பண்ணின எண்ணிறந்த இருவினையின் விதிப்படியே நரகங்களிலேபுசிக்கும் இயல்பிற்கும் திட சித்தரான தன்மசொரூபர்களாகவிரண்டுபேரைக்கற்பித்தோமென்று—எ-று. (சு)

வானவர்கோனுரைத்திரவிமைந்தர்களிலொருவனுக்கு
ஞானவிழிநல்கிமனற்பதியுங்கொடுத்தகற்றி

யீனமிலாவொருவனுக்கங்கிலகுமணிமுடியளித்துத்
தேனகுதாரணிவித்துத்தேவர்கடங்கைக்கொடுத்தான்.

இ-ள். தேவதேவர் தேவாகளுக்கு அருளிச்செய்து ஆதித்தன் புத்திரர் களில் ஒருவனுக்கு ஆத்மகர்மார்ச் சிதந்தெரிய ஞானதிருட்டி கொடுத்துப்பி ன்பு எமனுடைய பூமியதிகாரமுங்கொடுத்தனுப்பிச் சர்வலக்ஷணமுமுள்ளமற் றொருவனுக்குச் சந்நிதியிலே விளங்கும் மணிமுடிசூட்டி வண்டுபொருந் திமகிழும் ஆத்திமாலையும் அணிவித்து இவனைக்கொண்டு இராச்சியம் பண்ணி க்கொள்ளுங்களென்று தேவர்கள்கையிலே காட்டிக்கொடுத்தார்-எ-று. (எ)

மற்றவருங்கொடுபோந்துவடவரைப்பால்வருவிக்கும்
பெற்றியினுலணைந்துநாற்பெருங்கடலுட்படும்புவிக்குக்
கொற்றவனுய்மனுநாமங்கொண்டுநடத்தினனடைவே
முற்றிகழவருமனுக்களொருநால்வர்முடிந்ததற்பின்.

இ-ள். அத்தேவர்களும் கைபிடித்துவந்து மகாமேருபாரிசத்திலேசேர்த் தமுறைமையினுலே கௌடதேசத்திறசென்று நாலுகடலுக்குட்பட்ட பெரி யபூமிக்கு இராசாவாய் மனு என்கிற பேரைக்கொண்டு வேதாகமமார்க்கத்தில் நீதிநடத்தினன் அந்தஅடைவே அவனைப்போல முன்னடந்த மார்க்கத்திலும் நன்ருக எழுபத்திரண்டு யுகத்துக்குமேல் வரப்பட்டமனுக்கள் நாலுபேர்கள் வந்து ஒவ்வொருவராக இராச்சியம்பண்ணி எழுபத்திரண்டு சதிரயுகமும் முடிய ஒவ்வொருவராக முடிநதளவில்—எ-று. (அ)

அன்னவர்கள்பின்னவனுமனுவாகிவவனுக்கு
மன்னுமனைவியரிருவருளராகிமற்றவரின்
முன்னவள்பாலுடன்மடங்கன்முழுநிறமாமகவுதிப்பப்
பின்னவள்பாலெழிலினராயிருதநயர்பிறந்தார்கள்.

இ-ள். அப்படிப்பட்ட நாலு மனுக்களுக்குப்பின் கௌடேசனென்னுமனுவுமுளனுகி நீதிசெலுத்துங்காலத்தில் அவனுக்குமிலைபெறுமனைவியர் இருவருண்டாகி அந்தஇரண்டு ஸ்ரீகளில் பிரதானமான ஸ்ரீயினிடத்தில் சரீரமுழுதும் சிங்கவாண்ணமாக ஒரு குமாரனுண்டாக அநத இளைய ஸ்ரீயினிடத்தில் ராசலட்சணம்பொருநதின இரண்டு குமாரா பிறநதாாகள்—எ-று. (கூ)

விரவுசிங்கவருமன்பின்வேதவன்மன்சுமதியென
வருதநயர்மூவர்களுமறைமுறையின்மலிசடங்கு
பெருகியபின்படைபயின்றுபிறங்குமதகரிபரிதேர்
கருதியுகைத்திடுமாறுமொன்ருகக்கற்ருர்கள்.

இ-ள். பொருநதின சிங்கவன்மன் அவன்பின் வேதவன்மன் அவன்பின் சுமதி யென முறையே தோன்றின மூன்றுகுமாராகளும் வேதமார்க்கத்தில் க்ஷத்திரியாங்கமான கிரியைபண்ணி முடிநதபின ஆயுதசிரமம்பண்ணி முடித்துப் புகர்விளங்குமத்தகசம-குதிரை-தேர்-முதலானவை ஏறியோட்டு முபாயங்களும் குறைவற முழுதுங் கறருாகள்—எ-று. (கம)

கற்றதற்பின்முன்னவன்மெய்க்களங்கத்தாலரசாள்கை
குற்றமுளதினியுலகிற்குலமைந்தரிருவரினும்
பெற்றவர்கள்பெறுகின்றார்மனுவிசைவாற்பெருந்தவங்க
ளுற்றொருங்குமிதுசாலவுறுதிநமக்கெனவுணர்ந்து.

இ-ள். பலகலையுங்கற்ற அதன்பின் முந்தின குமாரனானவன் தன்னுடைய சரீரத்தின் குற்றத்தினாலே நமக்கு ராச்சியம்பண்ணுகைக்குத் தோஷமுண்டு இந்தப்பூமியில் தம்பிமார் இருவரினும் மனுவின் இசைவுபெற்றவர்கள் மனுவுக்குப்பின் நம்முடைய இராச்சியம் பண்ணப்பெறுகின்றார் மேலான தபசுகளைப்பொருந்திச் சித்தத்தையொடுக்குவதே மிகவு மாத்மலாபம நமக்கென்று திடமாக விசாரித்து—எ-று. (௧௧)

மனுவின்மலரடிவணங்கிமன்னவனேயடியேனற்
புனிதமிகுதீர்த்தங்களெங்குளவும்புகுந்தாடிப்
பனிமதியம்வளர்சடையோன்பதிகளுநின்றிருமேனி
யினிதமரும்படிதொழுதிங்கெய்தவருளெனவிசைத்தான்.

இ-ள். மனுவின் பாதமலர்களை வணங்கி மகாராசனே அடியேன் அட்டதிக்கிலுமுள்ள நல்ல புநிதமான தீர்த்தங்களிலெல்லாஞ்சென்று ஸ்நானம் பண்ணிக் குளிர்ந்த சந்திரன் தவழ்ந்து வளருகின்ற சடையையுடைய பரமசிவத்தின் திருப்படைவீடுகளில் வீற்றிருக்கும் சிவமே உன் திருமேனியாகப பாவித்துத் தொழுதவரும்படி விடைதாவென்று விண்ணபபஞ் செய்தான்

மன்னவனுமிகநொந்துமைந்தர்மழவிதுமுதிர்ந்த
வென்னுடையதளர்விதுநீயிசைந்ததவமினியாமோ
பொன்னணியும்பொருகரியும்புரவிகளும்புணர்தேருங்
கொன்னவிலும்படையுநெடுங்குவலயமுங்கைக்கொண்டு.

இ-ள். இதைக்கேட்ட மனுவும் மிக விதனப்பட்டுப பிள்ளைகளெனிலோ இளமையுடையவர்கள் நானுமோ முதிர்ந்த தளர்ச்சியை அடைந்தேன் நீ பொருந்தின தபசுகளில் முயலுவது இராசநீதிக்குப் பொருந்தாது பொருந்தினது கேள் அபிடேகமுதலான கனக இரத்தினாபரணங்களும் இரதகஜதுரகபதாதிகளும் பெரிய இராச்சியமும் உன் வசப்படுத்திக்கொண்டு-எ-று.

திருந்தநடத்திடுமதுகாண்டவமென்றுசெப்புதலும்
பரந்தபனுமணிப்பாந்தட்பாரந்தாரெனப்பரித்த
பெருந்தடந்தோளிவையின்னும்பேருழிபொறுத்தற்கென்
னருந்தவமேதருமென்றானரசனவனதனுான்.

இ-ள். நீதிமார்க்கத்தினாலே நடத்துவது நமக்குத்தபசு என்று அருளிச செய்தலும, விரிந்தபடமும் இரத்தினங்களும் பொருந்தின சேடனால் சும

க்க ஒண்ணாத பூமியை ஆத்திமாலையாகத்தரித்த உன்னுடைய உயர்ந்த பெரியதோள்கள் நீ இப்போ சொலப்பட்ட சதுரங்கமுதலான இராச்சியமும் இன்னமுங் கற்பாந்தமளவாகத் தாங்குதற்கு நான் பண்ணுகிற தபசுதானே உண்டாக்குமென்றான் கௌடதேசனும அதைககேட்டு யாதொரு பிரதி உத்தரவுஞ்சொல்லாமல் தலைகவிழ்ந்து பூமியைப்பார்த்திருநதான்—எ-று.(௧௪)

வேறு.

அங்கதிசைவர்கவிரவேதனியகன்று
கங்கைகடல்கூடுதுறைகாதலுடனாடிச்
சிங்கவருமாவருடிருந்தவருமாமுற்
றங்கிமிகுவங்கமுயர்சாவகமடைந்தான்.

இ-ள். இவ்வாறு மூர்ச்சிதனைப் பிரதி யுத்தரஞ்சொல்லாமல் இருந்ததுவே அநுமதியாகக் கைக்கொண்டு அன்றிராத்திரியே தனியே புறப்பட்டு ஊரெல்லை நீங்கிப்போய்க் கங்கை முகத்துவாரத்திலே விருப்பத்துடனே தீர்த்தமாடி சிங்கவருமாவானவன் அருள் திருநதவரும் வண்ணம் காசிக்ஷேத்திரத்திலே முந்தவசித்து மிகுந்த அங்கதேசம் பெரியசாவகநாடுவந்து பொருந்தினன்—எ-று. (௧௫)

மற்றதுகடந்துவளரொட்டியவரைப்பிற்
பெற்றமிகுபீமமிகுநாதனடிபேணி
யெற்றுபுனலாபதிகளெங்கனுமிறைஞ்சித்
தெற்றடவியூடுயர்தெலுங்கமதணைந்தான்.

இ-ள். அந்தசசாவகநாடுநீங்கி யுயர்நத ஒட்டியதேசத்திலே வசவபூசிதமான பீமேச்சுவரன்பாத சேவைபணணி அவ்விடத்து எங்குமுள்ளதீர்த்தந திருப்படைவீடெல்லாஞ்சேவித்து ஒன்றுக்கொன்று பின்னிநெருங்கும் பெருமரக்காடுசூழும் தெலுங்கபூமியை யடைந்தான்—எ-று.

எற்றுபுனல்-திரைமோதுந்தீர்த்தம், வசவபூசிதம் என்பது-நந்தியால் பூசிக்கப்பட்டது. (௧௬)

பருப்பதமிறைஞ்சிவிழிசோதிபயில்வித்துத்
திருத்தகுநதிப்பொருவிநீர்த்தமவையாடி
யருத்திமிகுகாளனுடனத்திபணிநித்தன்
பொருப்புறவுடன்றொழுதுபோதலுறுநாளில்

இ-ள். ஸ்ரீசைலத்தைக்கண்டு வணங்கி சோதிமயமான சிவலிங்கத்தை விழியிலநீங்காது பொருநதவிததுவை வபவமிகுநத புண்ணியநதி பலவும்ஸ்நானஞ்செய்து மோட்சார்த்தத்தில் விருப்பமுள்ள காளனென்னும் நாகமும், ஆனையும்பணியும் பரமசிவத்தையும் காளத்திமலையினையும் சாட்டாங்கமாகத் தொழுது தெறகுநோக்கி வருநாளில்—எ-று. (௧௭)

காடதனினூடுசிலையோடுதனியோடும்
வேடனையழைத்துநிழன்மேவியிருவெ:
கோடுமலிகானினுயர்குன்றுகளின்வென்றிச்
சேடுளவியப்புநனிசெப்பெனவுரைத்தான்.

இ-ள். வழியில் காட்டின் நடுவே வில்லுங்கையுமாகத் தனியேயோடுகி ன்ற ஒரு வேடனைக்கண்டு அழைத்து ஒருமரநிழலிலே தன் அருகே யிருக்கச் சொல்லி இக்கொம்புகள் பின்னிமிகுந்த பெருமரக்காட்டில் உயர்ந்தமலைக ளில் வெற்றியுடைத்தான மேலானபுதுமையுள்ளதாகக் கண்டவைகளைச் சொ ல்லென்றுவினவினான்—எ-று. (கஅ)

வேடனும்வணங்கியடியேன்மிருகநேடுங்
காடிதுவளைந்துகருநாய்கொடொருகாளை
யோடுமிரவும்பகலுமுண்ணினுயிருண்ணீர்
நீடுதடமுண்டமுதநீருமுளவெங்கும்.

இ-ள். வேடனும்வணங்கிக் கும்பிட்டு விண்ணப்பஞ்செய்வான் அடியே ன் மிருகம் ஏறுங் காலிறங்கு கால்பார்க்கும் காடிது இந்தக்காட்டைச்சூழ்ந் து நாய்கத்தும்படி * ஒருபிள்ளை இரவும்பகலும் ஓடித்திரியும் குடித்தவர்கள் பிராணனைவாங்குகிற தண்ணீர்மிகுந்த குளமுண்டு குடித்தவர்கள் ஒருகா லும் சாகாத் தண்ணீர்க்குளமும் பலவிடத்துமுண்டு—எ-று. (கக)

எண்டிசைமயக்குமொருதாரியெழினிழல்
விண்டகல்விலாததருமேவுமொருதாரி
கண்டவர்கரந்துறைகறங்குமொருதாரி
கொண்டநிழல்கண்டுவிழுகூவலொருதாரி.

இ-ள். ஒருவழி தன்னிடத்திற்சென்றவர்களை எட்டுத்திசையும் தெரியாத வண்ணம்மயக்கும் விளங்காநின்றநிழல் காலையும்மாலையும் தன்னைவிட்டு கிழ க்குமேற்கு நீங்குதலுண்டாகாத மரங்கள்பொருந்தும் ஒருவழி முதற்கண் டவரை பின்காணமலிருக்க அவர்வார்த்தை முழங்காநிற்கும் ஒருவழி கிண ற்றையெட்டிப்பார்த்துத் தன்னிழலைக்கண்ட மாத்திரத்திலே நிழலுடனே தாங்களும்வீழும் கிணறுமுள்ளது ஒருவழி—எ-று. (உ0)

ஓவிடலிலோசையொருபாலெழுநதிப்பான்
மாவடிவிடாதவொருதேவருளர்மாடே
கூவன்முழையால்வழிகுலாவியொருபசசைப்
பாவையிருபோதும்விரிபோதுபயில்விக்கும்.

இ-ள். ஒழியாத ஓசைமிகுந்த ஒருபாலாற்றங்கரையிலே மாவடிநீங்காமல் ஒருதேவர் இருப்பார், அவர்க்கு அருகாக ஒருகிணற்றுக்குள்ளே ஒருகிளைவழி யாக வந்து ஒரு பச்சைப்பாவை இரண்டுபோழ்தும் அந்தத்தெய்வத்தைப்பா ர்த்துக்கொண்டு சென்று பலபூவையுஞ்சொரியாநிற்கும்—எ-று. (உக)

* ஒருபிள்ளை - வைரவா.

நதியாவது திருக்கம்பையாறு. மாவடிவிடாத ஒருதேவர் ஏகாம்பரநாதர், கூவல்முழையென்பது, ஒருபிலம். பச்சைப்பாவை, காமாட்சியெனக் கண்டு கொள்க.

துரங்கமிசைகொண்டுவளைசெண்டுகொடொர்கண்டன்
பரந்துல்வும்வெள்ளமலிபன்னதிபுகுந்துட்
கரந்தவிடமுன்னரிதுகானமிதன்மேன்மை
யிருந்தபடிசொல்லிலவையெல்லையிலவென்றான்.

இ-ள். குதிரை ஏறிக்கொண்டு வளைசெண்டு கையிலேபிடித்துக்கொண்டு ஒரு*கிராதன் நித்தம் பரவித்திரியும் அநேகம் ஆறுபெருகிவந்து இன்னவிடத்திலேபோனதென்று தெரிதற்கருமையாம்,இந்தக்காட்டில் பெருமைபுதுமையுள்ளதுஎல்லாம்சொல்லில் ஒருகாலமு முடியச்சொல்லப்போகாதுஎன்றான்.

மற்றவரையெய்தவழிசெய்கவெனவேடன்
றற்றசரியூடுகொடுபோகியிவர்சொன்ன
கொற்றவரெனக்குமரனுங்குறுகினன்முற்
கற்றமறைசொற்றமறைகம்பர்திருமுன்பு.

இ-ள். நீசொன்ன மாவடித்தேவரைக்காணத் தக்கதாக வழிவிடென்று சிங்கவன்மன்சொல்ல வேடனைவன் சுவடுமறைந்த சரிவழிக்குள்ளாகக் கொண்டுபோய் இவர்தாம் நான்சொன்னதேவரென்று காட்டக்கவுடதேச குமாரனும் முன்னே பிரமாதிகளாலே கற்கப்பட்டவேதங்கள் ஈச்சுவரயிக்கியம் விஞ்ஞாபிக்கும் திருவேகம்பர்திருமுன்னே அணுகினன்—எ-று. (உங)

பேசரியவன்பொடுபணிந்துபெருவாழ்வுற்
றாசையுடன்முக்கணரையங்கணரெனக்கண்
டேசில்புகழ்கூறியிருபோதுமகலாமெய்ப்
பூசனைகள்செய்தருள்பொருந்திடவிருந்தான்.

இ-ள். பேசுதற்கு அரிய பத்தியுடனே நமஸ்கரித்துப் பெரும்பேறு பெற்று விருப்பத்துடனே திரிநேத்திரரை கிருபாகடாக்ஷ முள்ளவரென்று தரிசித்துப் பொல்லாங்குஅற்ற சிவத்தியானம்பண்ணி அகோவிராத்திரிநீங்காமல் சத்தியமான பூசைபண்ணி அருள்பொருந்த இருந்தான்—எ-று. (உச)

அண்டர்பெருமானழகுகண்டகல்வதின்றிப்
பிண்டிகனிதேனுணவுபெற்றவையிடக்கொண்
டுண்டுறையுநாளிலொருநாட்குமரனுண்மைத்
திண்டிறலினன்வருகவென்றுமொழிசெய்தான்.

இ-ள். ஏகாம்பரநாதர் திருமேனி அழகைக்கண்டு விட்டுநீங்காமல்தினமா மாம்பழந்தேன்முதலான வுணவுகளை வேடன் கொண்டுவந்துகொடுக்கக்கொ

---

* ஈண்டுக்கிராதன்என்பது - ஐயனார்.

டுக்கக் கைக்கொண்டு அருந்தியிருக்குநாளிலே ஒருநாள் கௌடதேசகுமாரனானவன் வேடனைப்பார்த்துச் சத்தியமான திண்ணிய வதிசூரனே வருவாயாகவென்று சொன்னான்—எ-று. (உ௫)

தென்கடலிடைப்பொருவிறேசமதுலாவிக்
கொன்கடறுடைக்குடகடற்கரைகடப்பா
னென்கடனெனக்கடறியாவுமகல்விப்பா
னின்கடனெனக்குமரனெண்ணநிகழ்வித்தான்.

இ-ள். தெற்குச் சமுத்திரத்துக்குட்பட்ட ஒப்பற்றதேசங்களில் சஞ்சரித்துப் பெருமையுள்ள சுரவழியையுடைய மேல் கடற்கரை வழியாகப் பூமிபிரதக்ஷணம் பண்ணுவதே எனக்குச் சங்கற்பமென்றும் எனனைக்கொண்டு வழியெல்லாங் கடபிக்க உனக்குக்கடனென்றும் கௌடதேசகுமாரன் தன்னுடைய அபிப்பிராயந் தெரியச்சொன்னான்—எ-று. (உ௬)

அந்தவுரைகொண்டெயினனுநிலடியேனுற்
றிந்தவனமுங்கடறியாவையுமறிகதே
வந்துகொடுபோவனிருமன்னவெனமுன்னே
வெந்திறலினனடிபணிந்துவிடைகொண்டான்.

இ-ள். கௌடதேசகுமாரன் அபபடிச்சொனன வாாத்தையைக்கேட்டு வேடன் அப்படியே திருவுள்ளமாகில அடியேன்சென்று இபபடிப்பட்டகாடுகளுஞ் சுரவழிகளும் பாாத்தறிநது அழைத்துக்கொண்டு போவேன் இவவிடத்திலே மகாராசனே இருப்பாயாகவென்று குமாரன்முனனே சொலைத்தொழிலில் சூரனாகிய கிராதகுமாரன் அவ்வரசனைப்பணிநது விடைகொண்டான்—எ-று. (உ௭)

காடுமலையுங்கடறுமாடுதடமாறுங
கூடுமடுமீனமெனநீடுகுலவேட
ளேடியலமந்துசில்நாள்கனொழிவித்துத்
தேடிவழிகண்டபடிசெப்பவணைவுற்றான்.

இ-ள். காடுகள் மலைகள் சுரவழி ருஷிகள் வனசரர் முதலானோர் ஆடப்பட்ட கடற்கரையும் புறச்சனைப்பக்கங்களில் ஏறுகால் இறங்குகால் வழிகளும் நீங்காமல் மடுவில் வாழுமீன்போலத் தடையறவோடி இளைத்து நெடுநாளாகத் தேடித் தான்வழிகண்டபடியை யிராசகுமாரனுக்குச் சொல்ல அணைநதான்—எ-று. (உ௮)

அங்கவனணைந்தரசன்மைந்தனடிபேணித்
துங்கவனமங்கணுழைதொல்சரியுமில்சீர்ச்
சங்கவனமுங்கவனமாறருவிதண்கா
னெங்கணுநெருங்கியுளதில்லைவழிசெல்ல.

இ-ள். அந்தக்கிராதன் இராசகுமாரன்அருகேவந்து நமஸ்கரித்துப்பெருவனம் சூரியகண்ணுக்கு நுழையத்தக்க பழையசரிவழியுமில்லை ஓசைபொருந்தின * சங்கமுகக்கடலுந் திரைப்பாச்சலொழியும் o புகார்முகங்களுங் குளிர்ந்த இளங்காடுகளும் எவ்விடத்திலுஞ் செறிந்திருக்கும் அப்பாற் செல்ல வழியில்லை—எ-று. (உகூ)

பின்னுமதன்மாடுசிலநாணடைபெருக்கிச்
சென்னெறியின்முன்னொர்நதிசேரவளர்தில்லைத்
துன்னடவியாயதுதுணுக்கெனமிகுத்தே
யென்னுளநடுங்கும்வகையெங்குமுளதங்கண்.

இ-ள். பின்னரும் அந்தப்பக்கத்திலே சிறிதுநாள் போவதும் வருவதுமாகச்செய்து செல்லுகிறவழிக்குமுன் ஒரு ஆறுகுறுக்கிட நெருங்கிவளர்ந்த தில்லைக்காடு செறிந்திருந்தது என்னுள்ளம் துணுக்கெனநடுங்கும்படி காடுமுழுதும் கொடியதெய்வமாகஇருந்தது அவ்விடத்திலே—எ-று. (௩0)

புண்டரிகம்விண்டமலர்பொன்மலிசுனைப்பா
லொண்டனியிருந்தோர்புலியன்பெரிதுறங்கக்
கண்ட னனடுங்கினன்மடங்கினனெடுங்கான்
மண்டியிதுவந்தபடியென்றுரைவருத்தான்.

இ-ள். மலர்ந்த பொற்றாமரைச்சுனைக்கரை அருகே தூய்ய இடத்திலே தனியே ஒருபுலியன் இருந்து உறங்கினன் அதைக்கண்டு நான் முன்னிலும் இரட்டிப்பாகப் பயப்பட்டுதிரும்பி ஓடிப்போந்தேன் அந்தப் பயமிகுதியினாலே நெடுந்தூரமானகாடுங்கழிந்து சடுதியிலே போந்தேனென்று சொன்னான்—எ-று. (௩க)

கேட்டலுமகிழ்ந்துவினையொத்தகிளர்வெய்தித்
தேட்டமுறுவேட்கைமிகுசிங்கவருமாநீ
காட்டுபுலியன்றனையெனக்கடிதுபோவான்
மீட்டுமுயர்கம்பனைவணங்கிவிடைகொண்டான்.

இ-ள். கிராதன் வார்த்தையைக்கேட்டமாத்திரத்திலே இருதயகமலமலர்ந்து கன்மசாமியமுமான இச்சையுடனே ஆசாரியனைத்தேடுகிற மந்தரதரசத்தினிபாதம்பொருந்தின வேட்கைமிகுந்த சிங்கவன்மாவானவன் நீபுலியனைக்காட்டுவா யாகவென்று சொல்லிக் கடுகப் போம்படிவிரைந்து செல்லும் சித்தத்தை மீளத்திருப்பிப் பெரிய ஏகாம்பரநாதனை நமஸ்கரித்து விஞ்ஞாபனம்செய்து விடைகொண்டுபோந்தான்—எ-று. (௩உ)

---

* சங்கமுகம் - என்பது-கடலில் நதிசேருமிடம்.

o புகார்முகம்-என்பது-முகத்துவாரம்.

அத்தனுடனாருயிர்கள்கூடவணைவிக்குஞ்
சத்திதருவேடனரசன்றனயனைக்கொண்
டெத்தகையகானமுமியாறுமகல்வித்துச்
சித்தமலிதில்லைவனவெல்லைசெறிவித்தான்.

இ-ள். பரசிவனோடு ஆன்மாக்களைச்சேரக் கூட்டுவிக்கும் அருட்சத்தியையொக்கும்வேடன் இராசகுமாரனைக்கைக்கொண்டு எந்தப் பெரியகாடுகளும், ஆறுகளும், நடந்துகடப்பித்துத் தரிசனமாத்திரத்திலே சித்தஞ் சிவமாக்குந தில்லைவனத்தினெல்லையை அணுகுவித்தான்—எ-று. (௩௩)

ஆவிகண்மலங்கழுவுமாசிலருள்போல்வாழ்
வாவிகமலங்கணயனங்கண்மலிவித்துற்
றேவடுகொடுஞ்சிலையன்முன்செல்பொழுதிற்கொண்
டோவியமெனும்பரிசிருந்தவனையுய்த்தான்.

இ-ள். சர்வாத்மாக்களையும் பாசச்சேதம்பண்ணுகிற சுத்தமான அருட்சத்திபோல்பொருந்திய பொற்றாமரைத்தீர்த்தத்தையும் தாமரைமலர்களையும் கண்குளிரப்பார்த்து நின்று அம்பினாற்கொல்லும் சிலையையுடையவேடன் அரசனைக் கைப்பற்றிக்கொண்டு செல்லும்பொழுது எழுதிவைத்த சித்திரம் போலே இருந்து உறங்கும் அவனைக்காட்டினான்—எ-று. (௩௪)

வேறு.

ஏராருங்குமரன்முனியிருந்தபடிகண்டஞ்சிச்
சேராதேயகலமனந்தெரியாதுதிருவுள்ளம்
பேராதநிலைகலக்கல்பிழையாகுமெனவுய்த்தா
னாராதபெருங்காதலருஞ்சாபம்புரியச்சம்.

இ-ள். அழகுபொருந்திய இராஜகுமாரன் வியாக்கிரபாதமுனிவர் நிஷ்டையிலிருக்கும்பரிசைக்கண்டு பயப்பட்டு மனதினாலும் அணுகப்போகாமனின்று பெரியோர்கள்திருவுள்ள மெப்படியாமோ அதுவும் அன்றி நீங்காத சிவானுபோகநீக்குதல் அபராதமாய்முடியுமென்று நினைத்து ஒழியாத ஆசையையும் அரியசாபமிடுவாரென்கிற அச்சத்தையும்பொருந்தி—எ-று. (௩௫)

அச்சமிகுமிவனிருப்புமுணர்வுமிகவணித்தாகை
நிச்சயம்வற்கலைபுலராநீர்மையதுபலாசிலையும்
பொச்சைதருகுசைப்புல்லும்பொலிசமித்தும்பூங்கலனும்
பச்சைபடமிசையுலராப்படர்சடையும்பரபபுதலால்.

இ-ள். நமக்குப்பயத்தை மிகவுண்டாக்கு மிவர் இருக்கும்சமாதியும் தியானவுணர்வும் சடுதியிலே உண்டானது நிச்சயம் ஏனெனில் உடுத்தமரவுரி இன்

னமூலராமையினுலும் பலாசிலையும் சிறுசெடியிலுள்ள குசைப்புல்லும் மிகுந்தசமித்தும் திருபபூக்கூடையும் இவற்றின்மேல் பசுமைவாடாமையினுலும் நீண்ட சடைவிரித்திருக்கையாலும்—எ-று. (௩௬)

என்செய்வோமிருவினைகளினிவிடுமோதவமெவையு
முன்செய்புமுனிவர்களுமுனிவர்களோமுனிவாகிற்
பின்செய்வதிவனருளாற்பெறுதுமெனக்குமரனவன்
றன்செய்யகழலிறைஞ்சிக்கைதொழுதுதனிநின்முன்.

இ-ள். இனியென்செய்வோம் நாம் ஆர்ச்சித்தகன்மங்கள் நம்மைவிட்டுப் போகாது நெடுங்காலமாகத் தபசு பண்ணும்முனிவர்களுங்கோபிப்பாாகளோ கோபமுண்டாகில் அதுநீங்க அநுக்கிரகம்பண்ணுவது இவரருளாற்பெறுது மென்று அஞ்சாமல் கௌடதேசகுமாரன் வியாக்கிரபாதர் சீபாதத்தைநமஸ்கரித்து அஞ்சலியத்தனுய் (வேடனையனுப்பிவிட்டு) தனியேநின்முன்—எ-று

புந்தியினிற்பரபோகம்புணர்ந்தகன்றுபொதுஞானம்
வந்தணுகியதுகண்ணுமருவுமவன்றனைநோக்கிச
சிந்தையினுலருமுனிவன்செல்காலமூன்றினையு
மந்தமிலாவுணர்வைவிரித்தாராய்வானுயினுன்.

இ-ள். தனக்குப்பிராணனுன மேலானசிவஞானத்தை நித்தியசமாதியிலே பொருந்தி நீங்கிப் பாசஞானததைவநதுகிட்டி அதுவிடையமாக யோகப்பிரத்தியக்ஷத்தினுலே-வந்துநமஸ்கரித்த கௌடதேச குமாரனைப்பாாத்துப பெரிய வியாக்கிரபாதமுனிவரானவர் தன்னுடைய சித்தத்திலேநடக்கிற பூதாதிமூன்றுகாலததினையு முடிவில்லாத தனனுடையஞானத்தைவிரித்து விசாரிப்பாராயினுர்—எ-று. (௩௮)

பூதாதி மூன்றுகாலமாவன பூத பவுஷிய வர்த்தமானமாம.

போனபலகாலத்தின்பொலிவுகளுமினிப்புணர
மேனிகழுங்காலத்தின்விரிவுகளுஞசெல்கின்ற
தானமலிகாலத்தினளவுகளுமாராய்ந்து
பான்மைதருநகற்பமிதுபாதமமெனும்பரிசுணாந்து.

இ-ள். முன்னிருநதமனுக்கள் செங்கோல்நடததின மகிமைகளும் பவுஷியகாலததில் சுவேதவராகறபததிலுணடானராசாக்கள தெயவபபிராமண பரிகிபத்தியும் செங்கோனமைத் தழைபபுகளும் வாததமானமாகிற மிகுநத காலததினளவையும் விசாரித்துக் கௌடதேசமனுவின முநதினகுமாரன வநதமையும விசாரித்து இநதககறபம் பரமாணுகறப மெனறும்படியு மறிநது விசாரிதது இநதபபிரகாரததிலே ஆடைவேவருகிற இநதககறபம பாதமகறப (௩௯)
மெனனுமபடியுமறிநது—எ-று.

அக்காலமணிகண்டனுடலருளியகால
மெக்காலமெனக்காலமெய்தியவிக்காலத்து
மிக்காலுந்திரைத்தரைக்குவேந்தாவான்வியன்கவுட
திக்கான்வெய்யவன்மரபிற்றிகழ்மனுவாமெனத்தெளிந்து.

இ-ள். அந்தஇறந்தகாலத்திலே தமக்கும் பதஞ்சலிக்கும் தம்பிரானுர் தமது ஆநந்தநிருத்தந் தரிசிப்பித்த கற்பமெந்தக் கற்பம்என்று தலைதெரியாமல் போம்படிக்குவந்து தோன்றின இந்தப்பரமகற்பத்தில் மிகுத்து முழங்குந்திரைக்கடல்சூழும் உலகுக்கு இராசாவாவான் வியப்பத்தையுடைய கௌடதேசத்திலுள்ளவன் சூரியவங்கிசத்தில் ஐந்தா மனுவென்ன விளங்கவறிந்து.

மற்றவன்முப்புதல்வருளரன்னவரின்முன்வந்த
வெற்றிமிகுங்குமரனிவனெனவிளங்கிவிழிகுளிரக்
கொற்றவன்சேயெதிர்நின்றுகுவித்தகரத்துடனடுங்கச்
செற்றமின்மாமுனிமகிழ்ந்துசிங்கவன்மனேயென்றான்.

இ-ள். அந்தமனுவுக்கு மூன்றுகுமரர்களுண்டு அவர்களில் முந்தினகுமாரனுனஅதிவீரனுனவன் இவனென்று அறிந்து கண்குளிரப்பார்த்துக்கௌடதேசகுமாரன் சந்நிதியிலே கம்பிதனுய் அஞ்சலியுடன் நிற்கக் குரோதம்நீங்கிய மகாரிஷி அதிகபிரியத்துடனே ஏன்சிங்கவன்மனேயென்றார்—எ-று.

அடியனேனென்றஞ்சியாராதகாதலுட
னெடிதுவிழுந்திறைஞ்சிவிழிநீர்ததும்பநின்றவனைச
சடிலமுடித்திருமுனிவனமைத்திருத்தித்தனிவந்த
படிதெளியும்படியெமக்குப்பகர்வாயென்றருளசெய்தான்.

இ-ள். பயப்பட்டு அடியேனடியேன் என்று ஒழியாத ஆதரத்துடனே யேகாங்கமாக நமஸ்கரித்துக் கண்ணீர ததும்பநின்றவனைச் சடாமகுடமுள்ள வியாக்கிரபாத மகாவிருஷி முன்னேவநதிருக்கக் கர்பித்து நீ தனியே வந்த பிரகாரத்தை நமக்கறியும்படி பகாவாயென்றருளிச்செய்தார்—எ-று.()

அன்னவனுந்தொழுதடியேனுசில்கவுடேசமனு
வென்னுமவன்மைந்தனெனக்கெம்பியருமிருவருளர்
நின்னுடையதிருவருளானீள்பிறவிசசிறைநீங்கப், பொன்னடி
சேர்தவமியற்றபபோந்தனன்யானெனப்புகன்றான்.

இ-ள். அப்படிசொல்லக் கேட்கப்பட்டவனும் அஞ்சலிபண்ணி அடியேன்குற்றமில்லாத கௌடதேச மனுவினுடைய பிள்ளை யெனக்குத் தம்பிமார்இருவருளா உம்முடைய கடாக்ஷத்தினுலே அநாதியேதொடங்கி நீட்டித்துவருகிற பிறவிச்சிறைநீங்க திருவடியைச்சேரத்தக்கத தவஞ்செய்தற்குவநதேனென்றான்—எ-று.

(௬௩

மறைமுனிவனதுகேடடுமென்னுமனுவழிசெலுத்து
முறையுனதாயவனுடலுமுதிர்ந்ததுமாயிருந்தமையாற்
பெறலரியவரசாளும்பேறுபெறலாயிருக்க
நிறைதவநீபுரிவனெனுநினைவுதகாதெனவுரைத்தான்.

இ-ள். பிரமரிஷியான வியாக்கிரபாதர் அதனைக்கேட்டு நிலைபெற்ற மனு வழியிற்செங்கோல் செலுத்து முறைமை உன்னுடையதாகி அவனுக்கு விருத்தவயதுமா யிருநதபடியினாலே யாவருக்கும் பெறுதற்கரிதான அரசாளும் பேற்றைப்பெறலாயிருக்க மிகுந்ததபசு நீபண்ணுவேனென்கிற நினைவு உனக்குத்தகாதென உரைத்தார்—எ-று. (சச)

அரசாளுமுருவல்லவதிலாசையினியில்லை
விரைசாருந்தொடைமனுமேன்மேவினனேலெம்பியர்க
டரைசாலநடத்திடத்தகுவரடியேனுமொரு
கரைசாரும்படியருகார்கடைக்கணளித்தருளென்றான்.

இ-ள். என்வடிவு குறறவடிவாதலால் அரசாளும்வடிவலல, ஆகையினாலே அதிலாசை யினியில்லை மணம்பொருந்தின ஆத்திமாலையையுடைய மனு சுவர்க்கத்தனானால் என் தம்பிமார்கள் பூச்சக்கரமனுவிலும் செங்கோல்நடத்தத் தக்கவர்களே அடியேனும் சமுசாரசாகரத்தில் ஆழாமல் அருட்கரைசாரும்படி கடாக்ஷதிருட்டியான தெபபமளித் தருளும்'என்றான்—எ-று.

மனுவிலுந் தரைசாலநடத்தி யிடத்தகுவரென்பது-தர்மவிடவனும்பிரியவதனுமாகியமனுக்களின்பின் அக்கினித்திக்குமுதலான சத்ததீவி லேழுமனுக்களுஞ்சம்புத்தீவில் மனுவின்குமாரர்களான ஒன்பதுமனுக்களும்நவகண்டமும் ஆண்டதிலும் பரதன் பாரதவருஷமான ஒன்பதாங்கண்டத்தை தானாண்டதினும் பரதன்குமாரர்கள் ஏழுபேரும் சமுத்திராதோதமான ஏழுதீவு மாண்டதினும்மாகத் தீபமுதலாக எவ்வேழுமனுக்கள் ஆண்டதிலும் நன்றாக மகாமேருவிட்டு மகாகிரி நாலுகுலபருவதங்களெட்டும் குருவருஷமுதல் பாரதவருஷாந்தமான ஒன்பதுவருஷ கண்டங்களிலுண்டான ஆன்மாக்களுக்கு ஒன்றிலொன்று குறைவறநடத்திப் பரதகண்டத்திற்கயிலாயமுதலானஎண்ணிறந்த திருப்பதிகளும் கோடிதீர்த்தங்களும் மிகவும்விளங்கபபணணிபபத்துத்திக்கிலுண்டான புவனே சுராகளையுங் காலாக்கினியுருத்திரர்கூர மாண்டர்மாஹபலர்-பிரமா-விஷ்ணு-உருத்திரர்-வீரபத்திரர்-பத்திரகாளி - இவர்களையும் செபம்-ஓம பூசாதியானங்களினாலே பிரியபபடுத்தி நடத்தத்தக்கவர் என்றமை கண்டுகொள்க. (சரு)

இன்பாரக்கேட்டிவன்றனெழிற்குறைநீர்வுறிலரசாம்
வன்பாரம்பொறுத்தற்குமனமுடையானல்போன்றிருந்தான்
பொன்பாவும்பொதுமேவும்புனிதனருளபுரிந்தனனே
லன்பாருமபணிகருநமககாளாவானெனவுணர்ந்து.

இ-ள். சுகமாகக்கேட்டு இவனுடைய சரீரக்குற்றந்தீர்ந்தால் அரசுநிலை யாம்வலியபூபாரம்பொறுதற்கு மனமுடையவன்போலே இராநின்றான், ஆத லால் பொன்னம்பலத்திலெழுந்தருளிய ஆநாதிசுத்தன்றிருவுளம்வாழ்ந்தாறு இல் அன்புநிறைந்த திருப்பணி மகாபூசை நித்திய நைமித்தியங்கள்முதலா னவை திரவியலோபமற நடத்துதற்கு இவனே நமக்காளாவானென்று தீர அறிந்து—எ-று. (௬௬)

வருமளவுநில்லென்றுமற்றவனைக்கரைநிறுத்தித்
திருமலியும்பதஞ்சலிபாற்சென்றவனுக்கிவன்வரவு
பரிவினுடனுரைசெய்துபைம்பொனணிமணிமன்றிற்
கருணைநடந்தொழுதற்குக்காலமுமாயுள்புக்கார்.

இ-ள். யாம்வருமளவும் இந்தவாவிக்கரையிலே நில்லென்று சிங்கவன் மாவுக்குக்கற்பித்து வைபவமிகுந்த பதஞ்சலிமகா இருஷியிடத்திற்சென்று அவருக்குச் சிங்கவன்மா வந்தபடியைக் கிருபையுடனேசொல்லி இருவரு ம்கூடிவந்து பொன்விளக்கு மணிமன்றத்து வாசலினின்று காருண்ணியநிரு த்தம் நமஸ்கரிக்கக் காலமானதறிந்து வாயி லுள்புக்கார்—எ-று. (௬எ)

பெருக்குவினைவலியார்கொலபிழைப்பார்முன்பிழைப்பான
கருக்குழிவெஞ்சிறைநீங்கக்கடைக்கணளித்தருளாதே
யிருக்குமொழிமுனியகன்றுனினியெங்கேயெனநொந்து
திருக்குளத்தின்கரைநின்றான்சிங்கவருமன்றிகைத்து.

இ-ள். ஒரு கன்மம்புசிக்கையில் அனேககன்மமார்ச்சிக்கும் வினைவ ழியைத்தப்பிப் பிழைப்பாரார்-முன்னேயார்ச்சித்த பிராரத்தசரீரமான கருக் குழியாகியகொடுஞ் சிறைநீங்கக்கடைக்கண் பார்த்தருளாமல் பதவாக்கியப்பி ரமாண ஞானவிருஷி யெழுந்தருளினார். இனிப் பிழைப்பெங்கேயென்று மிக விதனப்பட்டுத் திருக்குளத்தின்கரையிலே சிங்கவன்மன் திகைத்துநின்றான்.

நடந்தொழவந்துள்புகுந்தநன்முனிவரிறைவனுக்கு
மடங்கலெனநிகழ்மன்னன்மைந்தன்வரவுரைசெய்தா
லடங்கலருமருடருமோமுனிந்திடுமோவென்றஞ்சி
முடிந்தபடிமுடிகவெனத்துணிந்தனராய்முன்றொழுது.

இ-ள். ஆநந்தநிருத்தஞ்சேவிக்கக் காலம்பெற்று உள்புகுந்த சுத்தமுனி வர் தம்பிரானுற்குச் சிங்கம்போல விளங்கும் இராசகுமாரன் வந்தமையை விண்ணபபஞ்செய்தால் அடங்காத பரிபூரணமான கடாக்ஷந்தருமோ கோபி த்தருளுமோ என்று பயப்பட்டு முடிந்தவாறு முடிகவென்று துணிந்தவர்க ளாய்ச் சந்நிதியிலே நமஸ்க்கரித்து—எ-று. (௬௯)

காலமறிந்தருமுனிவர்கருணையனேகவுடேசன்
பாலனிணைநதனனுடலிற்பாழுதகற்றிப்பரதஞ்செய

கோலமவன்றனக்கருளியடிமைகொளவேண்டுமென
மேலவனையிடம்பார்த்துவிண்ணப்பஞ்செய்தார்கள்.

இ-ள். சமயமறிந்து பெரியமுனிவர் இருவருங் கருணைகரனே கவுடதேசஇராஜகுமாரன் இங்கேவந்தானவன்சரீரத்தில் பழுதுநீக்கி ஆநந்தநிருத்தம் அவனுக்கும்புலப்படுத்தி அடிமைகொண்டருள வேண்டுமென்று எப்பொருட்குமேலானவர்க்குக் காலமறிந்து விண்ணப்பஞ்செய்தார்கள்—எ-று. ()

தெண்டிரைசேர்சடையாருந்திருவுள்ளமகிழ்ந்தருளி
முண்டகவாவியிற்புக்குமூழ்கமொழிந்தவனைமுனீர்
கொண்டுவருகெனவருளுங்குலவுதிருவருள்கேளா
வண்டர்தொழுங்கணநாதரருளிப்பாடென்றார்கள்.

இ-ள். தெள்ளியகங்கை யலைசேர்ந்த சடாமௌலியாருந் திருவுள்ளமகிழ்ந்தருளிப் புண்டரீகப்பொய்கையிலே ஸ்நாநம்பண்ணச்சொல்லிக் கற்பித்து அவனை நம்மெதிரில்கொண்டுவாருங்களென்றுஅருளிச்செய்த திருவருள் கேட்டுத் தேவர்கள்தொழுங் கணநாதர் அருளிப்பாடென்றார்கள்—எ-று.

அங்கருளிப்பாடியரோடருமுனிவர்கடிதணைந்து
சிங்கவன்மாவுனக்கின்பத்திருந்துநடம்புரிந்தருள
வெங்கள்பிரானருள்செய்தானெய்துகவென்றவனையெழிற்
பங்கயப்பூந்தடமதனிற்படிகவெனவுரைசெய்தார்.

இ-ள். அவ்விடத்துப்பொருந்திய கணநாதர்களுடனே பெரியமுனிவர்களும் சடுதியிலேபொருந்தி சிங்கவன்மனே உனக்குஆநந்தநிருத்தந் திருவுளம்பற்ற எங்கள் தம்பிரானார் அருளிச்செய்தாரவாவென்று அவனைப் பொற்றாமரைப் பொய்கையிலே ஸ்நானம்பண்ணச்சொல்லிக கறபித்தார்கள்-எ-று.

அருளதனாற்றடம்படியுமவன்கடன்மேலருக்கனென
விரவுபசுங்கானடைந்தமேருகிரியெனவிளங்கி
யிரணியமாமுருவாகியெழுந்ததுகண்டதிசயித்துப்
பரவியதுபெயராகயாவர்களும்பயில்வித்தார்.

இ-ள். அருளாலே ஸ்நானம்பண்ணி எழுந்திருக்கும வன்கடல்மேலுதிக்கும் ஆதித்தனைபோலவும் பசுமைபொருந்தின காடுசூழ்ந்த மகாமேருவைப் போலவும் பிரகாசித்துப் பொற்சொரூபமா யெழுந்திருந்தமைகண்டுஆச்சரியப்பட்டு எல்லாரும்புகழ்ந்து அந்த விரணியவன்னமேபேராக இரணியவன்மனென்று பொருந்தப் பேர்கற்பித்தார்கள்—எ-று. (ருக)

மல்குபுலிக்கான்முனிவன்மற்றவன்றன்வலச்செவியி
னலகுதிருவெழுத்தஞ்சுநவின்றவனைக்கொடுபோந்து

பல்குபுகழ்த்திருச்சிற்றம்பலமுன்புபணிவித்தான்
செல்வனுமங்கவன்காணத்திருந்துநடந்தெரிவித்தான்.

இ-ள். நெருங்கிய புலிக்கால்முனிவன் அந்த இரணியவன்மன் வலச்செவியிலே முத்தியளிக்கும் ஸ்ரீபஞ்சாக்கர வுபதேசம்பண்ணி அவனை அழைத்துக்கொண்டு போந்து அநந்தமுகமாக வேதம்புகழும் சிதம்பரநாதர் சந்நிதியிலே நமஸ்கரிப்பித்தார் சிதம்பரநாதராகிய ஆநந்தச்செல்வரும் அவ்விடத்திலே அந்த இரணியவன்மன்காண ஆநந்தநிருத்தம் புலப்படுத்தினார்—எ-று.

திருநடமுன்றெரிபொழுதிற்றிறலரசன்புளகமுடை
னருவியிருவிழிபொழியவாநந்தபரவசனா
யுருகியுளமிகத்துளங்கியுரைகுழறிவிதிர்விதிர்த்துக்
கரகமலஞ்சிரமுகிழ்ப்பக்காசினியின்மிசைவீழ்ந்தான்.

இ-ள். ஆநந்தநிருத்தமுன்னே கண்ணுக்குப் புலப்படத் தெரிந்தபொழுது அருள்விரகனாகிய வீரராசா புளகிதத்துடனே இரண்டுகண்ணும் நீர்த்தாரை கொள்ள ஒழியாத சுகமேலிட்டு இருதயம் உருகிநடுங்கி வாக்குத்தழுதழுத்து மயிர்சிலித்துக் கைத்தாமரை சென்னியிற்குவித்துப் பூதலத்தில்வீழ்ந்தான்

வேறு.

மாண்டகுமனங்கரைந்துமண்மிசைவீழ்ந்திறைஞ்சி
நீண்டசெஞ்சடையாய்போற்றிநின்மலாபோற்றிதுன்ப
மீண்டுகொண்டியிருமாயாவுடலையும்வேதகஞ்செய்
தாண்டவங்கணனே போற்றியண்ணலேபோற்றிபோற்றி.

இ-ள். இரும்பிலு வலியதாகஎண்ணத்தக்க மனது நீராளமாயுருக பூதலத்திலேதாழ்ந்து பணிந்துநின்று செக்கர்வானம்போன்ற நீண்ட சடையாய் போற்றி மலரகிதனேபோற்றி துன்பச்சிறையிலு மீட்டுக்கொண்டு வுயிரையு மாயாசரீரத்தையுந் தரிசனத்தால் வேகம்பண்ணியருளாக்கி யாட்படுத்திக் கொண்ட அருட்கண்ணனேபோற்றி சர்வகர்த்தாவேபோற்றி போற்றி-எ-று.

அடவியிற்பிறந்துதுன்பாராக்கைகொண்டுழன்றுவீழக்
கடவியவென்னைமீட்டுன்கருணைவெள்ளத்தழுத்தித்
திடமிருமறைகள்காணுத்திகழ்திருமன்றிலாடு
நடநிலைகாட்டியாண்டநாதனேபோற்றிபோற்றி.

இ-ள். வனத்திலேபிறந்து துக்கமிகுத்த சரீரத்தைக்கொண்டு பாவத்தைப்பண்ணி யுழன்று திரிந்து அதோ கதியிலேவீழக் கடவதானவென்னை அதில்போகாமல் மீளவிட்டு உன் காருண்ணியசமுத்திரத்திலே யழுத்தி அகம்பிரமமென்கிற திடமிருந்த வேதங்கள்காணுமலெப்பொழுதும்எல்லாப்பதா

ர்த்தங்களிலும் விளங்காநிற்கிற ஞானமயமான மன்றின் முயலுமானந்த நிருத்தத்தி னுண்மையைக்காட்டி ஆட்கொண்ட வாத்மநாயகனே போற்றி போற்றி—எ-று. (ருஎ)

முன்பருந்தவங்கள்செய்தேன்முயங்கியபுயங்கங்காணப்
பின்பருந்தவத்தோரொத்தேன்பிறங்கிடைக்கிடந்தகால
மென்பணிகொள்வாயென்னையினிப்பணிகொள்வாயீறி
லன்பருள்செய்வாயென்றென்றடியிணைதொழுதுவீழ்ந்தான்.

இ-ள். நீபொருந்தின நிருத்தங்காண்பதற்குப் பூதகாலத்து அரியதவங்களைச் செய்தேன் பின்னாகிய பவிஷ்யகாலத்திற் பெரிய ரிஷிகளுக்கு ஒப்பானேன், விளங்கப்பட்ட நடுநின்ற வர்த்தமானகாலத்தில் எலும்பாபரணமணிந்தவரே என்னை ஊழியங்கொண் டருள்வீராக, முடிவிலாத அன்பு அளித்தருளுவீராகவென்று விண்ணப்பஞ்செய்து ஸ்ரீபாதங்களிலே நமஸ்கரித்துவீழ்ந்தான்—எ-று. (ருஅ)

இவ்வகைபுகழவெந்தையிரணியவன்மவன்பின்
மெய்வகையுவந்தோமிந்தவியாக்கிரபாதனுக்கும
பைவளர்பதஞ்சலிக்குமெமக்கும்வான்பணியவர்க்குஞ்
செய்கவென்றருளிசசெய்தான்றேவாகடேவதேவன்.

இ-ள். இந்தவடைவிலே தோத்திரஞ்செய்ய என்னுடைய தம்பிரானாரும் இரணியவன்மனே உன் அன்பின்வாய்மையையுவந்தோம் இந்தவியாக்கிரபாதனுக்கும் விரிந்தபடத்தையுடைய பதஞ்சலிக்கும் எமக்கும் தேவர்கள்பணியுந் தில்லைவாழ்அந்தணர்க்கும் ஊழியஞ்செய்யென்று அருளிச்செய்தார தேவர்களதேவன்—எ-று. (ருக)

ஆதிநாயகனளித்தவருடலைமேற்கொண்டாடித்
தீதிலாக்கோயில்காலஞ்சேவித்துத்திருமுன்போற்றிக்
காதலால்வணங்கியேத்திக்கருமூலகாரணன்பாற்
கோதிலாமுனிமகிழ்ந்துகுறுகினான்குமரனோடும்.

இ-ள். சர்வாதிபதியானவர் திருவுளமபற்றின அருளைத்தலைமேற்கொண்டு கூத்தாடிக் குற்றமில்லாத கோயிலின்காலமறிந்து சேவித்துச் சந்நிதியிலே தோத்திரஞ்செய்து பத்தியினாலே வணங்கியேத்தி ஸ்ரீமூலத்தானமுடைய தம்பிரானாருகே குற்றமில்லாத வியாக்கிரபாத மகாருஷியதிபிரியத்துடனே இரணிய வன்மனுடனேவந்து குறுகினார்—எ-று. (சுo)

இரணியவன்மனாமுன்னிறைஞ்சியதிங்கையீங்காற்
றிருநடங்காணப்பெற்றேமென்றவன்றனக்குசசெப்பி
மருமலர்தூவுவித்துவளர்புலீச்சுரத்துமன்னு
மொருவனதிருதாள்போற்றிப்புகழ்றவிறைஞ்சுவித்தான்.

இ-ள். இரணியவன்மனே நாம்முன்னம்நமஸ்கரித்து வழிபட்டது இந்த வஸ்துவை யாக்கும் இந்தமுதலை வழிபட்டதினாலே திருநடங்காணப்பெற்றேம் என்று அவன் தனக்கு அநுக்கிரகித்து மணம் இனிய புட்பாஞ்சலிசெய்வித்துப் பெரிய வியாக்கிரேச்சுரத்திற்பொருந்தின ஒப்பில்லாதவனுடைய ஸ்ரீ பாதபங்கயத்தைத் தோத்திரஞ்செய்து உறவுபொருந்த நமஸ்கரிப்பித்தான்—

ஆதியைப்பதஞ்சலிக்காமண்ணலையர்ச்சித்தற்குப்
போதுகவென்றுகொண்டுபோய்ப்பணிவித்துப்போந்து
காதலினிற்புகுந்துகருதுபமன்னியன்பின்
பேதைநீபெறுதுபெற்றபிள்ளைக்கொள்கவென்றான்.

இ-ள். ஆதிவஸ்துவானவரைப் பதஞ்சலிக்குத்தேவனான சுவாமியை அர்ச்சனைசெய்தற்கு வருகவென்று அழைத்துக்கொண்டு போய்ப்பணிவித்து மீண்டு காதலுடனே பன்னசாலைபுகுந்து திரிகாலமும் கருதப்படும் உபமன்னியனுக்குப்பின்பு நீபெறுமற்பெற்ற பிள்ளையை யிரட்சித்துக்கொள்பெண்ணே என்று தம்பத்தினியைநோக்கிச்சொன்னார்—எ-று. (கூஉ)

என்றவனருளக்கேட்டவிரணியவன்மனென்னும்
வென்றிகொள்குமரனன்னைவியன்மலர்ப்பாதமேத்தப்
பின்றிகழ்சடையானும்பேசுநாட்பிறந்தநாளா
மன்றுளாரெமக்களித்தமணியெனமகவைக்கொண்டாள்.

இ-ள். என்று அந்தவியாக்கிரபாதர் அருளிச்செய்யக்கேட்ட இரணியவன்மனென்னும் வெற்றிப்பாடுடைய குமாரன் மாதாவினுடைய மணம்பொருந்தின செங்கமலம்போலும் பாதங்களைவணங்கிப் போற்றப் பின்தாழ்ந்துவிளங்கின சடையானுடைய ஸ்ரீபஞ்சாக்கர முபதேசம்பண்ணின நாளேபிறந்தநாளாகக்கொண்டு மன்றுணீங்காதார் நமக்களித்தபிள்ளையென்று வளர்த்துக்கொண்டாள்—எ-று. (கூா)

அந்தமிலின்பமெய்தியரசிளங்குமரனன்பான்
மைந்தனாய்வாழுநாளின்மறைமுனிகருணையாலே
புந்தியாலுவந்திருந்துபுதல்வனையழைத்திருத்திச்
சிந்தையாருபதேசங்களருளினாற்செப்பலுற்றான்.

இ-ள். முடிவில்லாத இன்பம்பொருந்தி இராசகுமாரன் மாதாவும் பிதாவுந் தன்பேரிலேவைத்த அன்பினாலே தானேபிள்ளையாகி வாழுநாளில் வேதமுனிகிருபையினாலே மனங் களிகூர்ந்திருந்து பிள்ளையை அழைத்து முன்னேவைத்துக்கொண்டு சித்தபாக மிகவுண்டாக்கும் அருளுபதேசம்பண்ணத்தொடங்கினார்—எ-று. (கூச)

வாக்கொடுமனமிறந்தமன்னவனெங்குமாகி
நீக்கறநிறைந்தானேனுநிகழ்தராதநதனன்முத்தி

போக்கெளிதல்லவென்றப்புனிதனேபுந்திசெய்தெம்
பாக்கியவகையாலெண்ணில்பதிமிகும்பாரில்வைத்தான்.

இ-ள். வாக்குமனாதீதராகிய இறைவர் பரிபூரணமாய்ச் சடசித்துக்களில் நீங்காம னிறைந்தாரேயாகிலும் ஒருவர்க்கும் விளங்கத்தோன்றுது, ஆகையால் முத்தியிலேபோக்குவது எளிதல்லவென்று ஆநாதிசுத்தராகிய அவரே திருவுள்ளத்தடைத்து நாம் முன்செய்த புண்ணியமிகுதியினாலே எண்ணிறந்த திருப்படைவீடு-நீண்ட பூமியிலே கற்பித்தார்—எ-று. (௬௫)

திருப்படைவீடு என்பது-கோயில்.

பதிகளெண்ணிலவுண்டென்றுபகர்தருமவற்றுளண்ணல்
கதிதரவறுபத்தெட்டாங்கற்பிதமானதானத்
திதமலிதொகையிலோராறேற்றமாமற்றவற்று
ளதிகமாமாரூர்காசியம்பலமென்றுரன்றே.

இ-ள். எண்ணிறந்த திருப்படைவீடு உண்டென்று வேதாகமஞ்சொல்லும் அவற்றுள் முத்திக்ஷேத்திரமாகத் தம்பிரானார்கற்பிக்கப்பட்ட அறுபத்தெட்டுத்தானங்களில் திருவுள்ளத்து மிகவும பொருந்தினது இந்தத்தொகையில் ஆறு திருப்படைவீடு மேன்மையுள்ளதாக இருக்கும் ஆறுகிய அவற்றிற்குள்ளே மேலானதிருவாரூர் திருக்காசி திருஅம்பலமென்று வேதாகமங்களின் வழிபோனவர்கள் அநாதியேசொன்னார்கள்—எ-று. (௬௬)

மெய்ம்மைநற்சரியைபத்திவிளங்கியஞானமேவா
வெம்மையொப்பவர்க்குமுத்தியிறையிலியாகவிட்ட
மும்மைநற்பதிகட்டம்மின்முளைத்தவர்முடிந்தோர்மூவாச்
செம்மலர்க்கழல்கண்டோர்கள்சிவத்தினைசசேர்வரன்றே.

இ-ள். சத்தியமானசரியாபதம் கிரியாபதம்யோகபாதம் பத்திஞானவயிராக்கியம்பொருந்தாத எம்மை ஒப்பவாக்கு அத்துவிதமுத்தியை ⁰ யிறையிலியாகக்கொடுத்த நல்ல மூனறு திருப்படைவீடுதன்னில் திருவாரூரிற்பிறநதவர்கள்காசியிலிறந்தவாகள்சிதம்பரத்தில் மூப்பு இளமையில்லாத செநதாமரைமலர்போன்ற ஸ்ரீபாதம் சேவித்தோர்கள் அப்பொழுதே சிவசாயுச்சியம் பெறுவார்கள்—எ-று. (௬௭)

பிறந்திலமாரூர்தன்னிற்பேசியகாசிமேவி
யிறந்திலமிரண்டுமுத்தியின்பமும்பின்பதாநா
முறைந்திடுந்தில்லைஞானயோகமார்தானமாமாற்
செறிந்தடிகாணசிவன்முத்தராய்த்திரியலாமே.

இ-ள. திருவாரூரிற் பிறக்கபபெற்றேமில்லை மரணமுத்தியென்று சொலலிய காசியிலே போய்மரிக்கப்பெறறேமிலலை இரண்டு திருபபடைவீட்டி

⁰ இறையிலி என்பது - சாவமானியம்.

ற் சனனமரண முத்திகளும் இப்போதுசாதிக்கவென்னில் நெடுங்காலத்துக்கு ப்பின் கைகூடுமோதலால் முதற்றரமாகாது நாம்வந்து பொருந்துந்தில்லைவ னம் ஞானங்கூடிநிறைந்த தலமாதலால் அதிற்பொருந்தின ஸ்ரீபாதந் தரிசன ம்பண்ணில் அப்பொழுதே சீவன் முத்தராய் எங்கும் சீராட்டித்திரியலாம்.—

அரிவையூரழிவிலூரொன்றலகிலூல்பரவமேருத்
திருவிலூரிரதத்தேந்துஞ்செம்மையானம்மையாளும்
பரிவிலூர்புலிபோனல்கிபபருமைசெய்பெருமையாலே
பிரிவிலூர்தனியூரெம்மூர்பெரும்பற்றப்புலியூராகும்.

இ-ள். சிவகத்திலூரொன்றும் அழிவிலாதவூரென்றும் எண்ணிறந்தவேதாக மங்களால்புகழப்பட்ட மகாமேருவென்னுந் திருக்கைவில்லைத் தாழுருந்தேரி லே நின்றுதாங்கும் செம்பவளக்குன்றொப்பானவா எம்மையாண்டுகொண் டருளும்பரிவினாலே பெரியபுலிபோலத்திருவுளம்பற்றி வியாக்கிரபாதனென் று ஒருபெயராக்கின திருவருளின்பெருமையாலே அக்கினியும் உட்டணமும் போலத் தமக்குநீங்காத ஞானசொரூபமாகிய ஒப்பில்லாதவூர் எம்மூருமாகி யெம்முடையபேராலே பெரும்பற்றப்புலியூரொன்றும் பேரானது—எ-று.

பெரும்பற்றப் புலியூரென்பதற்கு முன்னுரைத்தபொருளை யுரைத்துக் கொள்க. (சூகூ)

தன்றனிமன்றமென்றுஞ்சச்சிதாநந்தமாகு
மென்றருமறைகணான்குமீரிருதிசையும்பற்றி
நின்றருள்பரவநாதனேரிழைகாணவேணி
பின்றிகழ்தரநின்றாடும்பெற்றிநீபெற்றியன்றே.

இ-ள். தனது ஒப்பில்லாதசபை சத்திய ஞாநாநந்தமாகுமென்று எப் போதும் அருமறைகள்நான்கும் நாலுதிக்கும் பொருந்திவிடாமனின்று திரு வருளைத் தோத்திரம்பண்ணச் சிதம்பரநாதரானவர் கிரியாசத்திகாண விரி ந்தசடைபின்விளங்க அசையாமல்நின்றாடும் ஆநந்தத்தைநீபெற்றாயன்றோ—

பாவகமிறந்தநாதன்பரதமுன்பணிக்கவந்தான்
றேவர்கடேவனென்னுந்திகழ்திருச்சின்னவோசை
மேவியபோதிலன்புமென்புமையுணர்வுமெய்யு
மாவியுமுருகநம்மையாண்டவாகாண்டியன்றே.

இ-ள். மனோபாவங்கடந்த பரமசிவம் முன் ஆநந்தநிருத்தத்தைக்கட் புலனாக அளிக்கவந்தார் தேவர்கள்தேவனென்று விளங்கின திருச்சின்ன வோசைகேட்ட மாத்திரத்திலே தன்னளவிற்சினேகமும் எம்முடையசரீர த்திலே யென்பும் பஞ்சேந்திரியவிஷயங்களிற் சுட்டறிவுஞ் சரீரமும் இவ ற்றிற்குப்பிராணனாய்நின்ற நாமும்வகுப்பற்றுப் பொறியிற்கலந்து உருகியா நந்தவெள்ளமாக நம்மையாண்டுகொண்டவகை நீகாணப்பெற்றாய்—எ-று.

தேசமார்மன்றகன்றுசிவகதிதேடியுற்றாற்
காசியிலிலலைதில்லைசதிதருமென்றணைந்தாற்
பாசமதகலமுத்திபணித்திடுமென்றுரொன்று
மீசனதருளிரக்கத்தெல்லையாசொல்லுவாரே.

இ-ள். தக்ஷணதேசத்திலுள்ளார் நிறைந்த ஞானமாகியசபையை அணு காமல் நீங்கிக் காசிமான்மியங்கேட்டு முத்திபெறச்சென்றால் காசியென்கிற அவிமுத்தத்தில் அவர்களுக்குமுத்தியில்லை காசிக்ஷேத்திரத்திலுள்ளவர்கள் சிதம்பரமான்மியத்தைக்கேட்டுஅடைந்து சிர்பாததரிசனம்பண்ணின மாத்திரத்திலே பஞ்சபாசமகலச் சிவசாயுச்சியத்தைக் கற்பித்திடுமென்று வேதாகம வழிச்சென்றோர்கள்சொன்னதொன்றால் சர்வேசுரனுடைய அருளின்கா ருண்ணியத்தை யாரளவு படுத்திச்சொல்லுவார்கள்—எ-று. (எஉ)

கன்றமரன்பாலான்பால்கவர்தருங்காலமேனும்
வென்றிகொளம்புவீழும்வேலையாயினுமிமைப்பிற்
சென்றுறுமமையமேனுந்திருவடிதெளியநோக்கி
நின்றவர்காணநின்றார்நீள்பவநீங்கினாரே.

இ-ள். கன்றுவாய்வைத்த மாத்திரத்திலே யிரங்கிச்சுரந்த பசுவின்பால் கறக்கிறகால மாத்திரமாகிலும் வெற்றிகொள்ளவெய்த அம்பு அறிவிழுங்கா லமாகிலும் ஒருநிமிஷஞ்சென்று பொருந்தினமாத்திரத்திலே யாகிலும் சீர்பா தம்விளங்கக்கண்டு பாதத்திலே ஒருகால் கூடிநின்றவர்கள் எதிர்ப்பட்டு நின்று ஆர்ததபிறவித்துயரால் நீட்டிபபுநீஙகினார்கள்—எ-று. (எ௩)

ஆரணவுருவார்தில்லையம்பலமெய்தப்பெற்றோ
ரோருணர்வாவவொன்றுமொன்றலரொன்றாரலலர்
காரணராகாரொத்தகருத்திலர்கிருத்தவின்பப்
பூரணரவர்களவாழும்புவனமும்பொதுவாமன்றே.

இ-ள். வேதசொருபமாயுள்ள தம்பிரானுருடையதில்லையம்பலத்தைத் த ரிசிக்கப்பெற்றவாகள் பூரணஞானமாவாாகள எக்காலும் வேதாநதஞ்சொல் லும் சாயுச்சியம்போல வொன்றுயிரார்கள். இரண்டறுத் திருக்கையாகிய சா யுச்சியம்பொருந்தியிருபபார்கள், பஞ்சகிருத்திய கர்ததாக்களாகார் அதேதெ ன்னில் கிருத்தியம்பண்ணுவதறகு இச்சை இல்லாதவராதலால் நிருத்தாநந த பூரணருபவர் எப்படிப்பட்ட அடியார் எந்தப்பூமியிலே திருவுளம்வாழ்ந் து எழுநதருளினு மவ்விடமெங்குஞ் சுத்தஞானமயமாம்—எ-று. (எ௪)

கண்ணுதலாடல்வெற்பிற்காரிகைகாணுமிந்தப்
புண்ணியமன்றெவர்க்குமபொதுவெனுமதனாற்கூதன்
றண்ணளியியாதன்மைந்தன்சவுனகன்றநயனென்றென்
றெண்ணருமுனிவர்தில்லையெல்லையினெய்தினார்கள.

இ-ள். பரமேசுரனுடைய நிருத்தத்தை மலையரையன் புத்திரியாகிய பரமேசுவரிகாணு மிகதஞானமயமாகியமன்று இயாவர்க்கும் பொதுவென்ப தனால் - சூதமகாரிஷி காருண்ணியவானாகிய வியாசர் அவர்புத்திரர் சுகர் அவர்புத்திரர சவுனகரென்று பின்னும் எண்ணிறநதமுனிவர் தில்லையெ ல்லைகமஸ்கரித்து முத்தரானார்—எ-று. (எரு)

மார்கழியாதிரைத்தாய்வருவிழாவெழுதல்போற்றிச்
சீர்மலிகமலவாசந்திகழ்சிவகங்கையாடிப்
பார்திகழ்பாதமேத்திப்பணிந்தருளணைந்துசிந்தை
யார்தருமன்புநீடியவருநற்றவர்களானார்.

இ-ள். மார்கழிமாதம் திருவாதிரைநாளையுடைத்தாய்வரும்திருவிழாவில் சிவபெருமான் எழுநதருளுதலைப்போற்றிச்சேவித்து இலக்குமிகரமான பொற்றாமரைமணங்கமழுஞ் சிவகங்கையில் ஸ்நாநம்பண்ணிச் சர்வலோகங்களுை ம் விளங்கின ஸ்ரீபாதத்தைப்பரவி நமஸ்கரித்து அருள்பொருந்திச் சித்த நி றைந்த அன்புபெருகி அந்த ஆத்மாக்களும் எண்ணிறநத முத்தரானார்கள்—

நற்றவமைந்தவெந்தைநயந்தபேரருளானமு
முற்றதிங்கலர்கள்கொய்வானோங்குகோநகாதியேற
வெற்றிகொளவரத்தாலிந்தவியாக்கிரபாதமேன்மை
பெற்றனமிதனலெல்லாப்பெருமையும்பெறறுமன்றே.

இ-ள. நல்லதவத்தையுடைய மைநதனே எனனுடைய தம்பிரானார்விரும்பிய திருவளினாலே நாமும்பொருநதின இவ்விடத்துத் திருபபள்ளிததாமம் எடுப்பதறகுவுயாநத கோங்குசண்பக முதலானவிருக்ஷங்களில ஏறமேலான வரத்தினாலே இநதவியாக்கிரீபாதனெனகிற மேன்மைபெறறனம் இதனாலே விதிபபடிமலர்எடுத்து அர்ச்சிதது எலலை இல்லாத எல்லாபபெருமையும்பெற்றேம்—எ-று. (எஎ)

உன்னருமுனக்குமுன்னுமோங்குபமனியனென்னு
மன்னுநம்புதல்வன்முந்தமாதுலன்மனைப்பாலுண்டு
பின்னையிங்கெய்திநம்பாற்பெறுதுபாலபெருமானோடு
பன்னருமன்புநீடிப்பாற்கடலருளாற்பெற்று.

இ-ள். மனோவாக்குக்கெட்டாத அருட்புதல்வனை உனக்கு முனபாகச் சனிதத விசிட்டமான உபமன்னியனெனகிற பேர்நிலைபெறற நம்முடையபிள்ளை - முனனர் மாமனாராகிய வசிட்டர் ஆச்சிரமத்திலே சுரபியின்பால்குடித்து வளாநது பின்னர் இங்கேவநது நம்முடையவிடத்திற பாலபெறுமற நம்பிரானிடத்து மிகுந்த அன்பினாலேயழுது அவாதிருவருளினாலே திருப்பாற்கடல்பெறறுண்டு தெவிட்டி—எ-று. (எஅ)

ஆண்டிடுசாபங்கொள்ளுமவனையுந்துவனையும்போயக்
காலடுமென்றுண்டணைந்தக்கரியவன்முடிமேற்பாத

நீண்டவன்புடனேவைத்துநீலகண்டனையுநல்கி
யீண்டுவந்தகன்றனின்னுமெய்துவனின்றுநாளே.

இ-ள். பிருகுமகாரிஷி யாச்சிரமமாகிய அவ்விடத்தே இட்டசாபத்தை க்கைக்கொண்ட மகாவிஷ்ணுவின் நவாவதாரமான கிருட்டினனையும் துவாரகாபுரியிலேசென்று சித்தபாகமறிவோமென்று அவ்விடத்திலேபொருந்தி அந்தக்கிருட்டினன் சிரசின்மேல் யிருந்த காருண்ணியத்தினலே திருவடிவைத்து விசேடதீக்ஷைபண்ணி நித்தியார்ச்சனைக்கு நீலகண்டனென்கிற சிவலிங்கப்பெருமானையும் எழுந்தருளப் பண்ணிக்கொடுத்து இவ்விடத்திலேவந்து பின்னையும் போனனின்னமும் இன்று நாளைக்குள்ளே வருவனென்றார்—எ-று,

பங்கமில்புகழநந்தன்பதஞ்சலியாகியன்பா
லிங்கணைந்தெம்மோடாகியிருந்தபின்னிறையெமக்கு
மங்கலநடமுந்தெய்வமன்றமும்வழங்கிவானோர்
தங்களையெங்களோடுந்தகும்பணிதந்துகொண்டான்.

இ-ள். குற்றமற்ற புகழையுடைய சேடன் பதஞ்சலிவேடமாய் அன்பாலிங்குவந்து எம்முடனேகூடியிருந்தபின் இறைவனே எங்களுக்குச் சிரேஷ்டமான ஆநந்தநிருத்தமுந் திவ்வியமான ஞானாம்பரமும் புலப்படுத்தித் தேவர்களையு மெங்களுடனேகூட ஊழியம்பண்ணத்தக்கதாக மேன்மைதந்து அடிமைகொண்டார்—எ-று. (அ0)

சயமலிசாமவேதத்தலைவரிலொருவனான
செயிமினிமுனிவனண்ணித்திருநடந்தொழுதுவாழ்ந்து
வியன்மலர்ப்பாதமன்பால்வேதபாதத்தவத்தா
னயமிகப்பரவியின்பநண்ணினனெண்ணமார.

(இ-ள். சிவப்பிரீதி மிகுந்த சாமவேதியர்களில் ஒப்பில்லாத சயமினி மகாரிஷியானவர்வந்து சிதம்பரநிருத்தந்தொழுது பெருவாழ்வுபெற்று மேன்மையாகிய செங்கமலப்பொற்பாதங்களை பத்தி சுரபுரமாக வேதபாதத்தவத்தினலே இனிமைமிகத்துதித்துப் பரமாநந்தத்தைப் பொருந்தினன் நினைவின்படியேமிக—எ-று. (அக)

துற்கடனென்றோர்பாவிதுணிதருவணிகனென்போன்
கற்கடமனையசிந்தைக்காதகன்மாகமாதத்
திற்கடனுகுநாளுற்றிறைதகு துறையிற்றில்லை
நற்கடற்படியமுத்திநண்ணினொண்ணிலார்கள்.

(இ-ள்) கொலைக்குத்துணிந்துள்ள மகாபாதகனன துர்க்கடவணிகனென்கிற பெயரையுடைய கள்ளச்சம்பாகாரன் மலைமருங்கிற் சுரவழியொத்த சித்தத்தையுடைய கொடுந்தொழிலாளன்மாசிமாதத்தில்நக்ஷத்திரமாகியமகத்திற்பொருந்தித் தம்பிரானர் தீர்த்தஞ்செய்தருளுகிற பாசமறுத்தான் துறையிலொருநாள் சிதம்பர க்ஷேத்திரசமீபமான நறகடலிலே ஸ்நாநஞ்செய்ய எண்ணிறந்த பேரவனுடனே முழுகி முத்திபெற்றார்கள்—எ-று. (அஉ)

மாசிலாவுலகிற்றீர்த்தம்வானவரனையதில்லை
யாசிலாவேதகஞ்செயகிலவாவிகளெவர்க்குந்
தேசமாரயன்மால்போல்வதிகழ்திருக்குளமெவர்க்கு
மீசனுமென்னமேலாயெளிதுமாயிருக்குமன்றே.

இ-ள். குற்றமற்ற உலகங்களில் கங்கைகாளிந்தி காவேரிமுதலான தீர்த்தங்கள் இந்திரன்முதலான தேவர்களுக்கொக்கும் சிதம்பர தீர்த்தத்திற் குற்றமற்ற பரிசவேதியை யெவர்க்கும்பண்ணுகிற நவதீர்த்த முதலான எல்லா வாவியும் பிரகாசமிகுந்த பிரமவிஷ்ணுக்கள் இருடிகளையொக்கும்அருள்விளங்கும் புண்டரீகப் பொய்கை தேவர்கள் விஷ்ணுக்கள் பிரம ரிஷியாவார்க்கும் சர்வேஸ்வரனைப்போலக் கங்கைமுதலான தீர்த்தங்களுக்கும் சிதம்பரதல நவதீர்த்தங்களுக்கும் தான்கர்த்தாவுமாயருட் டண்ணளியேவடிவாதலால் தன்னையடைந்தோர்யாவர்க்கும் எளிதாயிருக்கும்—எ-று. (அங)

கங்கைகாளிந்திபொன்னிகன்னியாதிகள்வணங்கும்
பங்கயவாவிதானேபழுதுகளகற்றவற்று
லிங்குநின்னவைகழித்தவிலஞ்சியிக்கனகமேனி
மங்கலமன்றுளாடுமன்னவனருளாமன்றே.

இ-ள். கங்கைகாளிநதி - காவேரி - கன்னி-சரசுவதி - நர்மதை - யமுனை முதலான சர்வதீர்த்தங்களும், தங்களிடத்திலுண்டான பாவங்களும்போக வணங்கும் புண்டரீக புட்கரணிதானே சர்வாத்துமாக்களிடத்திலுமுள்ள பாசசேதம்பண்ண வல்லதாதலால் இவ்விடத்து உன்னுடைய தேககுற்றத்தை நீக்கி இந்தப்பொற்றாமறை தீர்த்தம் பொன்வடிவைத் தந்தது மன்றில் நிருத்தஞ்செய்தருளும் சர்வேசுவரனுடைய அருளாகும்—எ-று. (அச)

மன்னவனெமக்களித்தவாழ்வுகேள்வழாதமைந்த
கன்னலுஞ்சுவையும்போன்மெய்க்காட்சியுங்கருத்திலின்பு
மன்னியமின்மைகாட்டியகம்பறமென்றிரண்டு
பின்னமிலருளுந்தந்தபெற்றியார்பெற்றுளாரே.

இ-ள். தேவராசன் நமக்குத்திருவுளம்பற்றின பெருவாழ்வைஒழுக்கநீங்காத மைந்தனே கேட்பாயாக சருக்கரையுஞ்சுவையும்போலக்கொண்ட திருமேனியும் ஈசுவரத்தியானுநுபவமான ஆநந்தக்களிப்பும் அந்நியமின்மையைப்புலப்படுத்தி உள்ளென்றும் புறம்பென்றும் இரண்டறச்சுட்டி உண்டாக்கி யறிகிற ஆத்மஞானத்தைநீக்கி ஒரு நீர்மையாக்கும் அருளே நமக்கு வடிவாகத்தந்த பேற்றை நீபெற்றதேயல்லது மற்றியாவர் பெற்றுள்ளவா—எ-று. (அரு)

இன்றெமக்கிறைவன்முத்தியிகபரத்தெளிதினல்கு
மன்றிதுவென்றுதொல்லைமறைமுனியுபதேசங்க
ளன்றருள்செய்யமைந்தனருவிகண்சொரியநைந்து
சென்றுமுன்பணிந்துதந்தைசேவடிசென்னிவைத்தான்

இ-ள். இப்பொழுது நம்முடைய சுவாமியானவர் முத்தியைப் பரத்திலும் இகத்திலும் எளிதாகத் திருவுளம்பற்றும் சபை யிதுவென்று பழையமறை முனிவன் சாத்திரவித சம்பிரதாயவித அநுபவவிதமான உபதேசங்களை அப்போது அருளிச்செய்ய இரணியவன்மன் விழிநீர்த் தாரைகொள்ள நெக்குருகியெதிர்சென்று அட்டாங்கமாகநமஸ்கரித்துப் பிதாவாகிய வியாக்கிரபாதர் சேவடிகளைத்தன்னுடையசிரசிலே வைத்துக்கொண்டான்—எ-று. (அசு)

சென்னிசேர்பாதங்கண்ணுஞ்சிந்தையுந்திகழவைத்து
முன்னுறவணங்கியேத்திமுகமிகமலர்ந்துஞான
மென்னையும்பொருளாநல்கிறதிறைவநின்கருணையென்று
பன்னருமன்புநீங்காப்பரிவுளம்பெருகுவித்தான்.

இ-ள். சிரசினிடத்துப் பொருந்திய சீர்பாதத்தைக் கண்களிலு மிருதயத்திலும்விளங்கவைத்து மீளவும் சந்நிதியில்நமஸ்கரித்துத்தோத்திரம்பண்ணி முககமலம் மிகவுமலர்ந்து(ஆதியந்தசூனியமாயிருக்கிற) ஞானத்தைப் பொருளல்லாத வென்னையும்பொருட்படுத்தித் திருவுளம்பற்றினது தேவரீர காருண்ணியசத்திநிபாதமேயன்றிவேறில்லையென்று தன்னிடத்திலுண்டான வுரையிறந்த அன்பினாலே ஒழியாமற் பிதாவினுங்களிகூரப்பண்ணினான்—எ-று. (அஎ)

ஆயபேரருளால்வாழுமரசிளங்குமரனூளுந்
தூயநீர்த்தடம்படிந்துதுணைவனைத்தொழுதுதந்தை
சாயைபோலமர்ந்தநந்தன்குருள்களுடம்பணிந்தவர்க்கங்
கேயுமாறேவலுஞ்செய்திளங்கதிர்போலிருந்தான்.

இ-ள். இப்படிக்குண்டாகிய பேரருளினாலே பெரியவாழ்வுபெற்றுவாழும் வாலிபனான இராசகுமாரன் நாள்தோறும் அருள்நீர்ப் பொய்கையிற்படிந்து ஆத்மசகாயனைத்தொழுது பிதாவுக்கு நிழல்போற்பொருந்திப் பதஞ்சலிமகாரிஷி சீர்பாதசேவையும்பண்ணியவர்களிருவருக்கும் பொருந்தின பணிவிடையுஞ்செய்து பாலசூரியனைப்போலப்பிரகாசித்திருந்தான—எ-று. (அஅ)

வேறு.

இங்கிவன்றிகழ்வெய்துநாண்மநுவென்னுமன்னன்வசிட்டனைச்
சிங்கவன்மனையென்னைநீதிசெலுத்துமாறுசெலுத்துகென்
றங்கவன்றன்மனந்திருத்தியருத்தியோடுபரித்துமெய்ச்
சங்கமங்கழிவிதகரும்புகழ்நாவிலாவுடலாயினான்.

இ-ள். இவ்விடத்தில் இந்த இரணியவன்மன் அருள்விளக்கம்பொருந்தின நாளிலேகௌடபூமியில் மநுவிந்திர இராசா வசிட்டமகாரிஷியைப்பார்த்து என்னைக்கொண்டு மநுநீதிசோராமல் நடத்தினாற்போல சிங்கவன்மனைக்கொண்டு செங்கோல் நடத்துவீராகவென்று அவ்விடத்தில அந்தரிஷி அநுமதிகொண்டுமித்திர ஆதரத்துடனே எடுத்துக்கொண்டிருந்த போகசரீரத்தைக் கழிவித்துக் குற்றமற்றபெரியபுகழுடம்பை யதிட்டித்திருந்தான்—எ-று. (அகூ)

இன்னுயிர்க்குலமாதுடனண்ணலெடுத்துவிட்டிடுறக்கநேர்
மன்னுயிர்ப்படைபின்றொடர்ந்துமயானவாழ்வுமுடித்துநற்
பொன்னிலக்கமில்கூறையாதிபொழிந்தழிந்துவசிட்டனீ
டுன்னமைச்சர்கண்மன்னர்மைந்தருடன்கடன்செய்திருந்துழி

இ-ள். இனியவுயிரொத்த குலஸ்திரீயுடனே இராசாவும் உடலெடுத்து விட்டநீக்கத்துக்கு நேராகநிலைபெற்ற அகத்தடிமை புறத்தடிமை முதலாயினார்பின்னேதொடர்ந்துபோய் மயானத்தொழில்முடித்து நல்லகனகதானம இலக்கமில்லாத வத்திரதானம்பூதானங் கோதானம் கன்னிகாதான முதலானவையும் கொடுத்துக்கையேற்புமுதலானவையுங் கொடுத்து வசிட்டமகாரிஷி நெடுங்காலத்திலுள்ள மந்திரிகள குறுநிலஇராசாக்கள் இராசகுமாரரிருவருடன் கூடித் தாம்செய்யவேண்டிய கடமைகளைச்செய்திருக்குங்காலத்தில

யாதுசெய்குவமென்னமைந்தர்களெந்தைமுந்தவிசைந்ததே
மேதகும்படிசெய்கவென்னவிசிட்டனுனவசிட்டன்யா
னீதிதங்கியசிங்கவன்மனேடியிங்கணைவிப்பனீர்
நீதகன்றிடவென்றிசெய்திருமென்றுதென்றிசைசெல்குவான்

இ-ள். இனிமேற்செய்யுங்காரிய மேதென்று யாவரும்வினவ குமாரர் இருவரும் எம்முடையபிதாவுக்கு முந்தப்பொருத்தமானதே பெருமைதரும்படி செய்தருளுவீராகவென்ன வசிட்டமகாரிஷி நாம்போய்த்தேடி மநுநீதி பொருந்திய சிங்கவன்மனை அழைத்துக்கொண்டிங்கே வருவோம் நாம்வருமளவும் நீங்கள் குற்றம்நீங்கபபகைதீர்த்து இருங்களென்றுதென்றிசைநோக்கிச்செல்லுவார்—எ-று. (கூக)

அங்கவங்கமடைந்துகங்கைபடிந்தத்கரையானடங்
தெங்குநாடிவளங்கொள்காசியிறைஞ்சிவிந்தமகன்றெழி
றங்குமாளவகுசசராதிதகுந்தெலுங்குகடந்துநற்
சிங்கவன்மனிருந்தவெல்லையறிந்துதில்லைசெறிந்தனன்.

இ-ள். அங்கவங்க தேசங்களைபபொருந்திக் கங்காஸ்நானஞ்செய்து அதன்கரைவழியாகச்சென்று எவ்விடமுந்தேடி மரணமுத்தி க்ஷேத்திரமாகியவளமைகுடிகொண்ட காசியைநமஸ்கரித்து விந்தகிரியைக்கடந்து அழகு பொருந்திய தகுதியுள்ள மாளவகுச்சராதி தெலுங்குதேசங்களையுங்கடந்து நல்ல சிங்கவன்மாவிருந்தவிடம் விசாரித்தறிந்து தில்லைவனத்தைப் பொருந்தினா—எ-று. (கூஉ)

மன்னுமாறயாவெம்மையாறவசிட்டன்வண்களவார்நிழற்
றன்னிறுதனையெய்துமாறுணர்தண்புலிசசரணத்தனீ
முன்னமேவுகயானுமிந்தமுயங்குபூசைமுடித்துவந்
துனனொடாகுவனென்னமைந்தனுவந்துசென்றுபணிந்தனன்.

இ-ள். வசிட்டமகாரிஷி நிலைபெற்ற வழிநடந்த விடாய்நீங்கும்படி நல்ல திருக்களாநீழலிற்பொருந்தின தம்பிரானைநமஸ்கரித்து இருக்கும தனையறிந்த குளிர்ந்தகாருண்ணியத்தையுடைய வியாக்கிரபாதர் நீ முன்னேபோ யானுமிந்தப் பூசையைமுடித்துக் கடுகவந்துன்னோடே கூடுவனென்று அநுக்கிரகிக்க இரணியவன்ம குமாரனும் மனப்பிரியத்துடனே சென்று வசிட்டமகாரிஷியை நமஸ்கரித்தான்—எ-று. (கங)

தொழுதல்கண்டவ னென்றறிந்துமோர் தொன்மைநன்மைக ளின்
வழுவிலாமகனூர்தடம்புயம்வாழியேயெனமாமுனி [மையால்
மொழிகளுந்தருகின்மையாயமுமுன்புதுன்புகுவிப்பதொத்
திழவறிந்திடுமோகவிழ்ந்திடரோறுமாதனைகூறினன்.

இ-ள். நமஸ்கரித்ததைக்கண்டு சிங்கவன்மன்-அருளினாலே இரணியவன்ம னைதை அறிந்திருக்கையிலும் முன்புபோல ஓர் ஆசீர்வாதம் பண்ணுமையால் குற்றமில்லாத உம்முடையமகனாகிய மநுவின்வெற்றிப்புயங்கள்வாழ்ந்தனவோவென்று இரணியவன்மன்கேட்க வசிட்டமகாரிஷி பிரதியுத்தரம் சொல்லாமல் கிலேசிப்பதற்குமுன்னாகத் துன்பங்களைக்கூட்டுவ தொத்துப்பிதாவின்கிலேசம் இரணியவன்ம னறியும்வண்ணம் தலையிறக்கிட்டுத் துக்கம் அவனை ｏ ஆபாதமஸ்தகமளவாகஏறும்படி தனையைகூறினார்-எ-று(கச)

துன்பமெய்தியவாறுணர்ந்தணைதொல்புலிச்சரணத்தனீள்
வன்பணீசனுடெய்திநீதிவசிட்டனோர்வரவந்துதா
முன்புசெய்வகையாலுஞானமுதிர்ச்சியாலுமுயங்கினோ
ரன்புநீடியதத்தமிற்றிகழாதரங்கள்பெருக்கினார்.

இ-ள். இரணியவன்மனுக்குத் துக்கம்வந்தபடியை அறிந்துவந்த பழைய வியாக்கிரபாதமுனிவர் இனிய வலியபணீந்திரனாகிய பதஞ்சலியுடனேகிட்டி நீதிவழுவாதவசிட்டரும் தாங்களு மொருவர்க்கொருவர் எதிரேவந்து தாமுன்புசெய்யும் பிரகாரத்தினாலும் ஞானநிச்சயத்தினாலும் கூடினமூவருந் தந்தம்முடைய சிநேகாதிசயங்களினாலே தங்களிற் குங்கள விளங்கச்செய்யு மங்கீகாரங்கள் வந்திப்பித்தார்—எ-று. (கரு)

மன்னுநற்றவர்தம்மிலுய்த்தபின்மைந்தன்வந்துவணங்கநா
மென்னுரைத்துமுடிந்தவாறிதுவென்றுதந்தையெடுத்துமேன்
மின்னிலைத்துளதண் *ணிர்மொகருளுமவேறிதற்குவமித்திடிற்
றன்னையொத்துளதென்னிலாருடமநுசமாநினைநெஞ்சமே.

இ-ள். நிலைபெற்ற நல்லரிஷிகள் தம்மிற்கூடி யிருந்தபின்பு இரணியவன்மாவந்து நமஸ்கரிக்க நாமென்னசொல்லுவோம் முடிந்தவாறிந்தப்பிரகாரமாயிருந்தது என்றுசொல்லி வியாக்கிரபாதர் மாயாபாரவெடுத்தணைத்து ஆகாசத்தில் தோன்றியழியும் மின்னலையும் நிலைபெற்ற தண்ணீரிலதோன்

ｏ ஆபாதமஸ்தகம் என்பது-பாதமுதல்சிரசளவுமெனக்கணடுகொளக.
* நீர் எனபது-நிர் எனக்குறுகிறறு.

தியழியும்நீர்க்குமிழியையும்சரீரத்துக்கு திருஷ்டாநதமாகச்சொல்லில் திருஷ்டாநதமாகாமல் தன்னையேதானொத்திருப்பதாதலால் இவ்வுடல் நிலையாயிருக்கத்தக்கதென்று நினைக்கத்தக்கவர்கள்யார்—எ-று. (கூசு)

பிரமரோமுதலானதந்திபிறங்கெறுமபிடை பேணுசி
ருருவினோர்களில்யாருளோர்சருகோடுவாடையொதுக்கவுற்
றிரியநூறியசூறைமாருதமென்னவல்வினைநல்குமா
லருளிலோரொனநோதகாதெனவாறுமாமுனிகூறினன்.

இ-ள். பிரமதேவர்கள் முதலாக யானையெறும்பினிடைப்பட்ட வாழ்வுபெறும் சரீரத்தையுடையவர்களில் யாவர் நசியாதவர்கள் வீசுங்காற்றுப்பலசருகையும்ஓரிடத்திலேஒதுக்க அதனைச் சூறைக்காற்றனது பறக்கடிப்பதுபோல ஒருவினையால் இவ்வுடல் புத்திரமித்திர களத்திராதிகளுடனே கூடியிருக்க மேலொருவினைநேரிட்டு அந்தப் பாசக்கூட்டத்தை நீக்குமாதலால் அருளில்லாதவரைப்போலே விதனப்படாதேயென்று கிலேசநீங்கும்படி வியாக்கிரபாதமுனி அருளிச்செய்தார்—எறு. (கூஎ)

மருவரும்புகழ்வாய்மைநீடுவசிட்டன்மாதவமன்னிநீ
ரிருவரும்பெறுநன்மைபொன்னுருவெய்துமைந்தனும்யாமுமிப்
பொருவரும்புவியோருமேலமர்போகரும்பரியாவருங்
கருவரம்புகடக்கநல்கினிரொன்றுநன்றிகதித்தனன்.

இ-ள். அண்டவொண்ணாத தவமும் சத்தியவாசகமும் என்றும்நீங்காதவசிட்டமகாமுனி மகத்தானதபசுகளைப்பண்ணி நீங்கள் இரண்டுபேரும் பெற்ற பெருவாழ்வை பொன்னுருவன்—ந்தஇராசகுமாரனும் யாமும்இநதஒப்பில்லாத பூமியிலுள்ளவர்களும் சுவர்க்கத்திலுண்டாகிய தேவர்களும் ஒருநாளும் நீங்காத கருக்குழிச் சிறைவரம்புகடந்து நீங்கத்தக்கதாக அநுக்கிரகம் பண்ணினீர்களென்று நல்லவார்த்தை சொன்னார்—எ-று. (கூஅ)

தில்லையெல்லைபுகுந்திவன்பெறுசீர்கொணீடருள்கூறிலோ
ரொல்லையில்லைவசிட்டநீயுமிறைஞ்சவெய்துகவென்றுநற்
றொல்லைமல்லலிலஞ்சிமேவுதொழுந்தகைப்புனலாடுவிந்
தொல்லைமல்கியமன்ற ௦ வாய்மையுணர்த்திமுன்பணிவித்தனன்.

இ-ள். இந்தச் சிதம்பரக்ஷேத்திரத்திலேவந்து புகுந்து இவன்பெற்ற சீர்சிறந்தபேரருளை வகுத்துச் சொல்லமுடியாது வசிட்டரே நீருந் தம்பிரானை நமஸ்கரிக்கவாருமென்று நல்லபழைய வளப்பத்தையுடையதடம்பொருந்தின அருள்வடிவானதீர்த்தச்செலவத்தில் ஸ்நானஞ்செய்வித்தும் உடனே பரிபூரணமான சிதம்பரத்தினுடைய ரகசியத்தின் உண்மையை விளங்க உபதேசித்துந் தம்பிரானார்சந்நிதியிலே நமஸ்கரிப்பித்தார—எ-று.

---

௦ இதில் இவன் என்றது இரணியவன்மாவை ௦ வாய்மையென்றது ஞானதீக்ஷை பண்ணின முறைமைஎன்பது கண்டுகொள்க. (கூகூ)

கரவிலாடல்வணங்கிவண் 0 கருமூலகாரணனாரணப்
பொருவில்பாதமிறைஞ்சிநீடுபுலீச்சுரந்தொழுதெங்கனும்
பாவிநீடுவசிட்டமாமுனிபாய்புலிசசரணத்தன்வாழ்
விரவுமாச்சிரமத்தின்மேவிவிருந்தருந்தியிருந்தனன்

இ-ள். திரோதானமில்லாத ஆநந்த நிருத்தத்தை நமஸ்கரித்து வளவியக ருமூலகாரண னென்று திருநாமம்பொருந்திய ஸ்ரீமூலத்தானமுடைய தம்பிரானாரது வேதச்சிலம்பணிந்த ஒப்பிலாத சீர்பாதங்களை நமஸ்கரித்தும் பழைய திருப்புலீச்சுரமுடையாரை நமஸ்கரித்தும் அந்ததிரு எல்லையில் எங்குமுண்டான சிவலிங்கமூர்த்தங்களையெல்லாந் தரிசித்துவணங்கியும் தபசுநீங்காத வசிட்டமகாமுனிவர்பாயுந தொழிலையுடைய புலிக்கால்போன்ற பாதத்தையுடையவியாக்கிரபாதமகாரிஷி வாழ்வுபொருந்தின ஆச்சிரமத்திலே சென்று விருந்து அருந்தி இருந்தனர்—எ று. (௧௦௦)

அந்திவந்தனைதந்தனந்தனதாசிலாச்சிரமத்திலுற்
றெந்தைபாதமிறைஞ்சிவந்திருளெல்லிசெல்லவெழுந்துநற்
சந்திசேர்பணிராசனுந்தகுசைவராசனுமெய்தவே
வந்தவைதிகராசனனவசிட்டன்மன்னியிருந்தனன்.

இ-ள். சந்தியாகாலத்தில்அநுட்டானம்பண்ணிப பதஞ்சலிமகாரிஷியினுடையகுற்றமில்லாத பன்னசாலைக்குப்போய்த் திருவனநதேசுரமுடைய தம்பிரானாரது திருவடிதொழுதுமீள வியாக்கிரபாதர் பன்னசாலையிலே வநது இருண்டராத்திரிபோன வைகறையி லெழுந்திருநது பிராதகாலத்தின் அநுட்டானம்பொருந்தின பதஞ்சலியும் அப்படிப்பட்ட சைவசிரேஷ்டரான வியாக்கிரபாதரும் வந்துபொருநத வைதிகசிரேஷ்டரான வசிட்டமகாரிஷி அநுட்டான முடித்திருநதார்—எ-று. (௧௦௧)

நீதிலாதவிராசராசனும்வந்துவந்தனைசெய்துநா
மேதிலாரெனகோதகோமருளெந்தைமாரிவர்மைந்தனு
மாதலாலுயர்வீடுமெய்துதுமென்றுமுன்னரமர்ந்தபின்
கோதிலாதவசிட்டன்வந்தமைகூறுவானிடாறுவான்.

இ-ள். குற்றமில்லாத ராசாராசனாகிய இரணியவனமனும் இருஷிகள்முன்னேவந்து நமஸ்கரித்து யாம்காமிகளைப்போலே விதனப்படோம் அருட்பிதாக்களிவர்கள் இவர்களுக்குக் குமாரன்நாம் ஆனதினாலே உயர்ந்தமோக்ஷத்தைப்பொருந்துவோமென்றுசொல்லித்தமக்குமுன் விதனநீங்கியமர்ந்திருந்தபின்குற்றமறறவசிட்டமகாரிஷிநாமெண்ணிவநதகாரியத்தைச் சொல்லுவார் வியாகுலம் ஆற—எ-று. (௧௦௨)

---

இதில் 0 கருமூலகாரணனெனபது பாதமூலமாயோர்பாதானத்தைப் பிரேரேபிக்கும் நிமித்தகாரணனென்றறிக.

அருந்ததிக்கிறைபோனெமக்கிவனுக்குஞாலமளித்துநீ
திருந்தவுய்த்துநடத்துகென்றுரைசெய்துமன்னுயிர்சென்றபின்
றருந்தமன்னுயிர்போனமேனிதகக்கிடந்ததுதம்பிமா
ரிரந்துகொண்டனர்கொண்டுபோதரவிங்குவந்தனனென்றனன்.

இ-ள். கௌடதேசன் சிங்கவன்மனுன என்மகனுக்கு நம்முடைய இராச்சியத்தைக்கொடுத்து நீர்நன்றாக நடத்திக்கொண்டுபோமென்று எமக்குச் சொல்லி உயிர்நீங்கினவளவில் அவருனக்குத்தந்த அவருடைய இராச்சியமானது உயிர்போன சரீரம்போல் வாழ்வற்றுக்கிடந்தது தம்பிமார் வேண்டிக்கொண்டார்கள் ஆகையால் உன்னைச் சிங்காசனத்திலேவைக்க அழைத்துக்கொண்டு போம்படிக்கு இங்கேவந்தோமென்று அருந்ததிகணவராகிய வசிட்டர்கூறினர்—எ-று. (௩0௩)

வன்புலிச்சரணத்தனீடுவசிட்டன்வந்தமைசிந்தைசெய்
தென்செயத்தகுமென்றுமைந்தனையெய்தவாள்விழிசெய்யமுன்
றன்கருத்தறிவித்தலான்மொழிதந்திடானதறிந்துமே
னின்செயற்கிசையத்தகுந்திறநீபகர்ந்திடுகென்றலும்.

இ-ள். ஞானவீரராகிய வியாக்கிரபாதர் பழைய வசிட்டமகாரிஷி வந்த காரியத்தை ஞானத்தாலறிந்து யோசித்து இதற்கு என்செய்யத்தகுமென்று இரணியவன்மனைக்குறித்துக் கிருபையாகிய ஒளிபொருந்திய விழியினாலே பார்த்தருள முற்பட எந்தைமார் நீங்களிருவாகளென்றும் உங்களானுயர்வீடெய்துவேனென்று முன்னே தன் கருத்தைத் தோன்றச்சொன்னபடியினாலே அப்போது உத்தரங்கொடாதுநின்றான், அதைத் திருவுளத்திலே அறிந்து இனிமேல் செய்வதற்குப்பொருந்தத்தக்க அபிப்பிராயமெதுவோ அதைநீ சொல்லுகென்றளவில்—எ-று. (௩0௪)

வேறு.

அந்தமிலரசுஞ்சித்தியனைத்துநீடமரர்வாழ்வு
மிந்திரசாலநீர்மேலெழுத்துமின்கொப்புளிபபொய்
சிந்தனைவேண்டேனண்டநிருமுனிதிருமுனிந்த
வந்தனைவழுவாவாழ்வுவழங்குவாயாகவென்றான்.

இ-ள். எழுபது சதிரயுகம்வரைக்கும் செங்கோல நடத்துகிற முடிவில்லாத இராச்சியபாரம் பொறுத்தலும் அணிமாதிசளாகஇருக்கிற சித்திகளும் ஒழியாத தேவர்கள்பதமும் கபடநாடகமான இந்திரசாலம்நீர்மேலெழுதிய வெழுத்துத்தோன்றி யழியும் மின்னல் நீர்க்குமிழி என்றுமிவைகள்போல நிலையில்லாதவைகளாம் ஆதலால் இந்தப்பொய்யவாழ்வை நினைக்கவும் வேண்டேன் என்னை ஆண்டருளிய திருமுனியே உமதுசந்நிதியில் இப்போது யான செய்துவருகிற பணிவிடை நீங்காத மார்க்கத்தைத் தந்தருளுவீராகவென்று விண்ணப்பஞ்செய்தான—எ-று, (௩0௫)

ஆகினீமுனிவனோடுமொண்டணைந்தரசமௌலி
நாகமாவிரதந்தானைநவமணிநிதியுளிட்ட
போகமார்பொருளமைச்சாபேதையர்பொருந்தக்கொண்டு
வேகமாய்வருவாயென்றுவியாக்கிரபாதன்கூறி.

இ-ள். மாயாபோகம் வேண்டாமெனபையாகில் வசிட்ட மகாரிஷியுடனே உன்னுடையதேசத்துக்குபபோய் இராசவாஞ்சிதமான மணிமுடி-யானை-குதிரை-தேர்-பதாதி-நவரததிங்கள்முதலான நிக்ஷேபங்களை இராசபோகத்துக்குப்பொருநதின கனகமிரசித முதலானவையுந் திவ்வியமான பட்டாடைகளுங் கஸ்தூரிமுதலான சுகந்தங்களும் மநதிரிகள் ஊழியப்பெண்கள் இன்னம் வரப்பொருநதின பேர்களைச்சைக்கொணடு கடுக வருவாயாகவென்றுவியாககிரபாத ரநுக்கிரகித்து—எ-று. (கoசு)

மன்றமாநடமுன்போற்றியெம்முடன்மருவினோரின்
முன்றிகழ்முனிவாமூவாயிரவரைமுதுவேள்விககென்
றன்றயன்வேண்டிக்கொண்டானவர்களையந்தாவேதி
சென்றுடன்கொணர்வாயென்றுதிருமுனியருளிசசெய்தான்.

இ-ள். சிதம்பரத்தில் அநவரததாண்டவம் நெடுங்காலத்துக்குமுன்னே எம்முடனே தரிசித்திருநதவாகளில் முன்னெண்ணப்பட்ட மூவாயிரம் பிரமரிஷிகளையும் பழைய யாகத்துக்காக அநநாளிலே பிரமா நம்மைக்கேட்டழைத்துக்கொண்டுபோனா ஆதலால் நீ அநதாவேதிக்குப்போ யவாகளை உன்னுடனே கூட்டிக்கொண்டு வருவாயாகவென்று வியாக்கிரபாதர் அருளிச்செய்தாா—எ-று. (கoஎ)

திருவுளமானதொன்றுசெய்தவமென்றுசெப்பப்
பொருபுலிமுனிமகிழ்நதுபொதுநடமுடனேபோற்றி
யருள்புரிபெருமானிந்தவடிகளேம்பணிநடத்த
விரைவொடுவருவானேகவேண்டும்விண்ணப்பமென்ன.

இ-ள். தேவரீாககுப பொருநதின காரியஞ்செய்யுமதே அடியேனுக்குப் பெருநதவமெனறு இரணியவனமா விண்ணப்பஞ்செய்ய ஆணவமலத்தை வென்றவியாக்கிரபாதமுனி பிரியப்பட்டு இவனுடனேபோய்ச் சிதம்பர நிருத்தநதரிசித்துத் தம்பிரானே திருவுளம் வாழநதருளித் தேவரீருடைய இங்குண்டான எங்கள்பணிவிடை குறைவறநடத்தச் சடுதியிலே வரும்படிக்குப் போகத்தக்கதாக அருளவேண்டும் இது எங்கள் விண்ணப்பமென்றார்—எ-று.

கண்ணுதலோனுமெண்ணில்கருணையுமருளுநல்க
வெண்ணருமின்பமெய்தியெந்தைதாள்சிந்தைசெய்து
விண்ணவனிசைவான்மைந்தன்விடைகொண்டுமீண்டுபோந்தான்
மண்ணுறவண்ணலபாதம்வசிட்டனும்வணங்கிவந்தான்,

இ-ள். நெற்றிக்கண்களையுடைய சிதம்பரமூர்த்தியும் எண்ணிலாத கிருபையும் அநுக்கிரகமும்திருவுளம்பற்ற எண்ணரியவாநந்தம் பொருந்தித் தம்பிரானார்திருவுளப் பொருத்தத்தினாலே இரணியவன்மாவென்கிற குமாரன் விடைகொண்டு தம்பிரானார் சீபாதத்தையும் நமஸ்கரித்துக்கொண்டு வியாக்கிரபாதர்பன்னசாலைக்கு மீளவந்தான். மண்ணுறச் சர்வேசுரன் சீர்பாதங்களை வசிட்டமகாரிஷியும் அட்டாங்கமாக நமஸ்கரித்து விடைகொண்டு உடனேவந்தார்—எ-று. (கoக)

அன்னைநீறளிப்பப்போற்றியாருயிரவர்பாலாகப்
பன்னகவுரவோன்றாளும்பணிந்துபோய்ப்பரமர்தில்லைப்
பொன்னமரெல்லைபோற்றிப்போதுவான்புகழ்புலிககான்
மன்னவன்றன்னையாண்டவகைமொழிவழியாசசென்றான்.

இ-ள். வியாக்கிரபாதமுனிவர் பத்தினியாகிய தாயானவள் தன்னெற்றியில் விபூதியிடத் துதித்துவணங்கித்தன்னுடைய உயிரை மாதாபிதாக்களிடத்திலிருக்கவைத்துப்பதஞ்சலி மகாரிஷியென்னும் ஞானவீரரது சீர்பாதமும் நமஸ்கரித்து வடக்குநோக்கிப்போயப பரமேசுரருடைய தில்லைவனஞ்சூழும் பொன்னம்பலத்தி னெல்லையைப புகழ்நதுவணங்கிச் செல்லுகின்றவன் கீர்த்தியையுடைய வியாக்கிரபாதராகிய சுவாமி தன்னை தீக்ஷைபண்ணி இரக்ஷித்தாண்டுகொண்ட முறைமை வகைப்பட வழிமுடியுமளவு மதிலே யொருப்பட்டுச்சிதம்பரமுதல் தன்னுடைய தேசமட்டும்இராப்பகல் அநவரதகாலமும் புலிமுனியாகிய பிதாவினுடைய காருண்ணியத்தை வசிட்டருக்குச் சொல்லிக்கொண்டு போனான்—எ-று. (ககo)

விற்கழியம்புந்தந்துமேவியுவிகங்கரும்போற்
கற்கடங்கடிதகன்றுகவுடதேயத்துத்தங்க
ணற்கடகத்துக்கோயினண்ணலுமெண்ணின்மாதர்
வர்க்கமுந்தம்பிமாருமால்கடநளிர்சசிகொண்டார்.

இ-ள். வில்லில்நின்றும் நீங்கிக்குறிபிழையாதுசெல்லும் அம்பும் கயிறுசட்டிவிட்டகாற்றாடியும்போலக்கல்வழியை விரைவிலேகடந்து கௌடதேசத்திலிருக்கும் மதில்சூழ்ந்த தங்கள நல்லபட்டணத்தின் மாளிகையைப்பொருந்திப் புகுந்தவளவில எண்ணிறந்த மாதர்கூட்டங்களுஞ் சிறியதாயுந தம்பிமாரும் பெருங்கடல்ஒலித்தாற்போலஅதிசயத்துடனேயழுதார்கள்—எ-று.

அழுந்திய துயரநீங்கியதுசனைபாற்றியாயு
மிழந்தனனாகாவண்ணமிவரிருந்தனரோயென்றச்
சழிந்தமெய்த்தாயருள்ளத்தளர்வுகளாற்றிமற்றை
யொழிந்தநற்சுற்றத்தார்களியாவையுந்நயமொழிந்தான்.

இ-ள். தானடைந்த விதனத்தைநீங்கித் தம்பிமாரையாறப்பண்ணித்தான் தாயினையிழந்தவனாகாவண்ணம் இவர்கள் இருந்தார்களோயென்று இலக்கு

மிநீங்க வடிவமாகின தாயாருடைய மனக்கிலேசங்களை நீக்கி மற்றுள்ளவர் தம பநதுக்கள் யாரையும் வருத்த நீக்கினுன்—எ-று. (ககஉ)

எண்டகுதுறைகொண்மாக்களியாரையுமினிதழைத்துக்
கண்டுதன்கனகமேனிக்கவினவர்காணநல்கி
யண்டர்தம்பெருமானுடுமம்பலத்துழனியுன்னி
யொண்டிறற்குமரனுளொருழியாமெனவொழித்து.

இ-ள். எண்ணிக்கைப்பட்ட துறைதோறுந தகுதியான மனிதரைப்பிரி யத்துடனே அழைப்பித்து அவர்களையாவரும் வரக்கண்டு தனது பொன்ம யமான சரீரத்தை யவர்கள் காணும்படியாகக்காட்டித் தேவதேவன் ஆநந்த கிருத்தஞ்செய்யுஞ் சிதம்பரத்தில் அடியார்கள்துதித்தலாலெழும் ஓசையைச் சாதித்துக்கொண்டு அருள்வீரனுன இராசகுமாரன ஒருநாளைபபொழுது ஒரு ழிபபொழுதா மென்னத்தககதாக நீக்கி—எ-று. (ககங)

பன்னுமந்திரிகடம்மைப்பார்த்தினியிங்குப்பன்னுண்
மன்னிநான்வைகலேனெவ்வழுவுடற்பழுதகற்றிய
பொன்னுருவாகசசெய்தபுலிமுனிசரணம்போற்றற்
கென்னுடன்போதுவீரேலெயதுமென்றவர்க்கிசைத்தான்.

இ-ள். பிரதானமாகச்சொல்லப்பட்ட மந்திரிகளைப்பாாத்து இனிமே லி வ்விடத்துப் பலநாள்பொருநதி இருபபேனென்கிற எண்ணமுடையனல்லே ன்ஆதலால் என்னுடைய குற்றமிகுத்த சரீரத்தின் சிங்கநிறத்தைப்போக்கிக்க னகவடிவாக்கின வியாக்கிரபாத மகாரிஷியினுடைய சீர்பாதசேவை பண் ணுதற்கு எனனுடனேகூட வருவீர்களாகில் வாருங்களென்று இரணியவன மன் அவாகளுக்குச்சொன்னுன—எ-று. (ககச)

போதுவீராகின்மாயாபோகமோன்றுமன்றிவ்
வேதநான்முகன்மால்காணுவிண்ணவன்வெளியோநண்ணி
மாதொருபாகமாகமகிழ்ந்துநின்றிடும்வாழ்வு
மேதினீர்பெறுவீரென்றங்கிரணியவன்மன்சொன்னுன்.

இ-ள். என்னுடன வருவீராகில் இநதமயாபோகவாழ்க்கை மாத்திரமன்று வேதம் பிரமவிஷ்ணுக்கள் காணுத கனகசபையில் சிதம்பரமூர்த்தி ஆநந்த சொரூபியாய் யாவாக்குநதிருட்டி கோசரமாக நின்று கிரியாசத்திகாண ந டிக்கிறசத்தியமான வாழ்வையும் ஒன்றுக்குமுறுப்பறற நீஙகளும் பெற்று வாழ்வீர்களென்று இரணியவன்மனசொன்னுன்—எ-று. (ககரு)

மொழியதுகேட்டமைசசாமுகமகமிகமலர்ந்து
வழுவிலாவெம்மையாளுமன்ன நீசொன்னதொன்று
தொழுதியாமுயல்வோமென்றுசொல்லித்தெனறில்லைநோக்கி
யெழுவான்பயணமென்றங்கெழுமுரசியம்புவித்தார்.

இ-ள். இரணியவன்மன்சொன்ன வார்த்தையைக்கேட்ட மாத்திரத்தி லே மந்திரிகளெல்லா முககமலமும் இருதயகமலமும்மிகவுமலர்ச்சிகொண்டு எம்மை யாளாகவுடைய குற்றமில்லாத இராசாவே நீர் கற்பித்ததுயாதொன் ருே அதனை ஒத்துக்கொண்டு யாங்க ளப்படியே செய்வோமென்றுசொல்லித் தக்ஷிணதிக்குத் தில்லையைநோக்கிப் பயணமியாவரும் புறப்படுங்களென்று எழுச்சிமுரசுநகரிசூழ அறைவித்தார்.

அந்தமில்கனகவெற்புமருநவமணிப்பொருப்பு
மெந்திரத்தேரினீட்டமொட்டகமிவுளியானை
தந்திரம்பண்டிவண்டிபரித்தெழுத்தயங்குநாட்டு
மைந்தர்கண்மகளிர்சைவர்வைதிகர்மகிழ்ந்தெழுந்தார்.

இ-ள். கனகச்செய்குன்றுகளைப்போலவும், நவரத்தினச்செய் குன்று களைப்போலவும் விளங்காநின்றசூத்திரம்பொருந்தின அநந்தந்தேரணிகளும், எண்ணிறந்தவொட்டகங்களும், குதிரைகளும், யானைகளும்,உருளை பூட்டியவ ண்டில்களும் பதாதிகளும்சுமந்துசெல்லச் செல்வமிகுத்த கௌடதேசத்திலு ள்ள புருஷர்களும், பெண்டுகளும், சைவர்களும், வைதிகர்களும், பயணப்ப ட்டார்கள். (கள)

அன்னையரநுசர்மைந்தரரிவையர்கணிகைமார்க
ளுன்னுமெய்க்காவலாளராரியருரிமையோர்க
ளின்னுமெண்ணிலர்களோடுமிரணியவன்மனேகி
மன்னுசீரந்தர்வேதிமாதவூர்தம்மைச்சார்ந்தான்.

இ-ள். சிறியதாயர்கள் தம்பியிருவர் மற்றுள்ளகுமாரர்கள்குமாரத்தி யர்கள் உள்ளும்புறம்பிலுமுள்ள ஊழியமாதர்கள் மெய்க்காவற்காரர்கள், அகத்தடியார் பின்னு மெண்ணிறந்த ο ஐவகைக்குழு ο ஐவகைச்சுற்றம் முத லானோர்சூழ இரணியவன்மா வானவன்சென்று நிலைபெற்ற 'ஐசுவரியம்பொ ருந்தின பிரமாவின்யாகத்தலமான அந்தர்வேதியிலிருந்த மூவாயிரம் பிரமரி ஷிகளையும்வந்து பொருந்தினன்—எ-று. (கஅ)

மும்மையாயிரவர்நீங்கண்முதுபதிப்பொதுவிலாடு
நம்மையாளுடையான்பாதநாடொறுநயந்துபோற்றற்
கெம்மைநீர்பிரியாதெய்தற்கெழின்முனியிசைத்தானென்று
செம்மையாரிரவிபோலத்தேர்பலசேரவுய்த்தான்.

---

ο ஐவகைக்குழுவாவன - மந்திரியர் - புரோகிதர் - சேனுபதியர்-தூதர்- சாரணர்.

ο ஐவகைச்சுற்றமாவன - நட்பாளர் - அந்தணாளர் - மடைத்தொழிலர்- மருத்துவக்கலைஞர்-நிமித்தகப்புலவர்.

இ-ள். நீங்கள் மூவாயிரம்பிரமரிஷிகளும், பழையதலமான சிதம்பரத்தில் அநவரதநிருத்தஞ்செய்யும் எம்முடையதம்பிரான் சீர்பாதங்களை அநவரதமுஞ்சேவைபண்ணுதற்கு உங்களைநீங்காமல் எம்மைவரத்தக்கதாகப் பெரியவியாக்கிரபாதர் எனக்கு அருளிச் செய்தாரெனச்சொல்லிச் செவ்வொளிநிறைந்த மலைகளபோன்ற மூவாயிரமாணிக்கத்தேரை முன்னே அணியாகநிறுத்தினன்.

அங்கவர் தங்கடுங்கவங்கிகளாதரித்து
மங்கையர்மகளிர்மைந்தர்வான்கலை * யரணிமற்று
மெங்கணுநிறையவேற்றிரதமூற்புரவிபூட்டிப்
பொங்கியெவோமதேனுப்போதுவதொடர்ந்துபோத.

இ-ள். அவ்விடத்து அந்தரிஷிகள் நித்தியாக்கினிகளையும் ஆதாரத்துடனே யெடுத்துகொண்டேறி பத்தினிகள் புத்திரிகள்பிள்ளைகள் கிருஷ்ணசனம் அரணி சமித்து நெய் பொரி தருப்பை பாத்திரங்கள் முதலானவைகளை ஏற்றித் தேருக்குமுன்னகக் குதிரைகளைபூட்டிச் சுரநதமூலைகளையுடைய ஓமார்த்தமான பசுக்கள் மற்றும வேண்டியவைகள்கூடிவர—எ-று. (க௨0)

அந்தமில்பரிசனஞ்சூழரவமுமரசர்போற்றும்
வந்தனைத்துவைப்புந்தெய்வமறையவர்மலிதேரார்ப்புந்
தந்திரச்செருக்கும்வேழத்தமரிப்புஞ்சைந்தவங்கண்
முந்தியவொலியு 0 முந்நீரொழினுமிகமுழங்க.

இ-ள். முடிவில்லாத பரிசனங்கள் சேவித்துவரும் ஓசையும் இராசாக்கள் தோத்திரம்பண்ணி வணங்கும் ஓசையும் திவ்வியமான பிரமரிஷிகள் ஏறின மூவாயிரந்தேர்க்கூட்டத்தின் ஓசையும் சேனையின் ஓசையும் யானைபிளிறுதலான ஓசையும் குதிரைகளனுமானிக்கும் ஓசையும் எழுகடலின் ஓசையினுமதிகமாக முழங்கும்படி—எ-று. (க௨க)

விழிநுழையாதகானும்வியன்சரியாகுஞ்சாரமுங்
கழிவுறமடியுமானைக்காலுறுந்தேர்க்காலோட
வழிபடுமவர்காற்றூளிவானமும்புனிதமாக்கப்
பொழிலபெருவழியாமாறுபுரவலனெடிதுபோந்தான்.

இ-ள். முன்னே கொடிப்படை செல்லுதலால் கண்ணுசகு நுழையவொண்ணாத செறிநத பெரியகாடும் பெரியசரிவழியாகும், குதிரைகளதாண்டிச் செல்லுதலால்மரமுள்ளது சாய்நதுவிழும் கழிநதொடிநது யானைக்காலாலே

---

0 முந்நீரென்பது சமுத்திரத்திற்குள்ள காரணப்பெயர்களிலொன்று அதன்விவரம் ஆற்றுநீர்-வேற்றுநீர்-ஊற்றுநீர் - என்னுமுவகைநீரையுடையதென்றும் - ஆக்கலளித்தலழித்தலென்றும்- மூன்றுசெயலகளையுடையதென உரையாசிரியாகள கூறியிருக்கின்றனா.

* அரணி - தீக்கடைகோல.

மிக்கநருக்குண்டுபோம் தேர்க்கால் செல்லப் பெருவழியாம் பின்னே வருமவர்களுடைய சீர்பாதம் பட்டுத்தூளியாய் அந்தத்தூளி தேவலோகமும் சுத்தமாகக் காடெல்லாம் பெரிய வழியாகும்படி கௌடராசனாகிய இரணியவன்மன் நெடுந்தூரம் வந்தான்—எ-று. (௧௨௨)

மன்னவர்தத்தமெல்லைவழிவிடவடவிவாழுங்
கொன்னவில்விலங்குந்தந்தங்கொடுவழிவிடப்போந்துள்ள
வின்னநல்வளனென்றுமலெடுத்துவந்தெங்குமீண்டிப்
பன்னதிவெள்ளமலகும்பரவைபோல்விரவியோங்க.

இ-ள். அங்கவங்கமுதலிய தேசங்களிலுள்ள இராசாக்களுந் தம்முடைய எல்லையளவாகச் சேவித்துவர வனத்தில்வாழுங்கொலைத்தொழிலுக்கு மிகுத்துச்சொல்லப்பட்ட சிங்கம்புலிமுதலான மிருகங்களுந் தந்தம்முடைய கொடுந்தொழிலான வழியைவிட்டுநீங்க அந்தந்ததேசத்திலுள்ள அபூர்வ பதார்த்தத்தில் வேறு நல்லபதார்த்தங்கள் இன்னமும் இருக்கின்றதென்று சொல்லுதற்கில்லாமல் கொண்டுவந்து எவ்விடத்தும் பொருந்திப் பலஆறுகள் பெருகிக்கூடுஞ் சமுத்திரம்போலச் சேனைகள்பொருந்திஇலங்க-எ-று. (௧௨௩)

எண்டகுநாடுங்காடுமலைகளும்யாறுநீங்கிக்
கண்டதுவழியாமண்டிக்கடிதுவந்தலர்ந்தகண்டல்
வெண்டருமடலுநீறும்விரைதருசோறுநல்கித்
தெண்டிரைப்புலவுமாற்றுந்தில்லையினெல்லைசேர்ந்தான்.

இ-ள். எண்ணத்தக்கநாடுகளும் - காடுகளும் - மலைகளும் - ஆறுகளும்-கடந்து தனக்குநேரிட்டதே வழியாக விரைந்துவந்து பூந்தாழையானது வெண்மையைத்தரும் மடலும் நீறும் மணம்பொருந்தியசோறும் சொரிந்து கடலின்புலால் நாற்றத்தைநீக்குந் தில்லைவனத்தின் எல்லையை அணுகினன்.—

புரவியைவிரைந்துபோந்துபுதல்வன்முன்பணிந்துபோற்றி
வருபெருஞ்செல்வங்கூறமாமுனிமகிழ்ந்துவாழ்த்தித்
திருவுடையந்தணாளொருந்தருள்சீர்மைகாண்பா
னிருவருமெதிரேசென்றூரியாவருந்தேரிழிந்தார்.

இ-ள். மனோவேகத்துக்கொத்த குதிரையை மேற்கொண்டு துரிதமாக வந்து புதல்வனாகிய இரணியவன்மன் வியாக்கிரபாதர் சந்நிதியிலே நமஸ்கரித்துத் துதித்து வருகிறசேனை ஐசுவரியத்தின் மிகுதியும் ரிஷிகள் வரத்தும் விண்ணப்பஞ் செய்ய வியாக்கிரபாதருஞ் சந்தோஷத்துடனே ஆசிர்வாதம்பண்ணித் திருவுடையந்தணரென்று திருநாமத்தையுடைய ரிஷிகளெழுந்தருளுகிற பெருமைகாணும்படி பதஞ்சலி மகாரிஷியுந் தாமும ரிஷிகளுக்கு எதிரேவர மூவாயிர ரிஷிகளுந் தேரினின்றுமிழிந்தார்கள்—எ-று. (௧௨௫)

அங்கவரணைந்துவாழ்த்தியணைப்பவாழ்ந்தமமவுன்றன்
மங்கலவருளான்மீண்டுவருநெறிபெற்றேமினம்
பங்கயன்வரினுமண்ணல்பாதபங்கயங்களிங்ஙா
திங்கெமைமுனிவபோகவிளிவிடாதொழிகவென்றார்.

இ-ள். அவ்விடத்திருஷிகள் எல்லாரும் வியாக்கிரபாதரை வாழ்த்தி ஒருவர்க்கொருவராலிங்கனம் பண்ணிக்கொண்டு கிருதார்த்தராய் சுத்தனேயுனது மங்களமான அருளினாலே இவ்விடத்துக்கு மீளவும் வரும்வழிபெற்றோம் இன்னம்பிரமாவந்தாலும் அண்ணலுடைய சீர்பாதபங்கயங்களைப் பிரியாமலிருக்களங்களைப் போகவிடாதே முனிவனே என்றுசொன்னார்கள்-எ-று.

மாமணித்தேர்கண்மன்றின்வடகுடபானிறுத்தித்
தாமணைந்தருமுனிக்குத்தம்பிரானருளினாலே
தூமலிவகையாற்காட்டத்தொகையிலோர்முனிவரங்குத்
தேமலியலங்கன்மார்பன்கண்டிலன்றிகைத்துநின்றான்.

இ-ள். பெரியமாணிக்கத்தேர்களைச் சிதம்பரத்துக்கு வடமேன்மூலையிலே நிறுத்தித்தாங்களிப்பால்வந்து பொருந்திசதம்பிரானார் அருளினாலே வியாக்கிரபாதர்க்குச்சுத்தமிருந்திருக்கிற தங்களை யெண்ணிக்காட்டும்போது மூவாயிரவரில் ஒருரிஷியை அவ்விடத்துக்காணாமல் மணம்பொருந்தின ஆத்திமாலை மார்பனான இரணியவன்மன் திகைத்துநின்றான—எ-று. (கஉஎ)

செம்மைமெய்ப்பெரியோர்போலத்தேடரிதென்றுமைந்தன்
மெய்ம்மையிற்றுயரநோக்கிவிமலன்விண்ணவருங்கேட்ப
வெம்மையொப்பவர்கள்யாரும்யாமவர்க்கொபபோமென்றே
யம்மையப்பனுமாவானுமவர்களிலொருவனென்றான்.

இ-ள். செம்மைபொருநதின சத்தியசொரூபிகளான இந்தபெரியோரைப்போல இனியொருவரையுந் தேடக்கிடையாதென்று இரணியவன்மனானவன் திரிவிதகரணத்தினாலு முண்மையாகபபடும் வருத்ததனைக்கண்டு விமலன் விண்ணவரும் கேட்குத்தக்கதாகஅந்த ரிஷிகளெல்லாரும் எமக்கொப்பானவர்கள்யாமந்த ரிஷிகளுக்கு ஒப்பாவோம் ஆதலால் நாமவர்களுக்குள்ளே யொருவனுகக்கைக்கொள்ளென்று செகத்துக்குமாதாவும்பிதாவுமாகிய சிதம்பரநாதர் அருளிச்செய்தார்—எ-று. (கஉஅ)

என்றருள்செய்தவாய்மையாவருங்கேட்டுத்தில்லை
மன்றினின்றாடுமின்றமறையவன்மறையோர்தம்மி
லொன்றெனலாருமேன்மையுடையரொன்றுளந்துளங்கிச்
சென்றடிபணிந்தார்ன்மைந்தன்றேவர்பூமாரிபெய்தார்.

இ-ள். இப்படியருளிச்செய்த சத்தியவாசகத்தை யெல்லாருங்கெட்டுத் தில்லைமன்றில் ஆநந்தநிருத்தம் செய்கிற வேதசாஸ்திரமான சர்வேசுவரனி

ந்தப்பிரமரிஷிகளில்லாமுமொருத்தனென்று சொல்லற்தக்க பெருமையுடையார்களென்று சித்தநடுக்கத்துடனே சென்று இரணியவன்மன் நமஸ்கரித்தான்தேவர்கள் புட்பவருஷம் வருஷித்தார்கள்—எ-று. (கஉகூ)

அண்டர்நாயகனளித்தவருளினுற்றம்மையஞ்சி
மண்டனில்வீழ்ந்தெழுந்துவாழ்ந்துதாழ்ந்தயர்ந்துவாழ்த்தி
யெண்டிகழ்முனிவரொம்மையெழுமையுமடிமையாகக்
கொண்டருளென்றுகொண்டைக்கோலொடுகுணலையிட்டார்.

இ-ள். அண்டத்துக்குநிமித்தகாரணனுயுள்ளவன் கடாக்ஷித்த அருளினுலே தம்மைத்தாமேயறிநது பயப்பட்டுப் பூதலத்திலே தண்டாகாரமாகவீழ்ந்துமீளவெழுந்திருந்து பெருவாழ்வுபெற்று உன்மத்தராய் நமஸ்கரித்து மொழிதராய்வெகுவிதமாகத் துதித்துமூவாயிரரிஷிகளும்எங்களை யெழுபிறப்பிலும் அகத்தடிமையாகக் கொண்டருளுவாயாகவென்று கொண்டைக்கோலுடனே குணலைக்கூத்தாடினூர்கள்—எ-று. (கஙo)

மன்மகன்றெழுதுநின்றிம்மறையவர்க்கேவல்செய்தற்
கென்னமாதவம்புரிந்தேன்யானெனவிறைஞ்சியேத்தப்
பன்னருமிருடிமைந்தன்பான்மையைப்பாவமன்றிற்
பொன்னடிபணிந்துவாழ்த்தியாவரும்புகழ்ந்துபோந்தார்.

இ-ள். இராசகுமாரன் நமஸ்கரித்துநின்று இநதப் பிரமரிஷிகளுக்குப் பணிவிடைசெய்ய யானெநதப்பெரியதபசுபண்ணினேனென்று சாஷ்டாங்கமாக நமஸ்கரித்துப்புகழ வாக்குககெட்டாத பெருமையையுடையரிஷிகளும் இரணியவன்மன் சுபாவத்தைத்துதித்துச் சிதம்பரத்தில் தம்பிரானுர் சீர்பாதத்தை நமஸ்கரித்துவியாக்கிரபாதர் பதஞ்சலிமுதலானயாவரும் இரணியவன்மனை யாசீர்வாதம்பண்ணி நல்லவார்த்தைகள்சொல்லி யாச்சிரமங்களிலே வந்தார்கள்—எ-று (கஙக)

நடநிலைபிரியாதானேர்ஞானவானிருந்தாற்பாச
மிடையிருளகன்றுகோடிவிற்கிடைவெளியாமென்றூற்
றிடமிருதவரநேகர்செறிதலாற்றிகழுந்தில்லை
யடவியுமிருணீங்கிற்றென்றலதிசயமாகாதன்றே.

இ-ள். ஆநந்தநிருத்தத்துக்கு அதிட்டானமான ஞானத்தைநீங்காத சைதன்னியத்தை யுடையவராகிய ஒருஞாதாவானவர் யாதோரிடத்திலே இருக்கிறுரோ அவ்விடஞ்சூழ்ந்த பாசநெருங்கின அந்தகாரநீங்கிக் கோடிவிற்கிடைநீளம் சிவப்பிரகாசமாமென்று வேதாகமஞ்சொல்லுதலால் அத்திடசித்தரான பெரியரிஷிகள் அநேகம்பேர் நெருங்கியிருக்கையினுலே தில்லைச்சிற்றம்பலமென்ற பழம்பதியிற் காடுகளியாவும் பாசநீங்கிறறென்னுமது அதிசயமாகாதே—எ-று. (கஙஉ)

ஞாதா - ஞானவான்.

அருந்தவரடங்கத்தில்லையம்பலஞ்சூழவைகத்
திருந்தியகுமரன்மன்றந்திகழ்குணதிசையிற்சேரப்
பொருந்தியநானமல்கப்புகழ்படைவீடுசெய்தங்
கிருந்தனன்பின்புசெய்தவியல்புகளியம்பலுற்றும்.

இ-ள். மூவாயிரம் பிரமரிஷிகள்முதலான பெரியோரியாவரும் தில்லை யம்பலத்தைச்சூழ்ந்திருப்பக் குற்றநீங்கின இரணியவன்மனானவன் சிதம்பர த்துக்குக் கிழக்காகப்பொருந்தித் தன்னைச்சேவித்துவந்த சதுரங்கபலத்துக் கும் இடமுண்டாகக் கொற்றவன் குடியிருப்பென்றுசொல்லப்பட்ட படைவீ டுகற்பித்து அவ்விடத்துக்கட்டின மாளிகையிலிருந்தான் பின்பு நிகழ்ந்த காரியங்களைச் சொல்லப்புகுகின்றேம்—எ-று. (கசுஉ)

இரணியவன்மச்சருக்கம்

முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௩௬உ.

# திருவிழாச்சருக்கம்.

எண்ணிலிருந்தவரொந்தைநடந்தொழுதின்பார
மண்ணில்வணங்கியிணங்கருமன்பொடுவாழ்நாளிற்
றிண்ணியசிந்தைகளொன்றிநினைந்தருடேர்வாரா
யண்ணன்மருங்குயர்புங்கவர்சங்கமமர்ந்தார்கள்.

இ-ள். எண்ணிறந்த பெரியரிஷிகள் எம்பிரானாருடைய ஆநந்தநிருத்த ஞ்சேவித்துக் களிகூர்ந்து பூதலத்திலே சாட்டாங்கமாக நமஸ்கரித்து ஒப்ப ரிய அன்புடனேவாழுநாளிலே திடசித்தங்களினாலே யொத்து விசாரித்துத் தம்பிரானார் திருவருள் எப்படியென்றறிவாராகி வந்து சிதம்பரநாதருக்கு அருகாகப் பெரியோர் இயாவரும் திருக்கூட்டமாகி யிருந்தார்கள்—எ-று. (க)

சங்கமிருந்தபினங்கமர்புண்டரிகத்தாளோ
னிங்கரசன்றருமைந்தரின்முந்தையனிப்பார்மெய்ப்
பொங்கருளகொண்டுபுரப்பவனிப்புவிமுறைகாவற்
பங்கமிறம்பியர்தம்பதியென்றுரைபாரித்தான்.

இ-ள். அக்கூட்டத்தார் அப்படியிருந்தபின் அவ்விடத்துப்பொருந்தின வியாக்கிரபாதர் இவ்விடத்துக் கௌடதேசன்தந்த குமாரரில் முந்தின குமாரனாகிய இரணியவன்மன் இந்தத்தேசத்தைச்சத்தியமான சிவாக்கினையின்

பெருமையினாலே செங்கோலநடத்தக்கடவன், குற்றமில்லாத இப்பூமியின்முறைமைச்குத்தம்பிமார்கள் தங்கள்தேசத்துக்கு முதற்காவலாக இருக்கக்கடவர்களென்று அவர்கள்பரிபாலிக்கிய கௌடதேசத்துக்குக் கர்த்தாராகக்கடவனென்கிறவார்த்தையை யாவரும கேட்ப விரித்துரைத்தார்—எ-று. (௨)

உருகுபதஞ்சலிமன் னுபமன் னியனன்மாமன்
றிருவுடையந்தணாயாருமூவாந்துளைசெய்பசசீ
ரிரணியவன்மனை முன்மரபின் மணமேய்வித்தே
மருவியமன்றயன் மண்டபமொன்றுவகுப்பித்தார்.

இ-ள். இரணியவன்மனை யடிமைகொண்டு தேவகாரியமுடிய இராச்சியங்கொடுத்த திருவருளின்பெருமைகண்டு நீராளமாயுருகின பதஞ்சலி, பாலியத்திலே திருப்பாற்கடல்பெற்றுக் கிருஷ்ணனுக்கு விசேடதீக்ஷைபண்ணி மற்றுமுண்டான எண்ணிறந்தபெருமைபொருந்தின உபமன்னியபகவான், அவருடைய நல்லமாதுலனாகிய வசிட்டர் திருவுடையர்தணராகுந தில்லைமூவாயி ரவர்மற்றுமுள்ள தெய்வரிஷிகள் யாவரும் பிரியத்துடனே அவ்வண்ணமே செய்யக்கடவதென்றுசொல்ல கீர்த்திமானாகிய இரணியவன்மாவையிராசநீதிக்குப்பொருந்த விவாகஞ்செய்வித்துச் சிதம்பரத்துக்கருகாக அவனுக்குப்பொருந்தின இடத்திலே ஒரு அபிஷேகமண்டபமுங் கட்டுவித்தார்—எ-று.

மற்றதின்மங்கலமாலைகடோரணம்வாழ்திபம்
பெற்றவிசெண்பலகைக்குலநெய்பொரிபுற்பூநூல்
சுற்றியகும்பமுடன்கலசம்பலசூழ்வித்தே
யற்றிகழ்வொன்றுசடங்கதிவாசமமைந்தார்கள்.

இ-ள். அந்தமண்டபத்தில் மங்கலார்த்தமான தருப்பை மாலைகள் மாவிலைதோரணங்கள், தூண்டாவிளக்குகள்கனகசிங்காதனம் அட்டமங்கலப்பலகைத்திரள் தருப்பை குசைத்தூறு இவைமுதலான புற்கள்,நெய் பொரி பொற்பூ - வெள்ளிப்பூ-கோட்டுப்பூ-கொடிப்பூ- நீர்ப்பூ-நிலப்பூ-முதலானவை நூல்சுற்றிய பிரதானகும்பமுடன் பலகசைம்மைசூழ ஒரிராத்திரிமுழுவதும் அதிவாசகிருத்தியம் விளங்கப்பண்ணினார்கள்—எ-று. (௪)

காலைதொடங்கிநடந்துசடங்குகணித்தோதும்
வேலையின்மங்கலநீடபிடேகம்வியந்தாடி
மூலமுயங்கியமாமுடிதார்முதுவாள்பெற்றங்
கேலவிருந்தபினிட்டனராண்டொன்றிரண்டென்று.

இ-ள். உதயகாலந் துவக்கி ஓமநடந்து முடிந்தபின் சோதிஷியர்கள் எண்ணியிட்ட முகூர்த்தத்தில் மங்கலார்த்தமாய் இருக்கிற நவதீர்த்தங்களினாலே மிக அபிடேகம்பண்ணிப் பாரம்பரியமான மகத்தானமணிமகுடம் ஆத்திமாலை பழைய வீரகட்கம் இவைகளைச் சாத்தியருளினாராக இருந்தவனுக்கு கொ

டுக்கப்பெற்று அந்தமண்டபத்திலே சிங்காதனத்திலே இருந்தபின் ஆண்டொனறிரண்டென்று திருவாண்டெழுத்திட்டான்—எ-று. (கு)

சிந்தைமகிழ்ந்தெதிர்வந்தனைதன்றநயன்செய்யத்
தந்தைமகிழ்ந்துதழீஇவளராசிகடானல்கிப்
புந்தியிலங்குபுலிப்பதிகாவல்புரப்பாயென்
றந்தமின்முந்துபுலிக்கொடியங்கையகத்துய்த்து.

இ-ள். சிந்தைகளிகூர்ந்து தனனருட்புதலவுனை இரணியவன்மச் சக்கரவர்த்தி யெதிரேவந்து நமஸ்கரிக்க அருட்பிதாவாகிய வியாக்கிரபாதர் பிரியத்துடனே தழுவிக்கொண்டு பிருந்த ஆசீர்வாதஞ்செய்து அறிவுக்கறிவான வியாக்கிரபுரத்தைக்காத்தளிப்பாயாகவென்று முடிவில்லாதபழைய வெற்றிபபுலிக்கொடியையழகியகைத்தலத்திலேதிருவுளம் பற்றிகொடுத்து—எ-று.

போதுகவென்றுவலங்கொடுபுக்கருண்மிக்காடு
நாதன்முனன்மலர்சிந்திவணங்கநயந்தண்ணல்
பாதமிரண்டுமெடுத்தவன்முசசிபரிப்பித்தா
ேைதமெழுந்தெனயாவருமோகையுரைத்தார்கள்.

இ-ள். வருகவெனறு பிரதக்ஷணமாகக்கொண்டுசென்று உள்ளேபுகுந்து அருள் மிக ஆநந்தநிருத்தஞ் செய்யும் சிதம்பரநாதர் சந்நிதியிலே நலலபுட்பாஞ்சலிபண்ணிநமஸ்கரிக்கக்கற்பித்துத்தம்பிரானுர் திருப்பாதுகைஇரண்டினையுமெடுத்து இரணியவன் மன் சிரசிலே வியாக்கிரபாதமகாரிஷி தரிப்பித்தார் அப்போது சமுத்திரமுகுளித்தெழுநதாற்போலத் தேவரிஷி பூதகணமனிதர்முதலான யாவரும் பிரியவார்த்தைகள்சொன்னுர்கள்—எ-று. (எ)

ஈறில்பெருந்தனமென்னவைநின்னவைபிப்பார்மே
லாறினிலொன்றுகொளஞ்சினிலொன்றுகொளத்தாவிப்
பேறுபிறந்தடியேன்மரபோர்கள்பிழைத்தாலுங்
கூறருமன்புகொடுத்தடிமைப்பணிகொள்கென்றுன்.

இ-ள். என்னுடைய பூர்வார்ச்சிதமான முடிவில்லாத சகல ஐசுவரியமும் தேவரீருக்காகக்கடவன இந்தப்பூமியிலே ஆறிலொன்று தேவரீர் கடமை கொண்டருளும் நின்ற அஞ்சுகூறிலே யொருகூறு அடியேனுக்குஇகத்துக்குச்சீவன வுபாயமாகத் தந்தருளும் இப்பெற்றியிலேவந்து என்வமிசத்திலே பிறந்த நின்னுடைய அடியார்கள குற்றங்கள்செய்தாலும் பொறுத்தருளிச்சொல்லுதற்கு அரிதாகிய பக்தியையுண்டாக்கி அடிமைத்தொழில் கொண்டருள்வீரென்று வேண்டிக்கொண்டான்—எ-று. (அ)

அண்ணலுமவ்வகைசெய்குவமென்றருள்செயபோதிற்
கண்ணமர்தாரைகள்காரைநிகர்ப்பக்கரைவுற்றங்
கெண்ணருமின்னருளெய்தியிறைஞ்சியெழுஞ்சேயைத்
திண்ணியநன்முனிகொண்டுடையானடிசேர்வித்தான்.

இ-ள். தேவாதரும் அப்படிச் செய்வோமென்று திருவுளம்பற்றினகாலத்துப்பொருந்தினகண்ணீர்த்தாரைமழையொப்ப நீராளமாய் உருகி அவர் எண்ணரிதாகிய இனிய அருள்பெற்று நமஸ்கரித்து எழுந்திருந்து அவ்விடத்திலே நிற்கிறகுமாரனை ஞானவீரரான நல்லவியாக்கிரபாத மகாரிஷிகொண்டுசென்று ஸ்ரீமூலத்தானமுடைய தம்பிரானார் சீர்பாதங்களை அணுகுவித்தார்—எறு. (கூ)

அங்கும்வணங்கிவணக்கருமானையைமேல்கொண்டு
மங்கலமாநகர்சூழ்வரமாமுனிதானேவச்
சங்கவியங்கண்முழங்கவலங்கொடுதார்மார்பன்
பொங்கியபங்கயபூதமர்கோயிலினுட்புக்கான்.

(இ-ள்) சீர்மூலத்தானமுடைய சிவபெருமான் சந்நிதியிலே நமஸ்கரிப்பித்துப் பாகரால் வணக்கரிய மத்தகசத்தின் மேற்கொண்டு மங்கலமாய் மாதாயிருக்கிற சிதம்பரநகரைப் பிரதக்ஷிணம்வர வியாக்கிரபாதர்கற்பிக்கச் சங்கவாத்தியங்கள்முழங்க ஆத்திமாலைமார்பனான இரணியவன்மன் பிரதக்ஷிணம்வந்து கற்புமிகுந்த இராசலட்சுமியுறைகின்ற திருமாளிகைக்குள்ளேபுகுந்தான்.

தார்புனையாரணிசெம்பியனெம்பியர்தானல்கும்
பாருமதாருமதாகவெனுவணிதார்பட்டம்
போர்தருசாமரைதோரைகணீள்குடைபொற்பீடந்
தேரணிமாவயமாநிதியாதிகள்சேர்வித்தான்

(இ-ள்) தாராகத்தொடுத்த ஆத்திமாலையை அணிந்த இரணியவன்மனானவன் தம்பிமாரைஅழைத்து உங்களுக்கு நலம்பொருந்தின தேசமுங் கௌடதேசமாகக்கடவது படைவீடும் கடகமேயாகக் கடவதென்று கற்பித்து ஆபரணமும் மாலையுங்கொடுத்துப் பட்டங்கட்டிப் பொருந்திவீசும் உபயசாமரையும் பீலிக்குடை தவளச்சத்திரம் பொற்பீடந் தேர்கினா மகத்தானவாறுபோல மதஅருவி பாயும்யானைகள் குதிரைகள் பதாதிகள்முதலானவையுங் கொடுத்தான்—எ-று.

வென்றிநடந்தொழுதம்பியர்வந்தடிமேல்வீழ்வுற்
றன்றவர்சென்றபின்மன்றம்வணங்கியவன்றந்தை
முன்றொழுதந்தணர்வந்தனைமாளிகைமுற்செய்வா
னின்றருளென்றவையெங்குமிலங்கவெடுப்பித்தான்.

(இ-ள்) அந்தத்தம்பிமார் சிதம்பரநாதருடைய வெற்றிபொருந்தின ஆநந்தக்கூத்தைவணங்கி வந்து தன்னையும் வந்து நமஸ்கரித்து அனுப்பிக்கொண்டு போகத்தக்கவர்களை அனுப்பப் போனபின் சிதம்பரமூர்த்தியினுடைய சேவைபண்ணின இரணியவன்மனானவன் தன்னுடையபிதாவாகிய வியாக்கிரபாதரை முன்தொழுது தில்லைவாழந்தணரை யவரவர் திருமாளிகையிலே சென்று நமஸ்கரித்துத்திருமாளிகைகளுங்கட்டுகிறதற்குத்திருவுளம்பற்றுமென்று அரு

ஞானு பெற்றுககொண்டுவநது எவ்விடத்தும் விளங்க மூவாயிரந திருமாளி கை கட்டிமுடிக்கத் தொடங்கினன்—எ-று. (௧௨)

ஏழ்நிலைமாளிகைசூளிகைசாளரமேரார்சீர்
வாழ்மதிற்றோரணவாயில்கடேர்ணிமாவீதி
சூழ்வுறமேருவினேர்பலகோலியசோழேசன்
ருழ்வுடன்மாதவர்யாரையுநீள்குடிசார்வித்தான்.

(இ-ள்) எழுநிலைமாளிகையாகச்சமைத்து மகுடங்கள்வைத்துப் பலகணி வைத்து அழகுநிறைநத மதில வாழ்வு பெறப்பண்ணி நிலைத்தோரணம்பொரு நதினவாசல்கள் நிலைத்தோநிறைந்தபெரிய திருவீதிகள் சுற்றும்பொருந்த இப் படி மகாமேருவையொத்த திருமாளிகைகட்டின இரணியவன்மச் சக்கரவர் த்தி தாழ்ச்சியுடனே மகாதபசுகளையுடைய திருவுடைய அந்தணரை யெல்லா ரையுங் குடியேற்றுவித்தான்—எ-று. (௧௩)

இற்றகுபண்டமிலங்கநிலங்களையேய்வித்து
மற்றவர்தம்மிலொருத்தனிருத்தமகிழ்ந்தாடும்
பற்றறுசின்மயவம்பரமும்பர்பரிந்தாகம்
பெற்றபயன்றிருவம்பலமொன்றுசெயப்பெற்ருன்.

(இ-ள்) இல்வாழ்க்கைக்குவேண்டத்தக்க பதார்த்தபண்டங்கொடுக்கும்ப டி நிலங்களுண்டாக்கிக் கொடுத்து அந்தநதிருவுடையந்தணருக குள்ளே ஒரு வரான சிதம்பரநாதர் நிருத்தஞ்செய்யும் பசுபாசஞானத்தால் அறியப்படாத ஞா னமயமாகிய அம்பலத்தைத் தேவாகள் ஆதரததுடனே பெற்ற பிரயோசன மாக ஒப்பற்ற பொன்னம்பலத்தைத் தானுந் திருப்பணிசெய்யபபெற்ருன். ()

பொன்னணிமாநவமாமணியாதிபொருப்பாக
முன்னாகொணர்ந்துகுவித்தருள்பெற்றமுனிசசெல்வன்
றன்னிசைவோடுயர்வானவர்கம்மியர்தம்மைக்கொண்
டுன்னருமம்பலமொன்றுசமைத்தணியொப்பித்து.

(இ-ள்.) சுவர்ணம் ஆபரணம் மகத்தான நவரத்தினமுதலானவெல்லாம்மலை போலே முன்னேகொண்டுவந்து குவித்துத் தம்பிரானுர் திருவருள்பெற்ற வி யாக்கிரபாதர் அநுமதியுடனே பெரியதெய்வத்தச்சனைக்கொண்டு மனத்துக்கு எட்டாத ஒப்பற்ற அம்பலமொன்று சமைத்து அழகுபெற அலங்கரித்து-எ-று.

காணவிலக்கவொழுங்கணிவித்தவைகைக்கொண்டு
பூணுமணிக்குறடொத்ததளத்தியல்பொற்பாரத்
தூணிரையுத்திரநற்பலகைத்திரடொல்சேர்வைக்
கோணமர்கைத்தொகைமுசசியணைத்தணிகொள்வித்து.

(இ-ள) கன்னியமென்றும் போதராணமென்றும் இரண்டுவகையாகச் சொ ல்லும இவைகளில கன்னியத்தின் வகைப்படியிலே புயாநாதித் தூபியந்தமா

ள உயரத்தைக் கண்ணியத்திலே இத்தனை அங்குலமின்னவவயவமென்று கற்பி த்துக்கொண்ட பட்டோலைசெய்து கையிலேபிடித்துக்கொண்டு அதிட்டானவ சத்தாலே அதிட்டானத்துக்குப் பொருந்த உட்பீடமென்கிற பணியை இரத் தினங்களினாலே செய்து அதிட்டானத்துக்குச் சொன்ன கூற்றிலே அதிட் டானம்பன் மணிகளாலேபண்ணிஅதிட்டானம்பண்ணிமுடிந்தவிடத்திலே பொ ற்பலகையாக நன்றாகத் தளமிசைத்து இதின்மேற்றூணுக்குச்சொன்ன கூற் றிலேபிரமகாந்தம்விஷ்ணுகாந்தம்-உருத்திரகாந்தம்-சூரியகாந்தம் - சூரியகண்டு பேதம்-சந்திரகாந்தம்-வியாளபாதம்-அத்திபாதம்-சிங்கபாதம்- இவைமுதலாயு ள்ள பலதூண்களைப்பற்றி யடைவேநிறுத்திப் பலவகைப்போதிகையுமுட்பட நிறுத்திப் பிரஸ்தாரத்திற் சொன்னகண்ணியத்திலே யுத்திரத்தினவயவங்களுக் கங்க போதத்தினவயவங்களுங் கூடப்பலகாற்சாதனம்பண்ணி வித்தார்த்திலங் கிசத்தில்அங்கிசவழியிலே கைக்குளீளங்கொண்டு இநதக் கையழகுபொருந்த வக்கிரமாகவெட்டி முகந்தாயதே சேர்ப்பித்து இதுக்குஅக்கிரத்துக்குஅணித்தா கச் சநதிரகாந்தத்திலே யதனைப்பலகாற் சாதனம் பண்ணுவித்து இதின்மேலே தூபிக்குசசொன்ன அங்கிஷத்தாலேதூபிப்பிரதிஷ்டைபண்ணினான்—எ-று.()

பன்மணிமாலைகள்கொண்டணிதொங்கல்பயிற்றிச்சூழ்
பொன்மலிமுன்மதில்கோபுரவரயில்பொருந்தசசெய்
தென்மலமங்கவருங்கருமூலவிறைக்கும்பொற்
றன்மயமாமொளிராலயமொன்றுசமைப்பித்தான்

(இ-ள்) பல இரத்தினமாலைகளைக்கொண்டு அழகுபெற நிரைகூறக்க நா ற்றிப் பிரதமாவரணமுதலானபொன்மதில்களும் அந்தமதில்களில்கோபுரங்க ள்பிரதிபந்தம் பாதபந்தம்பாதம் போதம் முகமாலைபக்கசாலை கூடம் பஞ் சரம் அந்தராளம் கும்பலதைவிருத்தசூடிதம் தோரணம் கண்டம் வேதிகைசிக ரம் பூரணகும்பம் தூபி இந்தவகைப் பொற்சொரூபமாகவாசல்கடோறும் விதி ப்படிப்பொருநதச்செய்து பசுபாசஞானங்கள்நீங்கத் தோன்றி அருளின்கரு மூலகாரணனென்கிற திருநாமத்தையுடையரான ஸ்ரீமூலத்தானமுடைய தம்பி ரானுக்கும் ஞானமயமான கனகாலயம் ஒப்பறககற்பித்தான்—எ-று. (கஎ)

வேறு.

இன்னவகைதிருப்பணிகள்பலவுஞ்செய்தவிரணியவன்மனைமு
னிவாயாருமேத்திப், பன்னரியபுகழ்கூறிநீறுசாத்திப்பரங்கலைவழிவ
ழிபாடதற்குபபல்க, மன்னுவகையினினிவந்தவகுப்புநாதன்வைத்த
பணியெனமுனிவரையுவணங்கிவாழ்த்திச், சென்னியிலஞ் சலிசெயதி
ங்களித்ததன்மேருதிருந்துதவமெனகமெகன்மூன்செங்கோன்மன்னன்.

(இ-ள்) இநதப்பிரகாரம் கனகமயமாகப பஞ்சவருணத்துக் குட்பட்ட திருச்சிற்றம்பலம் ஈசுவரி ஆலயம் புண்டரீகபுட்கரணி மற்றுமுள்ளமண் டபங்களும் ஆவரணத்துக்குப் புறத்தில் வியாக்கிரபாத பதஞ்சலி பூதப் பசாச

காள் மூவாயிரவர் பிரமதேவர்களாற் குவிக்கபபட்ட சிவலிங்கமூர்த்திகளுக்கு ஆலயமுதலான மண்டபங்கள் கோபுரமதில்கள் முதலானதிருப்பணிகள் பலவிதமாகச்செய்வித்த இரணியவன்மசக்கரவர்த்தியை ரிஷிகளெல்லாரும் புகழ்ந்துஆசிர்வாதஞ்சொல்லித் திருநீறுசார்த்தி விரிந்தஆகமங்களில் நித்தியபூசைக்குச்சொன்ன பத்தியின் கட்டளைப்படித் தம்பிரானர் அருளிச்செய்தபடி யென்று வியாக்கிரபாதராநுக்கிரகிக்க அவரைநமஸ்கரித்துத் துதித்து முகத்தாவிலே யஞ்சலியத்தனாய்த் தேவரீர் கற்பித்ததன்றோ அடியேனுக்குக் குற்றமற்றதபசென்று இரணியவன்மன்சொன்னான்—எ-று. (க௭)

இத்தகையமுனிவருடனொருநாண்மன்னனிலங்கியபேரம்பலத்தினிருந்துநூலின், வைத்தமுறையிறைவற்குமஞ்சனத்தூய் மலரமுதுமுதலானமல்கவைத்து, நித்தவிழாவெழவேண்டுஞ்செல்வகல்கிலவுபதஞ்சலிமுனியாணிறுத்துவித்த, புத்தகமின் புறமுனிவர் யானையேற்றிப்பொற்கோயில்வலங்கொண்டுபுகுவித்தார்கள்.

(இ-ள்) இப்படிமகத்தான வியாக்கிரபாதர் பதஞ்சலிமூவாயிரவர் முதலான ரிஷிகளுடனே இரணியவன்மனொருநாள் அப்பேரம்பலத்திலிருந்து பூசாபத்தியிற்சொன்ன கிரமத்திலே தம்பிரானர்க்குத் திருமஞ்சனந் திருப்பள்ளித்தாமம் நைவேத்தியமுதலானவை குறைவறக்கற்பித்து நித்தியோச்சவம் நடத்துவதற்கு வேண்டியவெல்லாம் கட்டளைசெய்வித்துக் கொடுத்துப்பிரசித்தரான பதஞ்சலிமகாரிஷியினாலே சங்கிக்கப்பட்ட சித்தாந்த இரத்நாவலியென்கிற ஆகமஏட்டை யதிப்பிரியத்துடனே ரிஷிகளெல்லாரும் யானைப்பிடரியின்மீது வைத்துப் பொற்கோயிலைப் பிரதக்ஷணமாக வருவித்துள்ளேபுகுவித்தார்கள்—எ-று. (க௮)

மனங்குளிரவன்னவர்கள்பின்னுமுன்னான் மருவியநைமித்திகங்கள்வகுப்பான்மாதத்,தினங்கடொறுமுணர்ந்துமதுமாதமேவத்திருந்துதமநகவிதியைச்செலுத்துமுன்னு, வனங்கனதுவளநகரமனையுங்காலையங்நகர்போன் மன்னவனிங் கமைக்க வென்ன, வினங்கொளிருஞ்சனங்கள்பணிந்தின்பமெய்தியெந்தைதிருவசந்தவிழா வெழுவித்தார்கள்.

(இ-ள்) இரணியவன்மன் சித்தங்களிகூர இதுவுமன்றி அந்தரிஷிகள் அந்த ஆகமத்திற்பொருந்தின நைமித்தியங்கள் வகுப்பறுக்கும்படிக்கு மாதம் நக்ஷத்திரங்களினடைவே மாதபூசைவிசாரித்துச் சித்திரைமாதம்பொருந்தக் குற்றமற்ற தமநகவிதியாகியகொழுந்துசார்த்துங்கிரியையை முடிதற்கு முன்னு கக்காமராசன் தனதான பட்டினபிரவேசம்பண்ணுகிறகாலத்தில் அந்தப்பட்டினத்தின் சவுபாக்கியம்போல இந்தநகரியையு மிராசாவே யலங்கரிப்பாயாகவென்று ரிஷிகள்கறபிக்க இராசாவுக்கு இஷ்டமானபிரமதமனுஷசியர் நமஸ்கரித்துச் சித்தங்களிகூர்ந்து தம்பிரானருடைய வசந்தோற்சவம் மிகவும்நடத்துவித்தார்கள். (உ0)

விரிந்தபுதுப் புனல்விளையாட்டாடிமாதம்விரவுதிருவாண்டெழு த்துவிழவுமோங்கப், பொருந்தும்வகைபுரிந்தாடிபுரட்டாதிக்குட்புக ழ்பதினன்கட்டமிகளொன்றிற்பூசை, தருந்தகுதிமிகுதிகுறைதவறு நீங்கத்தந்துநவந் தருபந்தர் சமைத்தியாகம், பரந்தவிரதாங்கமுட ன்பவித்திரத்தைபயில்வித்தைப்பசிப்பூரப்பரிசமைத்தார்.

இ-ள். பரந்தபுதுப்புனல் விளையாட்டு ஆடிமாதத்திலேகூடத் திருவாண் டெழுத்திட்டுத் திருநாளும்விளங்கப்பொருந்த நடத்தமுடித்து ஆடி முதல் புரட்டாசிக் குட்படக்கற்பித்துச் சதுர்த்தசியிலாவது அட்டமியிலாவது ஒன் றிலொன்றிலே நித்திய பூசைக்குக் கற்பித்தபடியில ஏற்றக் குறைச்சலறக் குற்றந்தீர முன்னூலொருநூலான ஒன்பதுநூலான இருபத்தேழிழையாலே பந்துமாலையாகப்பண்ணி அங்குரார்ப்பனம் மண்டபபூசையா கெச்சுனை வே திகார்ச்சனை அக்கினிகாரியம் ஸ்தாலிபாகம் பவுத்திராதிவாசம் வினியோகம் சயனம் பிரார்த்தானம் மண்டபபூசை அக்கினிகாரியமுதலாகவிரிந்த பவுத் திரவுதாங்கத்துடனே பவுத்திரஞ்சார்த்தி ஐப்பசிபூரத் திருநாளைக்குக்கட்ட ளைபண்ணுவித்தான்—எ-று. (உக)

அந்தமிலெண்ணான்கறமுந்திருக்கண்சாத்தியவற்றின்மிகத்தனி த்தென்னையாண்டவன்னை, யெந்தைபிரான்மைந்தர்களோடெழுசசி கொள்ளவெழுந்தருளிவருந்திருநோன்பியையவைத்துச், சிந்தையி ன்மாலயனணவெழுந்தசெந்தீத் * திரளுருவண்ணலைநோக்கித் ◦ திக ழ்கணங்கள், வந்தெவையுமழலாகமல் கல்போலும்வளங்கொடிருவி ளக்கீடுவிளங்கவைத்தார்.

இ-ள். முடிவில்லாத முப்பத்திரண்டறமுந் திருக்கண்சார்த்தியருளி அ ந்த முப்பத்திரண்டறத்திலும் பார்க்க மிகுதியாக என்னைத் தனியே ஆண்டு கொண்டருளிய உலோகமாதாவாகிய சிவகாமசுந்தரி முன்னும் செகற்பிதா வாகிய சிதம்பரமூர்த்தி பின்னும் விநாயகர் சுப்பிரமண்ணியர் யவர்க்குப் பின்னுமாகத் தண்டுசார்த்தி யெழுந்தருளிவருகிற திருப்பூரத்திருநாள் நடத்தி வித்துப் பிரமாவிஷ்ணுக்கள் மனதின் அகங்காரங்கள்கீழ்ப்பட மேலிட்ட தழற் பிழம்பான சோதிலிங்கத்தைத் தியானித்துவந்த கணங்களெல்லாம் அந்தத்தழ ல்வடிவுபெற்றுச் சோதிலிங்கத்திலொத்த வளவை பொருந்திய தீபோற்சவ த்தை விளங்க நடத்தினன்—எ-று. (உஉ)

மார்கழியாதிரைநாளின் முனிவரொல்லாம்வந்துதடம்படிந்து பொதுவணங்கிவாழ்த்திப், பார்தருமாதொழுதகன்றார்முன்னமெ ன்றுபன்னமுனி மன்னவனீர்பயிற்றுமிந்நச், சீர்தருமாதினமென் னத்தில்லைவாழுந்திருவுடையந்தணரெந்தைதிருநாளென்று, சார்தரு மாகவதீர்த்தநீத்தங்கொண்டுதெஞ்சனமஞ் சனவிழவுதருவித்தார்கள்.

---

* திரளுருவண்ணலென்பது சொக்கப்பனை ◦ திகழ்கணங்களென்பது திருக்கோயினிறையவிட்ட திருவிளக்கு.

இ-ள். திரு மார்கழித்திருவாதிரை நக்ஷத்திரத்திலே ரிஷிகளெல்லாரும் வந்து சிவகங்கையிலே ஸ்நாநஞ்செய்து சிதம்பரசேவைபண்ணி தோத்திரஞ்செய்து பூமியிலே அட்டாங்கமாக நமஸ்கரித்து முத்தராய்ப் போனார்கள் முன்னாளிலே என்று வியாக்கிரபாதர்சொல்ல இரணியவன்மச் சக்கரவர்த்தியானவன் நீங்களிந்தத் திருநாளைவிதிப்படியே நடத்துங்களென்றுசொல்லத் தில்லைவாழுந் திருவுடையந்தணர்கள் யாரும் எம்முடைய தம்பிரானார் திருநக்ஷத்திரம் என்று பிரியப்பட்டுக்கொண்டு தந்தமுடைய பாவங்கள் போகவந்து சிவகங்கைபணிந்து சிதம்பரக்ஷேத்திரத்திலுண்டான நவதீர்த்தமும் அதுநீங்கலாகமற்றுமுண்டாகிய எண்ணிறந்த தீர்த்தவெள்ளமெல்லாமுங்கொண்டு அருளின தண்ணளிபோன்ற திருமஞ்சனத் திருநாள் நடத்தினார்கள்—எ-று.

இதில் சிதம்பரத்தில் தீர்த்தங்களுக்குவகை பாம்போடை புலிவாவி நந்தன் குட்டம் பாலைமான் சிவகங்கை பந்தன்கேணி தென்புனல்சேர்கொள்ளிடம் சீர்மணிமுத்தாறு திரைஅலைக்குய்யமிவை முதலாயுள்ளவாம்,பயிலுவனவாவியாவுந்தில்லை அம்பலத்தைச்சூழ்த லயன்மாலொக்கும் பூம்புனல்சேர் புண்டரிகப்பொய்கைமன்றிற் புனிதன்அருளெனப்புலவர் புகன்றுரொன்றே என்பதனாற் கண்டுகொள்க. (உ௲)

போனகமால்வரைபோன்மா நிவேதனத்தைப்பொருந்தியதைப்பூசத்திற்புணர்வித்தேத்தி, யீனமிலாமுனியுரசன்றன்னைநோக்கியிமையவர்களனைவரும்வந் தேத்திவாழ்த்து, மானியென வருமாண்டிலானிமாதத்தருள்விரவுத்திரத்தினம்வந் தனுகிற்றென்னத், தேனகுதாரணிமன்ன னிறைஞ்சியானித் திருநாளிங் கெழுவிழவு செய்கவென்றான்.

இ-ள். சோற்றுமலைபோல மகத்தான நிவேதனமாகிய திருப்பாவாடையைத் தைமாதத்திற் பொருந்தினபூசத்திலே விதிப்படிபொருந்த அமுதுசெய்யப்பண்ணித் துதித்துக் குறைவற்ற தவத்தையுடைய வியாக்கிரபாதர் இரணியவன்மனைப்பார்த்துத் தேவர்கள் எல்லாரும் பூலோகத்திலேவந்து நமஸ்கரித்துத் தோத்திரஞ்செய்யும் ஆனிமாதத்திலே யாயிருக்கும் மாதோகலைவம் என்னத்தக்கதாக மற்றவருஷத்தில் அருள்பொருந்துந் திரு வானியுத்திரம் வந்தணித்தானதென்றுசொல்ல வண்டுமகிழும் ஆத்திமாலையையுடைய இரணியவன்மச் சக்கரவர்த்தி வியாக்கிரபாதரை நமஸ்கரித்துவந்து ஆனித்திருநாளில் இரதோற்சவமிந்தத் திருப்படைவீட்டுக்கொழிந்தில்லையெனத்தக்கதாக நடத்துங்கள் என்று பிரதானமந்திரிகளோடே சொன்னான்—எ-று. (உ௯)

தாரும்பாருந்தரித்ததடந்தோளானுந்நாவிலருமுனிவர்களுந்தலைவன்முன்னின், றீரொன்பான்முதலானவோரொன்பானுளெந்தைபிரான் றிருவெழுச்சி யின்பமெய்த, வாரும்பாருள்ளோரும்வானுள்ளோருமாலயனுமேலவருமலங்கணீங்கி. யாரும்பாதம்பணிதற்கென்றுவாயிலிலங்கவிடைக்கொடிவலங்கொண்டேற்றுவித்தார்.

இ-ள். ஆத்திமாலையையும் பூமியையுந்தரித்த புயத்தையுடைய் இரணிய வன்மச் சக்கரவர்த்தியும் குற்றமில்லாத மகாரிஷிகளும் ஆத்மநாயகரான சிதம்பரநாதர் முன்னின்று பதினெட்டுநாள் முதலான ஒன்பதுநாளாகிய இருபத்தேழுநாளும் என்னுடைய பிதாவாகிய தம்பிரானார் திருநாள்தொழுதுகண்க்ளிகூர வாருங்கள் பூமியிலுண்டான மனுஷரும் சுவர்க்கத்திலுண்டான தேவர்களும் பிரமரிஷிகளும் உருத்திர மகேசுராதிகளும் உங்கள் பாசங்கள் நீங்கி யெல்லாரும் தம்பிரானார் சீர்பாதசேவை பண்ணுதற்கென்று பேரிகைதாடன முதலான தேவதாவாகனத்தைப்பண்ணி இடபக்கொடியைப் பிரதக்ஷணமாகக் கொண்டுவந்து ஏற்றுவித்தார்கள்—எ-று. (உ௫)

மண்ணுலகினுண்ணிறைந்தமைந்தர்மாதர்வானவர்களர மகளிர் மற்றுள்ளோரு, மெண்ணரியமகிழ்ச்சியுடன் றிசைகடோறுமெய்து வார்வெய்தகு கோயிரித்தோமென்பார், கண்ணிறைபொற்கோபுரங் கைதொழுதுவீழ்வார் கனகமயத்திருவீதிகண்டுவாழ்வா, ரண்ணல் பொதுப்பணிந் தயர்வார்நடமுன்போற்றி யாடுவார் பாடுவாராயினார்கள்.

இ-ள். பூலோகத்தில் ஸ்திரீபுருஷர்களாயுள்ளவர்களும் தேவலோகத்திலுள்ள தேவர்களும் தெய்வ ஸ்திரீகளும் மகேசுராதிகளும் எண்ணரிதான பிரியத்தோடும் பத்துத்திசையிலும்வந்து பொருந்தவார் சநகலியாதியைத்துறந்தோமென்பார் காட்சிக்குநிறைந்த பொற்கோபுரங்களைச்கும்பிட்டு நமஸ்கரிப்பார் பொன்மயமான திருவீதிகளைக்கண்டு பெருவாழ்வுபெற்றுவாழ்வார்தம்பிரானைச்சிதம்பரத்தை நமஸ்கரித்துத் தம்மை மறநதுநிற்பார் ஆநந்தநிருத்தத்தைக் கண்டுதுதித்து ஆநந்தபரவசரா யாடுவாரும் பாடுவாரு மாயினார்கள்—எ-று.

வேறு.

இப்பெற்றியில்வருமெத்திக்கினருமி தெம்மிற்றகுவெனநம்மிற் றுத், துய்ப்பொய்ப்பிறவிக டெய்த்தற்கெனமகிழ் துணிவால்வருபவ ரணிவாழத், தப்பற்றுயர்தவமூவாயிரவர்கடாவாமறையொடுதேவா ரக், கைப்பற்றியபணிமுற்றப்புலிமுனி கழலான்விழவெழுதொழில் செய்வான்.

இ-ள். இந்தப்பேறுபெறும் எல்லாத்திசையிலுள்ளோரும் இந்தப் பாக்கியம் பசுபாசஞான நீங்கினவர்களுக்கல்லோ கிடைக்குமென்று அகங்காரங்களைநீங்கித் திரப்புசித்துத் தொலைக்கவேண்டின சஞ்சிதாதிகளில்தோற்றம் நஷ்டமிடுதற்கு நிச்சயமென்று வருகிறவடியார் நிறைவாழ்வுபெற விச்சின்னமில்லாத பெரியதபசுகளையுடையரான மூவாயிரவர் ஒழியாத வைதிக சைவமந்திரங்களுடனே சோடசஉபசாரமுதலான பூசைக்குவேண்டினவைகள் சேரவியாக்கிரபாத மகாரிஷி பாதபத்தரான இரணியவன்மன் மாதோற்சவத்துக்குத்தக்க திருநாட்படிகளைச் சோடிப்பான்—எ-று. (உ௭)

நண்ணித் தினகரன் முதலோர் கிழமைகொணலமார்நவமணிய ணிமேவப், பண்ணிப்பரிகல்முதலாயினபகர்திருவாசிகையரிபயில்பீ டம், விண்ணிற் றிகழ்தரு மகரத்தொழிலின விரிவெண்குடையிடை கொடியென்றென், றண்ணற்குரியனவெண்ணற்கரியனவம்பொற்ப டிதிருமுன்புய்த்தார்.

இ-ள். விதிப்படிக்குப்பொருந்த நாயிற்றுக்கிழமைமுதலானஏழுவாரத்துக் கும் மாணிக்கம் முத்துப் பவளம் மரகதம் புட்பராகம் வயிரம்இந்திரநீலம் கோ மேதகம் வைடூயம் இந்த இரத்தினம் ஏழு கிழமைசகுமாகவும் எண்ணிறந்த திருவாபரணம்அநந்தநவாரப்படியாகப் பண்ணிப் பரிகல முதலானவைகளும் சுடர்ததிருவாசிகை வட்டபூச் சத்திரப்பூமுதலாகச்சொல்லுந் திருவாசிகை களும்வீரசிங்காதனங்களும் ஆகாசத்தில் விளங்கும் மகரத்தொழிலையுடைய கொ டிவிரிந்தவெண்கொற்றககுடை நடுவேபொருநதுங் கொடிகள் என்றென்று வெகுவிதமாகச்சொல்லபபட்ட பரமசிவத்துக்குரியனவும் எண்ணுதற்கரியன வமாகிய சத்திரசாமரங்க ளெண்ணிறந்தன பொற்படியாகப் பண்ணுவித்து ச் சந்நிதியிலே கொண்டுவநது குவித்தார்—எ-று. (உ௯)

கடமாறெனவுமிழகளியானையினணிகதிர்மாமணிநிலை தருதேர் முற், றிடமாய நடைபெறு வடமால்வரைபுரைசிலதேர்கவரியினிரை தோரை, மிடைவான்முகிறெறுடுகொடியாடைகள்விட விழியாரிசைவ ளர்மொழியார்பொற், படகாதிகணட மிடுவாரொலிகடல்பலவாமெ னநனிபயில்வித்தார்.

இ-ள். மதங்க ளாற்றுக்கால்போல ஊறிவருமத்தகசங்களின் நிரைகள் ஒ ளிபொருநதின திவ்வியரத்தினங்களினாலே பண்ணப்பட்ட நிலைத்தேர்முன் னேதிடமாகநடக்குந தொழிலைப்பெற்ற பெரிய மகாமேருவையொப்பான சில தேர்கள் சாமரநிரைகள்-பீலிக்குடைகள-நெருங்கி யுயர்ந்து மேகங்களையளா வின துகிற்பதாகைகள் ஆலாலம்போனற விழியார் சங்கீதம்பொருநதி வ ரும் வார்த்தைபுடையவர்கள் பொலிவினை யுடைத்தாகிய படகாதி வாத் தியகாரர் நிருத்தமாடுவார்களா லுண்டாகபபட்ட ஆரவாரம் அநேககட ல்போல மிகப்பண்ணுவித்தார்—எ-று. (உக)

மேவும்பர்கண்மிடைமகுடஞ்சொரிமணி விலகிப்பொலிதிருவ லகிட்டுத், தூவண்புனன்மதுமலாவெண்பொரிநனி துதைவித்தெழி ன்மறுகுயர்தெற்றி, பாவுந்துகில்பொதியுறவங்கமுதணிபல்கும்பமு நிலைவளர்செம்பொற், றீபங்களுமலி தாமங்கலவணி திகழத்திசை தொறுநிகழ்வித்து.

இ-ள். இரதோற்சவத்துத் திருவீதியில் வந்துபொருந்துந் தேவர்கள்நெ ருக்கத்தினாலே உதிர்நத மகுடரத்தினங்களை யிருமருங்குந்தள்ளி நன்றாகத் திருவலகினாலே திருவலகிட்டுச் சுத்தஞ்செய்தியாகசலங்களினாலே இடை

யறத்தெளித்துப் பரிமளபுட்பங்கள் வெண்பொரிக ளிவைகளினாலே மிகவு நிறைத்துஅழகுபொருந்திய திருவீதியி லவரவாவாயில்தோறு 'மிட்டவுயர்ந்த வேதிகையிற்பொருந்தினகாவணத்தில் அஸ்தரபரிவேஷிதமாய்ச சலபூரிதமா ன பலபூரணகும்பங்களும, நிலைபொருந்தின பொற்குத்துவிளக்குகளுமதில் விளங்குந் தீபங்களும்வளமைதர இபபடிச்சொல்லப்பட்ட மங்கலாத்தமான வை யெல்லாமொளிசிறக்க நாலுவீதிகடோறுஞ் செய்வித்து—எ-று. (ருO).

பொறபாலிகைமுளைபொலிவித்தளவறு களபப்புதுவிரைமெ ழுகிச்சீ, ரிற்பார்மணவலனிதரவாயில்கள்கமுகோரா கதலிகள்சோவி த்து, வெற்பாமெனமுகில்வரவாரணநிரை வெருவாவெதிரபொரு கரமானக், கற்பாவியநெடுநிலைமாளிகைமணிகட்டாவளர்கொடி வி டடார்கள்.

இ-ள். பொறபாலிகைகளிலே யங்குராப்பணம்பண்ணி அளவிறந்த சந் தனகஸ்தூரி கர்பபூரமிருகம தாதிகளினாலே மெழுகிச்சீர்விளஙகும் இவ்விட ங்கள்தோறும கலியாணவொழுஙகுசிறக்க எழுநிலைமாளிகை வாயில்கள்தோ றும் கமுகும் வாழையும் அழகுபெறநாட்டி மலையெனறுசொல்லி மேகம்படி யவரப பயப்படாமல் எதிரப்பட்டு யானைகளது துதிக்கையினால் தள்ளியும் வீசியும்அடித்தும்பிடிததும்பொருமாறுபோல நவரத்தின வொளிபரநத நெடு நிலை மாளிகைகள்தோறும் நீளிய கொடிகளினாலே மணிகளைக்கட்டிப்பறக்க விட்டாாகள்—எ-று. (ருக)

இடமால்வரைநிரைகணநாதர்களுடனிறையாமெனவெழுநிலைநீடு மடமானவைதொறுமதிமர்சுணநதிமருவாவளர்சடையினர்பாதத் தடைவார்வடகலைதொடாவார்திருவமுதடுவாரடுவனவடைவாவைத் திடுவாரரகரவிடுவார்வரவரவெண்டானறவெதிர்கொண்டார்கள்.

இ-ள். இடமாகிய பெரியகயிலாசத்தி லெழுநதருளியிருக்கிற ஸ்ரீகண்ட பரமேசுரரும் அவரைச்சேவித்திருக்கிற கணநாதர்களும்போலவெழுநிலையுயர் ந்த வெழுநூறுமடங்கள்தோறும சநதிரன்சர்பபம் கங்கைபொருந்தாத நீண் டசடாதாரிகளும் அவாகளை நமஸ்கரிக்கிறவர்களும் ஆகமசாஸ்திரம்படிக்கிற வர்களும் திருவமுதுசமைக்குமவரும் சமைத்தவமுதைப் பந்திவைத்துபப டைபபாருமானஇவர்கள் அர கர வென்றுவரு மெண்ணிறநதபேர்களை வாரு ங்களென்று எதிர்கொண்டு நிறபார்களாயினார்—எ-று. (ருஉ)

விண்ணோர்வனிதையர்மகவான்முனிவர்கள்விரிபாரிடமிருகண நாதர், மண்ணோரொனவுருவினராய்வழிபட மதமாகயமுகன்முதனை ளோ, ரெண்ணாளவறுகனிபான்முதலியவிசைவித்தவையவன்மிசை வித்துப், பண்ணேடியன்மொழியவளோடிறைதருபரவும்பவனிகள் பயில்வித்தார்.

இ-ள். தேவமாதாகள் இந்திரன் ரிஷிகள் பூதங்கள் மிகுந்தகணநாதர்கள் இவர்களெல்லாரும் மனுஷவேடத்தைக்கொண்டுதிருநாளில்வழியம்பண்ண மதமார்ந்தவேழ முகவிக்கினேசுரருக்கு ஒவ்வொன்றெண்ணிறந்த முப்பழம் திரட்டுப்பால் பணியாரமுதலான அவலோடுகூட்டி முதல்திருநாளி ல முதுசெய்யபபண்ணிப் பண்ணுடனேபொருந்தினதிருவார்த்தையையுடைய சிவகாமசவுந்தரி அம்மையுடன் தேவராசனைதம்பிரானுமெல்லாரும் பரவக்காட்சிதந்தருளுந் திருப்பவனிகள் நாள்தோறும்விருஷயாகம்துவசாரோகணம் பேரிதாடனம் அங்குரார்ப்பணம் யாகசாலை அஸ்திரயாகம் பெரிதானமயாகக்கிரமம் பரிவேடம் நீராசநம் கவுத்துகபந்தனம் தீர்த்தசங்கிரகணம் சூரணோற்சவம் தீர்த்தத் துவசாரோகணம் தபனம் ஆனவப் பதிறைங்கம்முன்னடந்தவங்கம் நீங்கலான அங்கங்களும் சிறக்க ஆயுதபாணியர் குதிரையணியாகவும், அதன்பின யானையணியாகவும், அதன்பின்பு பசுபதாக்களாகவும், அவர்பின் மகாவிரதராகவும், மகாசைவராகவும அவர்பின்பிராமணராகவும் ,அவர்பின்தேவர்களான சோடசபத்நதியி லுளளவாகளாகவும் அவா பினகணபதி சுப்பிரமணியராகவும்,அவர்பின்உருத்திரகணிகையராகவும்,அவர்பின்காயகராகவும் அவா பின்நிருத்தகாரராகவும, அவா பினமத்தளாதி வாத்தியகாரராகவும், விதிபபடியே யணிவகுத்து இந்தஅணிக்குப்பின்பாகத் தம்பிரானுர் பாரவதிசகிதராக எழுந்தருளவும் தம்பிரானைச்சூழத் திக்குப்பாலர்களும், ஆயுதமூர்த்திகளும்,சேவித்துவரவும்,வியாக்கிரபாத பதஞ்சலிமுனிமுதலாயுள்ள ரிஷிகள் திருபபுறக்கொடைசேவிக்கவும், தக்க திருநாளைநடத்துவித்தார்—

செழுவான்மதிபுனைபவனுணியிலவரு திருநாள்விழவெழுபொருதாரத், தொழுவார்பிறிவருநிலையாணினைவொருதுணிவான்மொழியொருபொருடோயவற், றெழலாலழிவுறுதொழிலாலவிழிமழைபிசைவாலிருபயனிலதாவுற, றழியாதகமலிகசிவாலருளை யடைந்தாரினையர்மிடைந்தாகள.

இ-ள். வளமைநீட்டித்த சநதிரசேசரனை திருவம்பலமுடைய தம்பிரானுர் ஆனித்திருநாளி லெழுந்தருளிப புறப்பட்டவவதாத்திலே அநுபவிக்கமான பரமாநந்தசுசத்தை வெளிபபடக் கண்ணாரக் கண்டுதொழுவார் எண்ணிறநதபேர் இரண்டற்றநிலையிலுலே அந்நியமின்றி யொருணர்வாதலால்வாசனையாற்பண்ணுகிற தோசதிரங்களுக்குச் சுட்டில்லாதபடியாலேயொருபொருளிறபொருந்தாமல தழுதழுத்தலால பிரதக்ஷிணசமஸ்காராதி கன்மங்களு நழுவுதலால் கண்ணீாமழைத்தாரை கொளளுதலால் இதவஹிதமில்லாத படியிலுலே யொன்றைபபற்றி மயங்காமல் ஞாநாநந்தங்களிபபிலுலே அருளாகமானமுத்நாந்தமாச்க ராநதங்கோடிபோ நெருங்கிச்சேவித்தார்கள்—எ-று.

மன்றுடையதிருநடராசனதுயர்மணிமாளிகைவெளிவளர்வானிறு குன்றுவிரன்மணிமுடி வானவாணிகுழுமானுடர்திரளொடு நெடு நின்றுலெனவகினயமேவியவுருநேசத்தவாவர்பாசத்தே, சொன்று யிரிழுலெழுமொளிமேனியிலெனவுயருத்திரவிழவயர்வுற்றா.

இ-ள். மன்றிலாடியருளிய நிருத்தராசருடைய பெரியதிருமாளிகையின் உள்ளாகிவெளியிலே உயர்ந்த சுவாகத்தில் குறையாத வீரத்தன்மையையுடைய மணிமுடிவானவரது திரட்சியான மிகுந்த மக்கட்கூட்டத்துடனே கூடி தங்களிடத்துத் தேசோரூபத்திலே இவர் ரட்சியாவண்ணம் பிரதிபலிக்கின்றதுபோலவும் தம்பிரானார்சாத்திக்கழித்த சாந்துதரித்தவடிவுடையபத்தசனங்கள் தந்தம்முடைய பாசத்தினின்றிரண்டு நிழலெழுந்தாற்போலவும் நெற்றியிலேவிளங்கும் பெரியதிருவாணி யுத்திரத்திருநாளைத் துவசாரோகணத்தை யானந்தமாக நடத்தி முடித்தார்கள்—எ-று. (௩௫)

அருணற்புரவலனெதிர்முறகதைமுனியறைவானொருநிருதனைவேற
கிரணத்திறல்கருவிருளிற்றாவரவிகலானெனவெறிகயிறுலே [ற்
மரணத்தினையுறவருணற்கதுபழிவழியாயொருகடிவடிவாகிச
சரணத்திருகரம்விரவுகளொடுசந்தித்திடுநெறிபந்தித்து.

இ-ள். அருள்சிறந்த நல்ல இரணியவன்மச சக்கரவர்த்திக்கு வியாக்கிரபாதர் பூர்வகதையொன்று அருக்கரக்கபாரா ஒரு நிசாசரனைவெல்லும்படிக்கு யுத்தஞ்செய்து வெல்லுமுபாயங்கற்பிக்க இராத்திரி இருளிலே வருணகுருவாகக் கபடவேடத்தைக்கொண்டு மாற்றானவந்தானென்று எறியப்பட்ட பாசத்தினாலே குருக்கள்மரணத்தைப்பொருந்தவருணனுக்கு அந்தக்குருநாசமான பிரமகத்திபாமான பழியொருபசாசுரூபமாகிக் கையையுங்காலையுங்கட்டிக்கழுத்திலேயேற்றிட்டு முழங்கால் முழங்கை தலையெலாங்கூட்டி யொன்றோடொன்று சந்திக்கக் குண்டுகட்டாகக்கழலாமற்கட்டி—எ-று. (௩௬)

காரார்கடலிடைநெடுநாளிடும்பிடாகடிவாரொருவரின்முடியாதாய்
நீராயினபெறலரிதாயமழைவிழநினையாதலமரநிலன்வானோர்
வீராமடவரலருகாநடமிடுவிர்காவிளைவிரிதருகொன்றைத்
தாராவருணனதுயாபாதகவிடாதவிராயெனநனிதொழுதார்கள்.

இ-ள். கருமைபொருந்தின நடுக்கடலிலே கட்டுடனே கொண்டுபோயப்போட நெடுநாளாகவருந்துந்துக்கமாகிய இந்தப்பாசத்தைநீக்கும்படியொருத்தராலுமுடியாதாகி மழைபெய்தற்கு நினைவுமாறு வருணன்மோகித்துக்கிடக்கத்தண்ணீரொன்பதுகிடையாமல் நிலத்திலுள்ளோரும், வானிலுள்ளோரும், புரமெரித்தவீரனை சத்தியிடத்திலே பிரியத்தையுடையவனை கூத்தாடவல்ல சதுரனை மணம்விரிந்தகொன்றைமாலையுடையவனை வருணனுடைய மகாபாதகமான துக்கத்தைநீக்கி யருளுவாயென்று மிகுதியாகத்துதித்து நமஸ்கரித்து வேண்டிக்கொண்டார்கள்.—எ-று. (௩௭)

தேசிற்பொலிபொதுவிறையற்புதனெனுவிசேறிநற்கடலெதிர்திகழ்வற
பாசத்தளையறவருளசசலபதிபரவிந்திமதிதுபடிவுற்றே [றுப்
ராசற்றுயர்கதியடையக்கடவுளுமனுகப்பெறவாமதுபெற்றான்
மாசிக்குருமகமெனமற்றதுதகமலிபொற்கொடியதுபொலிவித்தார்.

இ-ள். எல்லாப்பிரகாசத்திலு மேலானபிரகாசத்தையுடைய சிதம்பரத்திலே பரிபூரணராயிருக்கிற அற்புதரான சிதம்பரமூர்த்தியாரவாரம்பொருந்தின நல்லகடலுக்கெதிரே யெழுந்தருளிப் பாசபந்தமறும்படி கடாட்சித்தருள வருணனானவன் மிகவுந்துதித்து இந்தநாளிலே யாரொருவரிந்தத்துறையிலே ஸ்நானஞ்செய்கிறார்களோ அவர்கள் பந்தபாசநீங்கிப் பரமுத்திபெறவுந் தம்பிரானாவந்து திருக்கண்சாத்தியருளவும் வரம்பெற்றான் அத்மாசித் திருமகத்திலேயாயிருக்குமென்று வியாக்கிரபாதர்சொல்ல மாசிமகத்திருநாட்பொருந்த விதிப்படியிலேவிளங்கக் கொடியேற்றுவித்தார்கள்—

எத்தன்மையினலமுய்க்குஞ்சலபதியிறைசேர்தரவரமுறுநாளோர்
பத்தொன்பதுவிழவுய்க்கரும்படி நளியயிலுங்கயமுகனயிலுந்தேன்
மொய்த்தங்கொளிரகனியப்பமபயறவன் முதலாயினபலவுநவாவாழ்
நித்தம்பொலிவிழவத்தன்றரமிகநெருநசார்கறைவுறநைந்தசார்கள்.

இ-ள். எல்லாபபிரகாசத்திலுஞ் சுகபபிராப்த்தி பெற்றவருணன் தம்பிரானார் கடற்கரைக்கு எழுந்தருள வரம் பெற்றநாள் இருபதென்ன முன்னேதிருநாள் விக்கினம் வராமல் நடப்பதற்கு மதம்பொருந்தினயானைமுகத்தையுடைய விக்கினேசுவரருக்கு அமுதுசெய்யத்தக்கதான தேன் பலவன்னங்களையுடைய எண்ணிறந்தபழம் திருப்பணியாரம் பயறு அவல்முதலாயுள்ள பதார்த்தங்களை யமுது செய்யப்பண்ணி நித்தியம் பெருவாழ்வுமிக்க திருநாட்பவனி தம்பிரானெழுந்தருளி யாவர்க்குங் காட்சி கொடுத்தருளக் கண்டோர் யாவரும் நீராளமாக நெஞ்சங்கரைந்து தம்மையிழந்தனெண்ணிறந்தபேர்களுருகினார்கள்—எ-று. (௩௯)

கண்ணாயிரமுடையவன்மாதவன்மலிகமலாலயன்முதலெனலாகும்
விண்ணுடையவர்வடநிடணிமுலைவிடவாள்விழியுடைமடவாரா
றெண்ணாயிரமுனிகணநாதருமணமயிசைநாரதரணியெனையோரிம்
மண்ணுளபவருடனண்ணுவளர்திருமன்றுவருள்புரியென்றார்கள்.

இ-ள். இந்திரன் விஷ்ணு மிருந்தகமலாசனன் முதலெண்ணத்தக்க தேவலோகத்திலுள்ளவர்கள் எல்லோரும் கச்சுவிடாத வாபரணம் பொருந்தின முலைகளையும்விடமும் வாளுமொத்த விழிகளையுமுடைய தெய்வமாதர்கள் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகள் கணநாதர்களும் வேதங்களிசைபொருந்தின நாரதர் அணிபொருந்தின ஒழிந்த தெய்வரிஷிகள் இந்தப்பூமியில் மனுஷருடனே கூடிக்கொண்டு ஞான சேயமிருந்த சிதம்பரநாதனே எங்களையும் கடாட்சித்தருளென்று வேண்டிக்கொண்டார்கள்—எ-று. (௪௦)

பநழும்பவனிகளகமின்புறுநெறிபுனிதன்றரவிழிபுனல்கொண்டிட்
டிகழும்பாகதியெனவந்தரனதெழுசசிக்கமார்பழிச்சிக்கைத்
திகழஞ்சலியொடுமிகுமங்கலவணிசெய்வித்தலர்தடமேவிசசே
ரக்மங்ககறரவமுதந்தருகுழியாடிக்கடல்வழிசோடித்தார்.

இ-ள். எல்லாருந் தோத்திரம் பண்ணப்பட்ட திருப்பவனியின் மனங்களி கூருமாறு அநாதி சுத்தராயிருக்கிற சிதம்பரமூர்த்தி தந்தருள்விழி நீர்த்தாரைகொண்டு திருட்டி தோஷமான பரமசுகமங்கில்லாதபடியினாலே முத்தாத் மாக்களாலே பரகதியிகழப்படுமென்று தேவர்களெல்லா மிங்கேவந்து பரமாநந்தமூர்த்தியுடையதிருவெழுச்சிக்குப் பிரீதராயத் தோத்திரஞ்செய்து அஞ்சலியத்தத்துடனே மிகுந்த மங்கலாத்தமான பதார்த்தங்களைக் கூட்டித் திருவீதிப்பெருவழியைப் பொருந்தின பாவங்களைப் போக்குகிற அவ்விரதமானதீர்த்தசலங்களிலேஸ்நானம்பண்ணிக் கடலுளெழுந்தருளுகிறவழியை மங்கலமாகக் கோடித்தார்கள்—எ-று. (சக)

ஆனைத்திரள்கடலடையககருமுகிலணிபிறபொலிவுறவரவஞ்சோ
சேனைத்தொகைநதியோதத்தினுமிசை திகழப்புயலுயிலபயிருழைக
கானத்தெழுமெழுகாலுய்த்தெனவிழு கைதைத்துகளவனையெய்தக
குத், தேனக்கனவனமானப்பொழிமழை சேரும்வண்கைதருதிருவீதி.

இ-ள். திருப்பவனி சேவித்து முன்னே சென்ற யானை யணிகடலுக்குள்ளே அநேகந்தூரஞ்சென்ற வளவில் கடலிலே படிகிற மேகபாதியிலும் பெருத்த காட்சியுண்டாக ஆபபரவம்பொருந்தின பதாதி சமுத்திரத்திலே சமுகமாகச் செல்லுவது ஆறுகளெல்லா மொருமுகப்படக்கூடி சமுத்திரத்திலே செல்லும் பிரவாகத்தினு மேலிட்டுமுழங்கிச்செல்ல மேகங்கள் நித்திரையைப் பயிலுந்தாழைக்காட்டில் நின்று எழுந்தோறும் எழுந்தோறுந் தள்ளிப் போடுந்தாழைப்பூவின் நீருனது சுரபுன்னைப் பூங்கொத்திலே மேகபரிசத்தினாலே நெகிழ்ந்துவிழுப பூமியிலே தேனுடைந்து விழுந்தாறபோலச சொரியு மிதுசத்தியமாகப் பொழிகிற மழையையொக்க ஆரோடிவாத சேருடும் வருபவைத் தருந்திருவீதி—எ-று (சஉ)

கொத்தார்மலரளிகுலவும்புள்ளொலிகுருமித்திசைதொடுமாவி
ழிமுத்தத், தொத்தார்துதிவளாதொண்டத்திரளொடுசூலப்படைதி
சையடைகாவற, பத்தாயுதவுருவினர்சூழ்படையொடுபயிறாரியுமிக
வுயர்வாரோ, ரித்தாரணியினருடனேவிரவிமுன்னேவறகொடுபுடை
சேவித்தார்.

இ-ள். பூங்கொத்துகளில நிறைந்தவண்டுகளினிசை அங்கிலத்திலுண்டானபக்ஷிகளுடைய ஆரவாரத்துடனேகூடின திக்குகடோறும்ஆநந்தக்கண்ணீராகிய முத்துமாலை நிரம்பின தோத்திரசிகப்பண்ணு மடியார் கூட்டத்துடனேசிவாஸ்திரமுஞ்சிவாஸ்திரத்தைச் சூழுந தேச திக்கிலகாவலாகிய பதசாயுதருபிகளுந்தம்பிராணுக்காச்சூழ்ந்து புறச்காவலாகவரு தொண்ணூற்றெட்டு ஆயுதங்களையுந்தரித்த எண்ணிறந்த சேனையுடனே பொருந்தினவநேசகோடி வாத்தியமிகமுழங்க மேலான சுவர்க்கத்திலுள்ள தேவர்களிதரபூமியிலுள்ள மனுஷருடனே கலந்து அநாதியிலே தங்களுக்குக் காவல்கறபித்தமுறைமையிலே அநந்தராத்நானங்களைக் கைக்கொண்டு சேவித்துவந்தார்கள்

வருமாதெரிபவனெனவான்மிசையெழ வளராவலைதலையினவா
ய்பூத்,தருமாமணிதிமினுரைவாழ்சலசரமலையாவரைபுரைதிரைமோ
திப், பொருமாமிகவிரைதருமாகடலிடைபுளினத்தலைதகுவெளியுற்
றுத், திருமாலறிவருபெருமானிணைவகைதிகழுஞ்சலபதியெதிர்கொ
ண்டான்.

இ-ள். தம்பிரானுர் எழுந்தருளிவருகிற பிரதாபத்தை ஆதரத்துடனே கண்டவர்களைப்போல அசாசமளவாக உடர்ந்துகளித்தெழுந்திருந்து வணங்கினதலையையுடையதாகி முத்துக்கள்அரிய மகத்தான நவரத்தினங்கள் மரக்கலங்கள் நுரை தன்னிடத்தில் வாழுமகரமச்சமுதலான வைகளை யலைத்துத்தள்ளிப்போட்டுமலைகளையொத்த திரைகளினுலே கரையை மோதிப் பொருமாறுபோல மிகவு மார்ப்பரவத்தைத்தருகிற கடற்கரையில் மணற்குன்றின் மேலுண்டானவெளியளவாகச்சென்றேறி விட்டுணுவினுல் தவப்பலத்திலு மறிவரிய தம்பிரானுரொழுந்தருளுகிற சவுபாக்கியத்தின் விரிவைப்பாசநீங்கி விளங்கும் வருணராசனெதிர்கொண்டான்—எ-று. (சச)

கட்டங்கியவொளிதெளியச்சலபதிகாணும்பொழுதிடையடை
துன்பக், கட்டங்கறவருள்சரணங்களிலலை கரமின்புறவிழமழுவும்
பொற், கட்டங்கமுமுடையவன்முன்பொலிமலிகடன்மண்டியவவர்
களுமாயைக், கட்டங்கழிவுறமிருமன்பிறையொடுகெற்றுவெனவருள்
பெற்றுர்கள்.

இ-ள். தன்னிடத்திலே தியானரூபமாயிருக்கிற பிரகாசந் திருட்டிகோசரமாகத்திருமேனிகொண் டெழுந்தருளக்கண்ட வவதரத்திலே வருணன் அந்தராயத்திலே பொருந்தின திரைக்கரங்கள் முன்னுக ஆநந்தத்துடனே நமஸ்கரிக்க குருத்துரோகபாச பந்தத்தைநீக்கியருளிய திருவம்பலமுடைய தம்பிரானுர் ஸ்ரீபாததத்திலே மழுவுந்தேசிட்டமான கட்டங்கமு மாயுதமுமாவுடையதம்பிரானுர் சந்நிதியிலே யாரவாரமிகுத்த சமுத்திரஸ்நானம் பண்ணினபத்தசனங்களும் மாயாபாசபந்த மவ்விடத்திலே யற்றுப் போகிறதிறத்தைப்பொருந்தத்தங்களிடத்தில் தம்பிரானுர்வைத்தருளிய மிகுந்தகாருண்ணியமெங்ஙனமெனில் புனிற்றீற்றுப்பசுப்போலவுந் தாங்களிளங்கன்றுபோலவும்மிகுந்த திருவருளைப்பெற்றுர்கள்—எ-று. (சரு)

குரையார்கடல்குடகரைமேலொளிவளர் குணபாலுளவளனெடுநீள
திரையார்கரமலிகலனுநவமணிதிரண்மா நிதியகிறுகில்சீரை [த்
நரையார்கவரிகள்விரையார்தருமதநறுப்பூநிறைபுனல்கர்ப்பூரம்
வரையார்மதகரிநிரையாதிகளொடுவாழ்பொற்றிருவடிசூழ்விப்ப.

இ-ள். ஆரவாரம் அதிகரித்த கடல்மேற் கரையின்மேல் பிரகாசமிகுத்த கிழ்க்கரையிலுள்ள வளமையுடனே மிகவுநீண்ட திரைக்கரங்களினுலே படகுமுதல்சொங்கிறுன எண்ணிறந்தமரக்கலம் அங்குண்டான நவரத்தினங்கள் விலையில்லாநபட்டு வத்திரங்கள் அகில்சிலைத்துலுண்டான அபூர்வவஸ்துக்கள்

வெண்சாமரங்கள் மணவிய சவ்வாதுமுதலானவைகள் குங்குமப்பூ பனிநீர்ச்செம்புகள் கர்ப்பூரவகை மலைகளிலுயர்ந்திருக்கிற மத்தகசங்கள்முதலான பின்னும் எண்ணிறந்த வகைகளெடுத்துக் கொண்டுவந்து எல்லார்க்கும் வாழ்வுகொடுத்தருளும் செங்கமலப் பொற்பாதத்திலே காணிக்கையிட்டான்.

பாசத்தளையறுதுறையுற்றிமையவர்படியிற்படிபவருடனுடிப்
பூசற்றொழில்புரிதிரைநற்பொலிவுயர்புளினத்தலைதருவெளியுற்றுத்
தேசத்தவரொலிகடலிற்பொலியொலிசின்னந்தொலியிசைமன்னச்சீர்
வாசப்பொழிலிடையாறிக்கணவர்கள்வாறேறொடுகழிவழிவந்தார்.

இ-ள். பாசமறுத்தான் துறையிலேயெழுந்தருளித் தேவாகள் பூமியிற் பொருந்தின மனிதரிவர்களுடனே திருமஞ்சனஞ்செய்தருளி இருந்து இந்தத் தேசத்தில் மானிடராக ஒன்றாககொனறுமாறிப் பொருநதொழிலைச்செய்யுந திரைகள் மிகவிளங்கியோங்கு மணற்குன்றின்மேல் நல்லவெளியிலேயெழுந்தருளி இருந்து இநதத்தேசத்தில் மனுஷாவாக்கிறெழு மகாவோசை சமுத்திரத்தில் மிகுந்தவோசை திருச்சின்னங்களினோசை மகரந்தங்களைப்பொருந்த இலச்சுமிகரமான மணவியபூங்காவின்நடுநிழலிலேஅரக்கர் கணநாதர்கள் தேவர்கள் சேவித்துவரக் கழிகள்பொருநதும் வழியனவாக வெழுந்தருளினார்—எ-று. (சுஎ)

அன்றன்றலைகடல்வளனங்கானிலபடிகொண்டடியிணைதொழு
தன்பா, வின்றென்றிடவரமென்றும்பெறவரமிறைஞ்சாவெனவினைவுடனெய்தி, மின்றங்கியகழறுதிகொண்டருளொடுவிரவுஞ்சலபதியிடைகொண்டான், புன்றண்கதிர்மதிபுனையும்பரன்மிகு பொன்னம்பலமதனுள்புக்கான்.

இ-ள். அநசத்திவசத்தில் சமுத்திரபாரிசத்தில் பூர்வபதார்த்தங்களளவிறந்தன கொண்டுவந்து கழிச்சுனையிலேதம்பிரானுர் சீர்பாதத்திலே காணிக்கையாகவிட்டு நமஸ்கரித்துத் தேவரீருடையகிருபையினாலே யினிமேல்வருகிற மாசிமகத்துத் திருநக்ஷத்திரங்கள்தோறும் இநதமாசிமகநக்ஷத்திரத்தைப் போல அடியார்களு மியானுமிந்தச் சவுபாக்கியத்தைப் பெறத்தக்கதாகச் சுவாமியே திருவுளம்பற்றி யருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்துவேண்டிக்கொண்ட வரமுமுடனேபெற்றுச் சுத்தபிரகாசம்பொருந்தின ஸ்ரீபாதங்களைத்துதித்து நமஸ்கரித்துத் தம்பிரானுர் அருளினாலே சேவித்துவந்த வருணன்மீண்டுபோனான் குளிர்ந்த பாலசந்திரனையணிந்தருளும் ஞானத்துக்குமேலான நேயமாக சிதம்பரேசுரனுர் பாசாதீதமான ஞானமயமாகிய சிதம்பரத்தில் எழுந்தருளினார்—எ-று. (சுஅ)

என்றென்றிகழ்வறுமாதந்தருதினம்யாவும்புகழ்விழவெழுவாழ்வுற்
றென்றும்புவிமுனியுரகந்தருதவனெளிருங்கனகமதுருவாகி
மூன்றங்கியபுரவலனங்கிகள்வளர்மூவாயிரவர்கடேவாருந்
மன்றங்கியவிறுமன்மகிதொழுதுவாந்தான்விரவிருந்தார்கள்.

இ-ள். இந்தவகையிலே குற்றமற்றமாதங்களிலுந் தினங்களிலும் யாவரு ம்புகழ்கின்ற திருவிழாமுதலியவற்றைநடத்தி மனப்பிரியத்துடனே வாழ்வு பொருந்தும் வியாக்கிரபாதமுனியும் பதஞ்சலிமகாரிஷியும் பிரகாசமான கனகவடிவாகி முன்னேபொருந்தின இரணியவன்மச் சக்கரவர்த்தியும் முத் தீவளர்க்கும் மூவாயிரவர்களும் திவ்வியமான சிதம்பரேசுரர்பொருந்தினக னகசபையைநமஸ்கரித்து நன்மைபொருந்த விருந்தார்கள்—எ-று. (௯௯)

ஈராறுயிருடன்மூவாறமருமெழுத்துப்புகன்முதல்வரியெல்லாந் தாராதாரமெனவுலகோர்பலகலைதருமாவிரணியவருமாமுற் சீரார்தரவருதிருநாள்படிமுதல்சிலநாள்வழிசெல்வமிகநவியக் கூரார்படையினனருளாலரசர்கள்கொண்டாடிடுநெறிகண்டார்கள்.

இ-ள். அகரமுதல் ஒளகாரமீறான பன்னிரண்டுயிரும் ககரமுதல் னகரமீ றான பதினெட்டுமெய்யுமெனச் சொல்லுகின்ற முதலெழுத்துகள்முப்பதுமே காரணமாகஎக்காலமும்கைம்மாறுவேண்டாதுபயன்தருமேகத்தையொப்பாக உலகத்திலுள்ளவர்களுக்கு ஆதாரமாகிப் பலவகைப்பட்ட கலைகளுமுண்டா னதுபோல ஆதியில் இரணியவன்மச்சக்கிரவர்த்தியால் நித்தியநைமித்தியமு தலியவை சிறப்புப்பெறச் சிலநாள்நடந்துவரப் பிற்காலத்தில் கூர்மையுள்ள மழுப்படைதாங்கிய நடேசாதிருவருளால் சோழராசர்கள் திருவருட்செல் வம்பெருகுமாறு அவற்றைவிசேஷமாக யாவருங்கொண்டாடும்படி நடத்தி வந்தனர்கள்—எ-று. (௱)

சொற்றானுமைபொருளானுமிருபொருடணிவாலவருடொரு மாலிப், பொற்றாமரைமலர்விரைசூழ்புனலணிபுலியூர்வளநகர்புகழ் நாமங், கற்றாருரைசெயல் பெற்றார்செவிகொடு கவர்வார்பொருள் விரிபகர்வார்சீ, ருற்றாரிருவினை யற்றார் * மிருபரி வுடையார் திருவ டியடைவாரே.

இ-ள். சொல்உமையாகவும், பொருள் சிவபெருமானாகவும், வேதாகமங் கள்நிச்சயித்தமிருந்தபொருட்டுணிவாதலால் அவர்களிரண்டுபேரநுக்கிரகமு மிந்தநூலிற் குடிகொண்டிருத்தலாற் கனகதாமரைமலரினறுபரிமளஞ்சூழும் தீர்த்தங்கள் பொருந்திய பெரும்பற்றப் புலியூரென்னும் வளப்பத்தையுடைய திருப்படைவீட்டைப்புகழும் பாமாலையைக்கற்றாரும் பாடஞ்சொல்லுஞ் செ யலைப்பெற்றாரும் செவிகொண்டுகேட்பாரும்இப்பொருள்விரிவைச் சொல்வா ரும் செல்வத்தைப்பெறுவார் பாவபுண்ணிய வாதனையினின்றும் நீங்குவார் பரமசிவத்தினிடத்தில்மிகுந்த பத்தியுடையராவார் திருவடியையடைவார்.

---

* மிருபரியுடையாரென்பதற்கு ஆன்மாக்களிடத்தில் அளவில்லாதகரு ணையுடையவராகிய நடேசரெனினுமமையும்.

செடிசேர்பொழிலணிபுலியூர்வளநகர்செல்வம்பெருகுகதிரும ன்றிற், கொடிசேர்விடையினனடிசேரொளிதெளி குறிகூடுகசூழு ம றைசூழ்க. பொடிசேர்வடிவினரடிசேர்முடியினர்புனல்சே ரிருவிழி யினராகி, யடிசேர்பவரடிமுடிசூடிடுநெறி யாள்வானடியவர்வாழ் வாரே.

இ-ள். சிறுசண்பகமுதலிய விருட்சங்கள்தங்கியபொழில்சூழ்ந்தபுலியூர் என்னும் பெருமைபொருந்திய சிவக்ஷேத்திரம்அருட்செல்வத்துடன் ஓங்குக சிற்சபையில் இடபக்கொடியையுடைய நடேசரது ஸ்ரீபாதங்களை யடைதற் கேதுவான சிவஞானத்தைத்தெளிகின்ற சைவசமயமார்க்கம் உலகமெங்கும் பரவுக. திரண்டவைதிகமார்க்கந்தழைக. நீறணிந்தருளும் திருமேனியையு டையவராய்ச் சிற்சபாமத்தியிலாநந்தநிருத்தஞ்செய்யும் நீலகண்ட பரமேசு வரரால் திருவடி தீக்ஷைபெற்றவர்களாகிய ஜீவன்முத்தர்களும் ஆநந்தபாஷ் ப தாரைதாரையாய்ப்பொழியும்விழியினராகித்திருவடிசேர்பவர்பாதங்களைச் சிரசிற்சூடிடும் நெறியாள்வானுக்குரிய மற்றை அடியவர்களும் வாழ்வாராக.

மழைவழங்குகமன்னவனோங்குக
பிழையில்பல்வளனெல்லாம்பிறங்குக
தழைகவஞ்செழுத்தோசைதரையெலாம்
பழையவைதிகசைவம்பரக்கவே.

திருச்சிற்றம்பலம்.

---

## திருவிழாச்சருக்கம்

முற்றிற்று.

ஆக சருக்கம் - கூ - இ - திருவிருத்தம் - ௬கரு.

---

# கோயிற்புராணம்




